# பிரம்ம ஞானம்

"This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams under Their Scheme aid to Publish Religious Books"

ஆக்கியோன் :

**இராம. சாரங்கபாணி**




**அருட்சுடர் பதிப்பகம்**

**35, தம்பு செட்டி சந்து**

(இராயபுரம் காவல் நிலையம் பின்புறம்)

**இராயபுரம், சென்னை-600 013.**

முதற்பதிப்பு : ஜுலை-1994

**விலை : ரூ. 30-00**

---

| | | |
|---|---|---|
| புத்தகத்தின் பெயர் | : | பிரம்ம ஞானம் |
| Tittle of Book | : | Bramma Gnanam (Theosophy) |
| மொழி | : | தமிழ் |
| Language | : | Tamil |
| பொருள் | : | வேதாந்தம் |
| Subliect | : | Philosophy |
| ஆசிரியர் | : | இராம. சாரங்கபாணி |
| Author | : | Rama. Sarangapani |
| பிறந்த தேதி | : | 31-7-1926 |
| Date of Birth | : | 31-7-1926 |
| முதற் பதிப்பு | : | ஜுலை, 1994 |
| First Edition | : | July-1994 |
| பதிப்புரிமை | : | ஆசிரியர் |
| Copy Right | : | Author |
| உபயோகித்தத்தாள் | : | மைசூர்வெள்ளைத்தாள் 14.6கி.கி. |
| Paper Used | : | Mysore White Printing 14.6 kg |
| உபயோகித்த அச்சுஎழுத்து | : | பத்து புள்ளி |
| Printing Type used | : | 10 Point |
| புத்தக அளவு | : | 14×21.5cm (5½"8½"-டெம்மி⅛) |
| Size of Book | : | 14×21,5cm (Demy⅛) |
| மொத்த பக்கங்கள் | : | xxiv + 168 = 192 |
| No of pages | : | xxiv + 168 = 192 |
| அட்டைப்பட வடிவமைப்பு | : | இராம. சாரங்கபாணி |
| Wrapper design | : | Rama. Sarangapani |
| அச்சிட்ட பிரதிகள் | : | 1000 |
| No. of copies | : | 1000 |
| விலை | : | ரூ. 30-00 |
| Price | : | Rs. 30-00 |
| பதிப்பகத்தார் | : | இராம. சாரங்கபாணி, அருட்சுடர் பதிப்பகம், 35, தம்புசெட்டி சந்து, இராயபுரம், சென்னை-600 013 |
| Publisher | : | Rama. Sarangapani, Arutchudar Pathippagam 35, Thambu Chetty Lane, Royapuram, Madras-13. |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம், 29/2 S. P. சன்னதி தெரு, சென்னை-600 014 |
| Printer | : | Moovendhar Achagam, 29/2, S. P. Sannathi St, Madras-600 014 |
| அட்டைபடம்அச்சிட்டோர் | : | ஹைடெக் ஆப்செட் பிரஸ், சென்னை-14 |
| Wrapper printed | : | HI. Tech Offset Prss, Madras-14 |

இனிதே மொழிக

எல்லாம் பெறுக

# பதிப்புரை

அகக்கரணம், புறக்கரணங்களின் செயல்பாடுகள் (வாசனாதி) ஒழுங்காக இருக்க வேண்டுமென்றால் சொல்லாலும் செயலாலும், சிந்தனையினாலும் மற்றவர்களுக்கு யாதொரு தீங்கு செய்யாமலும் அன்பு, அருள், கருணையுடன் மனிதநேயத்துடன் எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க நல்லிணக்கத்துடன் ஜீவர்கள் தங்களது செயல்முறைகளை (கர்மங்கள்) மேற்கொள்ளவேண்டும். இதுவே அறிவு (வித்து) இயலாகும்.

ஜீவர்களுக்கு இறைவன் அறிவு தந்தருளினாலும் உயிரால் (ஆன்மா) எதனையும் எளிதில் அடைந்துவிட முடியாது. வினைமாசுகள் நீங்கிய காலத்து தான் தன்னையும் ஆன்மாவையும் அறியும் திறனை இறைவன் தருகிறான் என்பன போன்ற வேதாந்த சிந்தாந்த தத்துவங்கள் 'பிரம்மஞானம்' என்ற இந்நூல் மூலம் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

நிலம், நீர் தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன் உயிர் (ஆன்மா) ஆகிய எண் வகையான (அட்டமூர்த்தம்) திருமேனிகள் பரம்பொருளுக்கு உரித்ததாகும் என்ற வேதாந்த சாரத்தின் அடிப்படையில் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களின் எழிலுருவை இந்நூலுக்கு அட்டைப் படமாக்கித் தந்திருக்கும் எங்களது முயற்சி, வேதாந்த விஷயங்களைக் கொண்டு வெளிவந்துள்ள இந்திய நூற்பதிப்புகளில் இதுவரை எவரும் வெளியிடாத அமைப்புடன் விளங்கும் அட்டைப்படம் இந்நூலுக்கு மேலும் அழகூட்டியுள்ளது.

இந்நூலினை மனமுவந்து சிறப்பித்து அணிந்துரை வழங்கியுள்ள அருளாளர்கள் அனைவருக்கும் எங்களது நன்றி கலந்த வணக்கத்தை சென்னி சாய்த்துத்தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இந்நூலினை உரிய நேரத்தில் அச்சடித்து தந்த மூவேந்தர் அச்சகத்தார்க்கும், அழகிய அட்டைப்படத்தைஅச்சடித்து தந்த ஹைடெக் ஆப்செட் அச்சகத்தார்க்கும் எங்களது நன்றி கலந்த வணக்கம் உரித்தாகுக.

உண்மைப் பேரறிவாகிப் பிரம்மஞானம் பற்றி அறிய விருப்பம் கொண்டு இந்நூலை நுகரும் மெய்யன்பர்களுக்கு 'ஞானயக்ஞும்' செய்ய இந்நூலை ஒரு கையேடாகக் காணிக்கை யாக்கியுள்ளோம்.

அருட்சுடர் பதிப்பகம்

ஓம்
திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ் சோதி
தனிப்பெருங் கருணை அருட்பெருஞ் சோதி

# அணிந்துரை

## தவத்திரு தேமொழியார் சுவாமிகள்

அருள்ஞானப் பெருவெளி அறக்கட்டளை
நடராசபுரம், புக்கத்துறை அஞ்சல், செங்கல்பட்டு

திருமிகு இராம. சாரங்கபாணி அவர்களால் ஆக்கப்பட்ட ''பிரம்மஞானம்'' என்னும் இந்நூலைக் காணும் பேறு எமக்குக் கிட்டியது. வேதாந்த, சித்தாந்தத்தைப் பொதுநோக்கில் காணும் இவரது 'சமரசநோக்கு' பாராட்டுக்குரியது. பல நூல்களை மேற்கோளாக எடுத்தாண்டிருப்பது இவர்தம் பன்னூல் புலமையை நன்கு வெளிப்படுத்துகிறது. பயன் கொள்வார் பயன் பெறும் வகையில் பல நல்ல கருத்துகளை 'பிரம்மஞானம்' நூலில் வழங்கியுள்ளார் நல்லன்பர் திருமிகு இராம. சாரங்கபாணி அவர்கள்.

மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் எந்நாளும் இன்பத்தை நாடியே இயங்குகின்றனர். எப்பொழுதும் அல்லல்களிலிருந்து விடுபடவே விரும்புகின்றனர். ஆனால் அடிப்படை உண்மைகளை அறியாததால் உண்மை இன்பம்—எது என்று முடிவு கட்ட முடியாமல் அருளியலை மறந்து உலகியலிலேயே நின்று விடுகின்றனர். சிந்திக்கும் திறனை வளர்த்துக் கொள்ளாமல், இயந்திர வாழ்க்கைக்கு அடிமை பூண்டு அல்லல்பட்டு ஆற்றாமையால் அவதிப்பட்டுக் கொண்டுள்ளனர்.

மனித இனம் மேன்மையுற பல அருளாளர்கள் நம்மிடையே தோன்றி அரிய பல கருத்துகளை வழங்கியுள்ளனர். அனைத்துப் பெருமக்களும் அல்லல் அகலவும் ஆனந்தம் பெருகவுமே வழிவகுத்துள்ளனர். அவர்களின் அடிச்சுவடை ஒட்டி வேதாந்தக் கருத்துகளையும்; அதைச் சார்ந்த உபநிடத விளக்கங்களையும் சைவ சித்தாந்தத்தின் சாரமாய்த் திகழும் திருக்குறளையும், திருமந்திரத்தையும், வள்ளல் பெருமான் அருளிய திருவருட்பாவையும், மணிவாசகப் பெருமானையும், தாயுமான சுவாமிகளையும் அரிதின் முயன்று படித்து அதிலுள்ள சில செய்திகளை உங்களுக்

குத் தரவே "பிரம்மஞானம்" நூலாக உங்கள் கரங்களில் திகழ்கிறது.

அண்டிவாழ்வதால் அண்டம் எனவும், அதிலிருந்து பிண்டுவந்த தால் பிண்டம் எனவும் கருதப்படும் "அண்டத்தையும் பிண்டத்தை"யுமே முதலில் எடுத்துக் கொண்ட முறைமை பாராட்டத்தக்கது. சார்ந்த உலகைக் கொண்டுதானே அனுபவ மும் அதனால் தெளிவையும் பெறமுடியும்! அண்டத்திலுள்ள அனைத்தும் பிண்டத்திலும் உள்ளது என்று கூறும் இந்நூலா சிரியர் "ஒழுக்கமான தூய வாழ்க்கையை மேற்கொண்டு, சொல் லாலும் செயலாலும் சிந்தனையாலும்மற்றவர்களுக்கு யாதொரு தீங்கு செய்யாமலும், அன்பு—அருள்—கருணையுடன் செயல் முறைகளை (கர்மாக்களை) மேற்கொள்வது தவநிலை முயற்சி யாகும். தவம் என்றால் சந்நியாசம் பெற்றுக் காடு, மலை என்று சுற்றித் திரிந்து தவப் பயிற்சி மேற்கொள்ள வேண்டு மென்று நினைக்க வேண்டாம்" என்று தெளிவூட்டுகின்றார். சுருங்கக் கூறின், புன்மைகளைத் தவிர்த்தலே தவம் 'வந்த துன்பத்தைத் தாங்குதலும், எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமையே தவம்' என்பதை உணரவைக்கிறார்.

அடுத்து மனிதனை தெய்வநிலைக்கு உயர்த்த பெருமுயற்சி எடுத்துள்ளார். கீதையின் கருத்துக்களையும் திருக்குறள் சிந்தனைகளையும் மிக அழகாகக் கையாண்டுள்ளது மக்களுக்குப் பெரும் பயனை விளைவிப்பதாய் உள்ளது. கடைப்பிடிப்போர் நிச்சயம் உயரலாம் என்பது வெளியிடைமலை.

"பிரம்மஞானம்" எனும் தலைப்பில் பல உபநிடதக் கருத்து களை அள்ளி வழங்கும் இவர் திருமூலரையும், திருவள்ளுவரை யும்,ஆதிசங்கரரையும் தாயுமானவரையும், வள்ளல்பெருமானை யும் சற்றும் மறந்தாரில்லை. "பணிவும் தொண்டு உள்ளமும் இல்லாதவரது பக்தி தகுதியற்ற பக்தி நிலையேயாகும்" என பக்தியின் அடித்தளமான கருத்துகளைப் படிப்போர் மனத்தில் அழகாகப் பதிக்கிறார்.

முழுக்க முழுக்க திருமூலநாயனாரின் அருட்சிந்தனைகளையே ஆதாரமாக வைத்து அட்டாங்க யோகத்தை "இராஜயோகம்" எனும் தலைப்பில் வழங்கியுள்ளது சிந்தனையாளர்களுக்கு நல் விருந்தாய் அமையும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

பதஞ்சலியோக சூத்திரத்தின் நான்கு பாதங்களை அப் படியே அளித்துள்ளார். விபூதிபாதத்தின் 17-ஆவது சூத்திரத் துக்கு விளக்கம் கொடுக்கும்போது குழந்தை தனது தாயை "அம்மா" என்று அழைக்கும் கனிவுடன் கூடிய குரலோசை,

நோயாளி வலியினால் அவதியுறும்போது "அம்மா" என்று முனங்கி எழுப்பும் குரலோசை, எதிரியால் தாக்கப்படும் ஒருவன் அதிர்ந்து பயந்து "அம்மா" என்று எழுப்பும் குரலோசைகளில், "அம்மா" என்ற சொல்லிலிருந்து எழும் அதிர்வுகள் மூலம், நமது புலனுகர்ச்சியின் துணையால் நமது அறிவுக்கு நாம் செவி மடுக்கும் "அம்மா" என்ற குரலோசையின் உண்மைப் பொருள் புலனாகிறது" என்ற வாழ்வியலை ஒட்டிய செய்திகள் எவரும் ஒத்துக் கொள்ளக் கூடியவையாய் உள்ளன.

ஆதிசங்கரரின் "ஆத்மபோதம்" முழுமையாக அறுபத்து யெட்டு சுலோகங்களும் அப்படியே எழுதப்பட்டுள்ளது. ஆன்ம தத்துவத்தை அறிவதற்கு இது பெரிதும் பயன்படும்.

பகவத்கீதையின் "தியான யோகத்தை" அப்படியே தந்துள்ளது கீதையைப் போற்றிப் பாதுகாப்போர்க்குப் பெரு நிறைவைத் தரும்.

"அன்றும் இன்றும் என்றும் உள்ளதுமான உண்மைப் பொருளாகிய பிரம்மம் சத்தியமானதால், நாமும் அந்த உண்மைப் பொருளாகிய பிரம்மத்தை உறுதியாகத் தெரிந்து கொள்ள முடியும்" என்ற பெருநம்பிக்கையுடன் (ஓம்தத்சத்) முடித்துள்ளது, நம் நம்பிக்கையை மேலும் வலுப்படுத்துகிறது.

அடியார்களிடத்துக் காட்டும் உண்மைப் பணிவினாலும், பேதமற்று உயிர்களுக்குச் செய்யும் தூய தொண்டாலும் பிரம்மத்தைத்தெளிவுற உணரலாம் பிரம்மத்தைக்காணுதலும் எளிது. கண்ணப்பரின் தூய அன்பு இருந்தால், பிரம்மத்தில் ஒன்றுதலும் எளிதே. திருநீலகண்ட நாயனாரின் உள்ள உறுதி இருந்தால் பிரம்மத்தில் ஒன்றுதலும் எளிதே என்று கூறி இந்நூலாசிரியரான எமது அன்புக்கு உரியவராய்த் திகழும் திருமிகு இராம. சாரங்க பாணியின் பெருமுயற்சியையும் தளரா ஊக்கத்தையும் வெகுவாகப் பாராட்டி மகிழ்கின்றோம், வாழ்த்துகின்றோம். நலம் பல பெற்று வளமுடன் வாழ எல்லாம் வல்ல பரம் பொருளின் பாதகமலங்களை மனத்தில் இருத்துகின்றோம். அறிஞர் பெருமக்கள் இவர்தம் அரிய முயற்சிக்கு நல்லூக்கம் அளித்து இந்நூலை வாங்கிப் பயன் அடையுமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

அன்புடன்

**தேமொழியார்**

2-5-1994 அருள்ஞானப் பெருவெளி அறக்கட்டளை

நடராசபுரம்,
புக்கத்துறை அஞ்சல்
செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம்

பால முருகனடிமை

அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் 632517
வ. ஆ. அ. மாவட்டம், தமிழ்நாடு.

அன்புடையீர், அருளாசி

பிரம்மஞானம் என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ள திரு இராம. சாரங்கபாணி படித்தும் கேட்டும் அறிந்த நூல்களின் ஒரு தொகுப்பாகவே எழுதியுள்ளேன் என்று பெருமைப் படுகிறார். எனவே அவர் பாராட்டுக்குரியவரே!

தாம் படித்தறிந்த இராசயோகம், பதஞ்சலி யோகசூத்திரம், ஆத்மபோதம், தியான யோகம் போன்ற பகவத்கீதையின் சில பகுதிகளை அப்படியே தொகுத்துத் தந்திருக்கிறார்.

அறிவு சொரூபமானது ஜீவான்மா. ஜீவான்மாவின் பேரறி வாகிய ஞான சொரூபமே பிரம்மம்; மனத்தை அடக்குதல், மனத்தை ஆன்மாவில் அடக்குதல்—இவ்வாறே பல தொடர்கள் தொகுப்புநூலில் ஆளப்படுகின்றன. திரு. இராம. சாரங்கபாணி அவர்கள் அவற்றை அப்படியே ஆளுகிறார். இந்த நூலில் கூறப் பட்டுள்ள ஞானக்கருத்துக்கள் மக்களுக்குத் தேவை என்ற அளவில் இவர் தொகுத்துத் தருகிறார். ஆனால் இவருடைய சொந்த அனுபவமான ஞானப்பேறு பற்றி இதில் ஒன்றும் காணப்படவில்லை.

தொடர்களுக்கு விளக்கங்கள் தேவை மனத்தை அடக்கு என்று சொல்லிவிட்டால் கேட்ட ஒருவன் மனம் என்றால் என்ன வென்றே தெரியாத நிலையில், எப்படி அதை அடக்குவான்?

அறிவுக்கும் பேரறிவுக்கும் என்ன வேறுபாடு? அறிவு என்றால் என்ன? பேரறிவு என்றால் என்ன? மனம் என்றால் என்னவென்றே தெரியாதவன் அம்மனத்தை எப்படி அடக்க இயலும். எங்கே அடங்கும். அடக்குவது என்றால் என்ன? ஆன்மா என்பது என்ன? அத்தகைய விளக்கங்கள் இக்காலத் திற்குத் தேவை.

ஆசிரியர் தமிழ் நூல்கள், வடமொழி நூல்கள் இரண்டிலும் பயிற்சி உடையவராக விளங்குகிறார். தான் சிறந்ததாகக் கருதும் நூல்களைத் தொகுத்து மனிதனும் தெய்வமாக வாழத் தந்திருக்கிறார். ஆனால் நூலைப் படித்து விட்டால் தெய்வமாக வாழமுடியாது. பொருளறியாது பயின்றாலும் தெய்வமாக முடியாது. படித்தவர்கள் படிந்தவர்கள் ஆனார் அல்லர்.

இந்த நூல் ஓர் அழகிய வண்ணமலர்தான். ஐயமில்லை. ஆசிரியரின் தெளிந்த அனுபவ ஞானமணமும் சேர்ந்திருந்தால் மிகவும் சிறப்பாக இருக்கும்; இது எமது ஏக்கம்.

எனினும் இக்காலத்தில் இந்த அரிய தொகுப்பு நூலைத் துணிவுடன் தமிழுலகத்துக்கு அளித்த அவரை உள்ளங்கசிந்து பாராட்டுகிறேன். அவர் இறை ஞானம் பெற்று ஆமயம் நீங்கி அம்மயமாக வாழ எல்லாம் வல்ல எந்தை அருளாளன் இக் குன்றுறை பால முருகன் திருவருள் புரிவானாக.

இறைநலம் நிரம்பி இன்ப அன்பு பெருகிட வாழ்த்தும்.

16-5-1994 — பாலமுருகனடிமை

**சச்சிதானந்தா**
அருள் திரு கமலக்கண்ணி அம்மன் திருக்கோயில்
கலவை-632 506. (வ.ஆ.அ.மா)

# அணிந்துரை

'உன் சொரூபம் சத்து-சித்து-ஆனந்தம் நித்தியம்-பூரணம் என்ற ஐந்து இலட்சியங்களை சொரூப குணங்களாக பெற்றுள்ள ஆன்மாவாம்.' அதுதான் உன் உண்மையான சொரூபம் என்று அறிவது வீடாம். ஒருவன் தான் யாரென அறிய முற்படுவானா யின் அவன் தத்துவ சோதனையில் 'நான் பிரம்ம வடிவனான ஆத்மா' என்று அறிவதே உண்மையான ஞானமாகும். பிரம்மத் தைப் பற்றிய ஞானம் பிரம்ம ஞானமாகும்.

நீ ஜீவனன்று. நீ நித்ய சொரூபன் என்று அறிவிப்பதே வேதங்களின் நோக்கமாக இருக்கிறது. வேதங்கள் ஆத்மாவை மோட்ச வடிவமென போதிக்கின்றன. அந்த ஆத்மா பிறப்பது மில்லை; இறப்பதுமில்லை.

அது உபாதி பேதத்தால் உடம்பை தானாக அபிமானிக்கும் போது ஜீவனாகிறது. அபிமானிக்காத போது பிரம்மமாக விளங்குகிறது.

ஜீவனுடைய உண்மை சொரூபம் தெரிவித்து அதுவே பரிபூரண பிரமமெனவும், அந்த பிரம்ம ஐக்கியத்தில் மனித வர்க்கம் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு மனிதன் தெய்வமாக இந்த நூல் வழிகாட்டியாக அமையும் என்பது திண்ணம்.

எல்லா இன்பங்களும் ஆத்மாவில் சங்கமிக்கின்றன. ஆத்மாவைவிட அதி உன்னதமான இன்பம் இவ்வுலகில் வேறு எதுவும் இல்லை என்ற வேதத்தின் நோக்கத்தை இந்த நூல் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

மனித வர்க்கம் முழுமையும் அன்புடனும் சமாதானத் துடனும், தெய்வீகத் தன்மையுடனும் வாழ அருட்கவி

இராம சாரங்கபாணி ஐயா ஏக்கங்கொண்டுள்ளார். அதற்கான வழிமுறைகளைத்தான் தெளிவாக இந்த நூலில் எழுதியுள்ளார்.

ஆசிரியர் இந்த நூலில் எதையும் மறைக்க விரும்பவில்லை. எதையும் மாற்றியும் எழுதவில்லை. உள்ளதை உள்ளபடி எழுதியுள்ளார். அவர் எதிர் வரும் விமர்சனங்களைக் கண்டு அஞ்சுபவராகத் தெரியவில்லை அவர் அஞ்சா நெஞ்சத்திற்குச் சான்றாக பிரம்மஞானம் நூலின் பக்கம் 68, கீதை சுலோகம் 13. ''ஒவ்வொரு வருணத்தின் வெவ்வேறு குணங்களுக்கும் கர்மாக்களுக்கும் இணங்க நாலு வர்ணங்களை நான் சிருஷ்டித்துள்ளேன். நான் அவற்றின் கர்த்தா. எனவே நான் மாறுதலற்றவன். ஆதலால் நான் கர்த்தா அல்ல என்பதை அறிந்து கொள். என்ற சுலோகத்துக்கு ஆசிரியர் மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு மகாத்மாகாந்தி, சித்பவானந்தர். ஸ்ரீமகாதேவ தேசாய் போன்றோர் எழுதியுள்ளதை மேற்கோள் காட்டியுள்ளார்கள்.

''சாதி பாகுபாடு இன்றி ஒவ்வொருவரும் தருமத்தைக் கடைபிடித்து சமுதாய ஒழுக்கத்தையும் கடமைகளையும் செய்து முடிக்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறோம்'' என்று எதிர் கால இந்தியாவிற்கு ஏற்ற தத்துவமாக எழுதியுள்ள வரிகள் ஆசிரியரின் தீர்க்க தரிசனத்திற்கும், அனுபவ ஞானத்திற்கும் அத்தாட்சி ஆகும்.

''தானும் உழைத்து மற்றவர்களும் உழைத்து ஒவ்வொருவரும் மனம் ஒப்பி உதவி கொள்ளும் மனிதத் தன்மைதான் சுதர்மமாகும்.'' இந்த சுதர்மத்தைப் பற்றி சொல்லும் போது தான் கீதை நான்கு வர்ணங்களைப் பற்றிப் பேசுகிறது.

இந்த நான்கு வர்ணங்களும் (தர்மங்களும்) மனிதன் சமுதாய நலத்திற்காகவும், மேம்பாட்டிற்காகவும், சுயபாதுகாப்பிற்காகவும், அனைத்து ஆத்மாக்களின் சீரிய வாழ்விற்காக மட்டுமே செய்ய வேண்டும். இதில் உயர்வு தாழ்வு கற்பித்தல் கூடாது. அனைத்தும் சமம். இதைத்தான் பாரதியாரும் 'நாலு வகுப்பும் இங்கு ஒன்றே. இந்த நான்கினில் ஒன்று குறைந்தால் வேலை தவறிச் சிதைந்தே-செத்து வீழ்ந்திடும் மனிதச் சாதி.' என்று எச்சரிக்கிறார்.

மனிதன் வாழும் போதே நேருக்கு நேராக வாழ்க்கையைத் தரிசிக்க வேண்டும். அதுதான் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை நெறி. மனிதன் வாழும் போதே ஞானியாக, ஜீவன் முக்தனாக, பிரம்ம சொரூபியாக வாழவேண்டும் என்ற உயரிய இலட்சிய வேட்கையில் அருட்கவி இராம. சாரங்கபாணி ஐயா அவர்கள் இந்த அரும்பெரும் நூலை ஆக்கி அளித்துள்ளார்கள்.

தான் கற்ற கடின நடையுள்ள நூல்களை எல்லாம் சிரமம் பாராது கற்று, தேர்ந்து, தெளிந்து எளிமையான மொழியில், ஏற்றந்தரும் வகையில் இனிய எளிய நடையில் முத்து கோத்தாற் போல கருத்துக்களைக் கற்பவர்கள் ஆர்வத்துடன் கற்க வேண்டும் என்ற நோக்கத்தில் தொகுத்துள்ளார்கள் என்று நினைக்கிறேன். சமீபத்தில் இவ்வளவு சிறப்பான எளிமையான, முழுமையான ஆன்மீக நூல் வெளிவரவில்லை என்றே சொல்ல லாம். அவர் இந்த நூலை உருவாக்க எடுத்துக் கொண்ட பெரு முயற்சியைப் பாராட்டியே தீர வேண்டும்.

**இந்த நூல் ஆன்மீக தாகம் உள்ளவர்களுக்கு வற்றாத மணற் கேணி.**

**இந்த நூல் ஞானப்பசி உள்ளவர்களுக்கு ஞானத்தை அள்ளித் தரும் அட்சயப் பாத்திரம்.**

**இந்த நூல் ஆன்மீக வாழ்க்கை வாழ நினைப்பவர்களுக்குப் பாதுகாப்பான வழிகாட்டி.**

**இந்த நூல் ஞானக்கல்வி கற்பவர்களுக்குக் கலைக்களஞ்சியம்.**

அருட்கவி இராம. சாரங்கபாணி ஐயா அவர்கள் தான் அறிந்ததை இந்த நூலில் விரிவாக எழுதியுள்ளார்கள். அடுத்து தான் பெற்ற ஆன்மீக அனுபவங்களை எழுதுவார் என்று நம்புகிறேன்.

அருட்கவி இராம. சாரங்கபாணி ஐயா அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து ஆன்மீக உலகிற்கு நிறைய சேவை செய்ய வேண்டும் என்று எம்மைத் தடுத்தாட் கொண்ட எல்லாம் வல்ல அருள்திரு கமலக்கண்ணி அம்மன் கழலடிகளை இறைஞ்சுகிறேன்.

**18-6-94** அன்புடன்

கலவை-632 506 **சச்சிதானந்தா**

மகாவித்துவான்
பண்டித நடேசனார், B. A., J. P.,
10, சாமிபிள்ளை தெரு, சென்னை—600 112.

# அணிந்துரை

'பிரம்ம ஞானம்' எனும் இந்நூலை இயற்றிய செந்தமிழ்க் கவிஞர், திருவாளர். இராம. சாரங்கபாணி அவர்கள் தாம் படித்தறிந்தவைகளை உலகர் அனைவரும் அறிந்து உணர்ந்து வாழ வேண்டும் எனும் பெருநோக்குடன் தம் சிறிய பெரிய நூலினைப் பதிப்பித்து வெளிபிட்டார் என அறிக! புதிய புத்தகம் இயற்றுவோர் பழைய பற்பல சுவடிகளைக் கற்றுணர்ந்தே எழுதி வெளியிடுவர். இதுவே பேரறிவாகும்; வகுத்தளிப்பதே வாழ்வியற் புலமையாம். கற்றதனாலாய பயன். மற்றவர் வாழ, நல்வழியில் வாழச் செய்வதேயாம்.

விஸ்வபிரமம், வீரபிரமம், ஏகபிரமம், தியாகபிரமம், யோக பிரமம் எனப் பல பதங்களைப் பழைய நூல்களிற் காணலாம். இவை யாவும் அறிவுக்கறிவாகிய நமசிவயத்தையே குறிக்கும் "உண்மைப் பேரறிவினையே பிரம்ம ஞானம்" என்றார் இந் நூலாசிரியர். இப்பெரிய உண்மையை நன்குணர்ந்தே உலக மறையைத் தந்த திருவள்ளுவர் தம் திருக்குறளில் பரபிரம்மத்தை "வாலறிவன்" என்றார்.

**கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.** குறள்—2

உபநிடதங்களில் கூறப்படும் தத்துவப் பொருள்களுக் கெல்லாம் ஆணிவேராக உள்ளது பிரமமும் ஆன்மாவும் ஆகும்.

பிரமமும் ஆன்மாவும் எனும் இரண்டில் பிரமம் என்பது தெளிவு குறைவான சொல். அதைப் பெரும்பாலான உபநிடதங்கள் பிரபஞ்சத்தில் ஆதிமூல தத்துவம் எனக் கூறுகின்றன. பிரமம் என்பது நிர்க்குணமானது. அறிவுக்கு எட்டாதது; ஆதியற்றது; காலத்தையும் இடத்தையும் கடந்தது. இக்கருத்தினை ரிக் வேதத்தில் காணலாம். "பிரமம் என்பதில் "பிர்" என்பதே பகுதி என்ப. "பிரமம் ஒன்றே மெய்ப்பொருள் (சத்பதார்த்தம்) என்றும் அதை அனுபூதி மூலம் அறிவதே மனித வாழ்வின் தனிப் பெரும் பயன்" என்றும் ஆதிசங்கரர் கூறியுள்ளார்.

உபாய ஞானம், உண்மை ஞானம், அனுபவ ஞானம் என ஞானம் மூவகைப்படும். நட்சத்திர பிரகாசம் போல் தோன்றிய ஜீவ அறிவே உபாய ஞானம். சந்திரப் பிரகாசம் போல் தோன்றி அறியும் ஆன்ம அறிவே உண்மை ஞானம். எல்லா வஸ்துக்களையும் தெளிந்து அனுபவிக்கச் செய்கின்ற சூரியப் பிரகாசம் போன்ற கடவுளறிவே அனுபவ ஞானம் என்ப. ஒரு வஸ்துவை அதன் நாமரூபம் இன்றிக் காண்பது இந்திரியக் காட்சி. இந்திரிய அறிவுக் கூடமாக அறிதல் கரணக்காட்சி, கரண அறிவு இன்னதென்று தெரிதல் ஜீவக்காட்சி. ஜீவ அறிவு இதற்குத் தோன்றும் அறிவு. தோற்று அறிவு, தோற்றுவிக்குமறிவு. பதிய அறிவு ஆதலால் வஸ்துவினிடத்தில் பற்றுதல் அவா. அதை அனுபவிக்க வேண்டும் என எழுந்தது ஆசை. அதன் மயமாதல் காமம். அதைத் தன்வசப்படுத்த எழுவது மோகம். எந்த வஸ்துவிடத்திலும் மோகாதிகள் இன்றி நிற்றல் வேண்டும்.

**ஞானவகைகள் மூன்று**

உபய ஞானம்—ஜீவஅறிவு—நட்சத்திரப் பிரகாசம்

உண்மை ஞானம்—ஆன்ம அறிவு—சந்திரப் பிரகாசம்

அனுபவ ஞானம்—கடவுளறிவு—சூரியப் பிரகாசம்

**—வள்ளலார்**

எல்லா சமயங்களிலுமுள்ள் உண்மைகள் எல்லாம் சேர்ந்ததே. "பிரம்ம ஞானம்"; பண்டையோர் பிரம்ம ஞானத்தை "பிரம்ம வித்யா" என்றே கூறினர். கிரேக்கர்கள் (Greeks) பிரமம் என்பதைத் "தியாஸ்" (Theos) என்றும், ஞானம் என்பதை "சோபியர்" (Sophya) என்றும் கூறுவர். பிரமஞானம் என்பதை ஆங்கிலேயர் "தியாசபி" (Theosophy) என்பர்.

பல மொழிகளைக் கற்கவே உலகப் பயணம் செய்த பிரம ஞானியாகிய ராஜாராம் மோகன்ராய் 1830-ஆம் ஆண்டில் சமயம், சமூகம், நெறிக்கல்வி, அரசியல் பற்றியெல்லாம் ஆராய வங்கத்தில் பிரம்ம சமாஜம் கண்டார். பின்னர் அதோடு தத்துவபோதினி சபையும் இணைக்கப்பட்டது, 1875-ல் சமய சீர்திருத்தம் செய்ய நியூயார்க் நகரில் பிளவாட்ஸ்க்கி அம்மையும், கர்னல் ஆல்கட் என்பவரும் சேர்ந்து 'அறிஓம் பிரம்மஞான சபை'யை நிறுவினார்கள். சமயங்களின் உட்கருத்தை உணர்ந்து அதன்படி ஒழுக வேண்டும் என்பதே பிரம்மஞான சபையின் முக்கிய நோக்கமாகும். "There is no religious higher than Truth. Every religion teaches Truth only." (உண்மையை விட உயர்ந்த மதம் உலகில் இல்லை. எல்லா மதங்களும் உண்மையையே போதிக்கின்றது.)

மேற்சொன்ன பிரமஞான சபையைச் சென்னை அடையாற்றில் கண்ட அம்மையும், அறிஞரும், நாவலர் அன்னி பெசட் அம்மையும், உலகம் தழைக்க வந்து உதித்த சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளைக் கண்டு உபதேசம் கேட்டார்கள். சுவாமிக்கு ஆங்கிலம் தெரியும். எனவே தம்மை அண்டிய மேனாட்டு அறிஞர்களுக்கு பிரமஞானத்தைத் தந்து அடையாறு 'தியாசாபிகள்' வளாகத்தில் ஒரு கோயில் மண்டபம் கட்டச் சொன்னார். இன்றும் அக்கோயில் அங்கு உள்ளது. ஓர் அறையில் நடுமேடைமேல் 'இராந்தல்' விளக்கு ஒன்று நான்கு பக்கங்களிலும் சிகப்பு, நீலம், பச்சை, மஞ்சள் நிறக் கண்ணாடிகளால் மூடப்பட்டு உள்ளே விளக்கு எக்காலமும் எரிந்து கொண்டே இருத்தலைப் பார்க்கலாம். இதுவே "பிரம்மஞானம்" (Eternal Wisdom) யாதென்பதை விளக்கும் உருவவழிபாடாம்.

"நல்வினையால் ஞானம் கைகூடும், அந்நல்வினையே உளத் தூய்மை கொடுக்கும். மயக்கத்தினின்று நீங்கிய உளத் தூய்மையை அறம் கொடுக்கும். அந்த அறத்தாலே சாந்தி உண்டாகும். அச்சாந்தியால் அட்டாங்கயோகம் தோன்றும்" என்றார் பரஞ்சோதியார். "கிரியை என மருவும் அவையாவும் ஞானம் கிடைத்ததற்கு நிமித்தம்"—சிவப்பிரகாசம், சிவனை நோக்கிச் செய்யும் உண்மைச் சரியை, கிரியை யோகங்களினால் ஞானம் உண்டாம்.

இந்நூலாசிரியர் கவிஞர் இராம. சாரங்கபாணி அவர்கள் தம் புத்தகத்தின் மேலட்டையில் பஞ்சபூதங்களின் நிறங்களை

விளக்கும் அழகிய படத்தை அச்சிட்டுள்ளார்கள். அந்த அட்டைப் படம் அவரது ஆழ்ந்த அறிவினை, பேரறிவினைப் படிப்போர்க்கு புலனாக்கும். மண்ணுக்கு ஐங்குணங்களும், நீரிடை நான்கு குணங்களும், தீயில் மூன்று குணங்களும் காற்றில் இரு குணங்களும், வானத்திடை ஒரு குணமும் பெற்று பஞ்சபூதங்கள் விளங்குகின்றன. (பார்வை—விநாயகர் தோத்திராஷ்டகம், 7-ஆம் பாட்டு) நிலம் பொன்மை, நீர் வெண்மை தீ செம்மை, காற்று கருமை, ஆகாயம் புகைநிறம் என்றுள்ள தத்துவ விளக்கம் பயனுள்ள செய்தியாகும்.

கற்றுணர்ந்தடங்கிய இந்நூலாசிரியர் இவ்வரிய நூல் போன்று பல இயற்ற வேண்டும். உடலைவளர்க்க பல நூல்கள் உண்டு. உயிரை வளர்க்க இறைமை நூல்கள் வேண்டும். ஆசிரியர் பல்லாண்டு வாழ்க.

நடேசநகர்<br>
சென்னை-600 112<br>
3-6-1994

இங்ஙனம்

**பண்டித நடேசனார்**

**சித்தயோக சிவசங்கர் பாபா**

"சம்ரட்சணா"
55, மலையப்பன் தெரு,
மண்ணடி, சென்னை-600 001.

# அணிந்துரை

"செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்து அத்தைத் தின்று அங்கே கிடப்பது" எதற்காக? வினைப்பயனை நுகர்ந்து, போகங் கடந்து, யோகத்தில் லயித்து, ஞானத்தினை அறிந்து பேரானந் தத்தில் என்ஞான்றும் திளைக்கவே!

அந்த ஞானமே பிரம்ம ஞானம்; அந்தப் பேரானந்த நிலையே பிரம்மானந்தம்!

இந்த மெய்யைப் பொய்யெனத் தெரிந்து தெளிந்து மெய் ஞானம் எய்தி, அதிலிருந்து உயரும் நிலையே பிரம்ம ஞானம்; உலகனைத்தும் பிரம்மம் என உணர்ந்து எல்லாவற்றிலும், எல்லோருள்ளும் இறைநிலையை கண்டு மகிழும் உயர்நிலை அன்பு பழுத்து கனிந்த அருள் நிலையாகும்.

**"எல்லா உயிரும் என் உயிராயின**
**எல்லா உலகும் என் வசமாயின"**

என்று வள்ளலார் காட்டும் ஜோதிநிலை இதுவே!

அருட்கவி இராம. சாரங்கபாணி அவர்கள் அருள்கனிந்த நெஞ்சினர். சித்தத்தை சீராக்கி சிவமாக்கி சிவனாகி நின்றவர். எந்நிலையும் வந்தடையும் பேரடைவர் என உணர்த்திட அவர் உள்ளுணர்வில் உதித்ததே இந்நூல். அவரது உலகியல் அறிவும், நுண்மான் நுழைபுலத்திறனும், ஆன்றவிந்தடங்கிய ஆன்றோர் சான்றோரது பல்லாண்டுத் தொடர்பால் ஏற்பட்ட அருளானந்த நிறை அனுபவங்களும் ஒன்றிணைந்த தேன்சாறே இந்நூல்.

பக்கங்களை நிரப்பி பலனற்ற செய்திகளைத் தரும் பல எழுத்தாளர்கட்கு மத்தியில் பக்கம் பக்கமாக ஞானத்தை நிரப்பி இருளை அகற்ற வெளிச்சம் தருகிறார் அருட்கவி சாரங்கபாணி அவர்கள்.

இது தொடக்கம்; இனி தொடரும் இவரது ஆன்மீக இலக்கியப் பணிகள்-இனிது, இனிது.

நெடிது வாழ்க! வளர்க!

**சிவசங்கர் பாபா.**

## ஓம் பவதாரிணி

அருள்மிகு கருமாரி அம்மன் சக்தி பீடம்
9-2ஆவது குறுக்கு தெரு,
சீதம்மாள் காலனி, சென்னை -600 018.

# ஆசியுரை

பூர்வ நூல்களில் விளங்கும் அரிதான கருத்துக்களை 'பிரம்மஞானம்' என்ற இந்நூலில் நம் ஆசிரியர் திரு இராம. சாரங்கபாணி அவர்கள் எளியதமிழில் தொகுத்து வெளியிட்டுள் ளார். வள்ளுவர் முதல் வள்ளலார் வரை வாழ்ந்த ஞானிகளின் தெளிந்த தத்துவங்களை திறம்பட வெளிப்படுத்தியிருக்கின்றார்.

பிரம்மஞானம் என்பது உண்மைப் பேரறிவு! அருளாளர்கள் தாம் வாழும் காலத்தில் ''தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வை யகம் ''என்ற உயர்ந்த பொது நோக்குடன் மனிதகுலம் முழுமைக் கும் தங்களது அனுபவங்களை உலகுக்கு அளித்தனர். இந்நூல் அதன் கருத்துச் சாரமாய் விளங்குகிறது. குறிப்பாக ஒருவன் பிரம்மஞானத்தை அடைய வேண்டுமானால் அவன் செல்ல வேண்டிய பாதையை இராஜயோகம், பதஞ்சலி யோக சூத்திரத் தின் மூலம் மிகத்தெளிவாக ஆசிரியர் விளக்கியுள்ளது குறிப்பிடத் தக்கது.

இந்நூலில் வேதாந்தசித்தாந்த சமரசமும், நான்மறைகளோடு திருமந்திரமும், பகவத்கீதையோடு திருக்குறளும் வடமொழி உப நிஷதங்களோடு இணையான தமிழ்ப்பாடல்களும் எடுத்தாளப் பட்டு, ஆசிரியரே முன்னுரையில் கூறுவதுபோல ''பழையகிரந் தங்களைப்பார்த்து எழுதினேன்'' என்ற மகரிஷிகளின் வழி நின்று நூலை ஆக்கியுள்ள விதம் போற்றத் தகுந்ததாகும். ஆயினும் ஆசிரியருடைய உள்ளார்ந்த தியானமுதிர்ச்சியை அனுபூதிநிலையை நூலின் எல்லா இடங்களிலும் காண முடிகிறது.

இந்நூல் ஆன்மசாதகர்களுக்கு ஓர் உற்ற நண்பனாக இருந்து நல்ல குருவாக விளங்கி வழிகாட்டும் என்பது திண்ணம். ஆசிரியர் பல்லாண்டு காலம் வாழ்ந்து மேலும் பல யோகநூல்களை தமிழுலகிற்கு அளித்து மக்களுக்கு ஞானத்தொண்டு புரிவாராக.

ஓம் தத்சத்

அன்புடன்

28-6-64

அன்னையின் தொண்டில்

**ஓம்பவதாரிணி**

**கனகசுப்பிரமணியம்**
செயல் பொதுவர்
வள்ளலார் பேரவை, கந்தகோட்டம்
சென்னை-600 003

அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை

அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி

**"எல்லாம் செயல் கூடும் என் ஆணை அம்பலத்தே**
**எல்லாம் வல்லான்றனையே ஏத்து."**

# அணிந்துரை

"பிரம்ம ஞானம்" இது நூலின் பெயர். "உண்மைப் பேரறிவு". இது, பிரம்மஞானத்தின் தமிழாக்கமும் பொருளுமாகும்.

"அறிவு உடையவர் வேறொன்றும் இல்லாதிருப்பினும் எல்லாம் உடையவரே ஆவர். அறிவு இல்லாதவர் வேறு என்ன உடையவராக இருப்பினும், ஒன்றும் இல்லாதவரேயாவார்" என்ற கருத்தினை

**"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்."**

குறள்-430

என்று உலகப் பொதுமறையாகிய திருக்குறள் உணர்த்துகிறது. அறிவு உடையவரே எல்லாம் உடையவர் என்றால், "உண்மைப் பேரறிவு" உடையவர் என்றால் சொல்லவே வேண்டியதில்லை அல்லவா?

என்றும் உள்ளது எதுவோ அதுவே பிரம்மஞானம்
எல்லாம் வல்லது எதுவோ அதுவே பிரம்மஞானம்
எங்கும் நிறைந்தது எதுவோ அதுவே பிரம்மஞானம்
என்றும் எல்லார்க்கும் எங்கும் துணையாக
இருப்பது எதுவோ அதுவே பிரம்மஞானம்
முதலும் முடிவும் இல்லாதது எதுவோ அதுவே பிரம்மஞானம்
ஆக்கமும் அழிவும் இல்லாமல் உள்ளது எதுவோ அதுவே
பிரம்மஞானம்

ஆம், அதுதான் உண்மையான மெய்ப்பொருள். உண்மையான பேரறிவு. இது நம் முன்னோர் கண்ட முடிவு. இது நம் சான்றோர் கண்ட தெளிவு. இது ஆன்றோர்களும் அருளாளர்களும் உணர்ந்த அறிவு.

இந்த அரிய கருத்தை இந்த பெரிய பொருளை, உரிய வகையில், எளிய முறையில், இனிய தமிழில் வடித்துக் கொடுத்துள்ளார், இந்நூலாசிரியர் அருட்கவி இராம. சாரங்கபாணியார்.

இந்நூல் தெளிவான ஞானத்தினால், தேவையான சொற்களால் ஆக்கப்பட்டுள்ளது.

பல மறைகளின் உண்மைகளையும், பல சான்றோரின் சிந்தனைகளையும், குறிப்பாகவும், சிறப்பாகவும், உலகப் பொதுமறையாகிய திருக்குறளையும், திருவருட்பிரகாச வள்ளற் பெருமான் இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பாவையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டியுள்ள பாங்கு இந்நூலின் திருமுடிக்கு, அலங்கார அணியாக அழகு அணியாக விளங்குகின்றது என்று சொன்னால் அது மிகையுமாகாது, தவறுமாகாது.

**''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே.''**

என்ற திருமூலரின் திருமந்திரத்தில் உள்ள திருவாக்கிற்கு இணங்க இதற்குமுன் ''அன்னைத் தமிழில்'' ''அழகுத் தமிழில்'' ''அருமைத் தமிழில்'' உருவாக்கப்பட்டுள்ள பல ஆன்றோர்களின் நூற்களின் வரிசையில் இந்நூலும் ஒன்றாகத் திகழும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

**''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப''**

என்கிறது தொல்காப்பியம்.

**''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.''** குறள்-28

என்கிறது உலகப் பொதுமறையாகிய திருக்குறள்.

இவ்விரு கருத்துக்களுக்கும் ஒப்ப, நமக்கு முன் தோன்றிய நிறைமொழி மாந்தர்களாகிய சித்தர்கள், ஆன்றோர்கள், சான்றோர்கள், அருளாளர்கள், குறிப்பாகவும் சிறப்பாகவும் திருமூலர், திருவள்ளுவர், தாயுமானவர், மணிவாசகர், திருவருட்பிரகாசவள்ளலார் போன்றோரின் கருத்துக்களை உரிய இடத்தில் எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது இந்நூலாசிரியரின் கைத்திறமும் இந்நூலின் பெருமையுமாகும்.

இந்நூல், உலகம் அழியும் வரை தாமும் அழியாது விளங்கக்கூடிய இந்துமதத்தின், வேதங்கள், உபநிடதங்கள், சாத்திரங்கள் போன்ற பழங்களிலிருந்து பிழியப்பட்ட **''பழச்சாறு''** ஆகும்.

இந்நூல் ஆன்றோர் கருத்துக்களின் தொகுப்பாகிய நல்ல ஆவின்பால் நிறம்பியபால் குடமாகும்.

இந்நூல் அருளாளர்கள் என்ற பூக்களிலிருந்து சேகரிக்கப் பட்ட தேன்குடமாகும்.

பசுக்கள் பலநிறம். ஆனால் அந்த பசுக்களின் பாலின் நிறமும் பாலின் சுவையும் ஒன்றுதான்.

பூக்கள் பலநிறம், ஆனால் அந்த பலவண்ணப் பூக்களில் உள்ள தேனும் அதன் சுவையும் ஒன்றுதான்.

அதுபோல் ஆன்றோர்கள், சான்றோர்கள், அருளாளர்கள் பலர். ஆனால் அவர்களின் மூலக்கருத்துக்கள் ஒன்றுதான்.

பழச்சாறு, பால், தேன் இவை மூன்றும் நம் உடல் வளர்ச் சிக்கு அதாவது புறவளர்ச்சிக்குத் தேவையானது, இன்றியமை யாதது, நல்லது.

அதுபோலவே நம் முன்னோர், ஆன்றோர், சான்றோர், அருளாளர்கள் ஆகியோரின் நற்கருத்துக்கள் நம் உள்ளத்தின் வளர்ச்சிக்குத் தேவையானது, இன்றியமையாதது, நல்லது. மறைபொருளை, அரிய பொருளை பெரிய பொருளைத் தாமும் தெளிவாக உணர்ந்து, பிறருக்கும் உரிய வகையில் எளிய முறை யில், இனிய மொழியில், எடுத்து இயம்புவது ஒரு சிலர்க்கு மட்டுமே கைவந்த கலையாகும். அந்தக் கலை இந்த நூலாசிரிய ரிடம் பொதிந்து கிடக்கிறது என்ற உண்மையை விளக்குகிறது.

**"யாம் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்"**

என்று திருமூலரும் மற்றும் "என்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே" என்ற வள்ளலாரின் கருத்திற்கிணங்க என்னைப் போலவே இந்நூலின் சுவையைப் படிப்போரும், கற்போரும், உணர இனியாம் தடையாக இல்லாமல், இந்நூலாசிரியர். இந் நூல் போன்று, பல நல்ல நூல்களை, நம் சமய உலகிற்கும், நம் தமிழ் உலகிற்கும் வாழ்நாள் முழுவதும் யாத்துக்கொண்டே இருக்க இறைவனை இறைஞ்சுகிறோம்.

**"எல்லாப் பெருமையும் வள்ளலார்க்கே**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே!"**

29-6-94 **கனக சுப்பிரமணியம்**

# அணிந்துரை

**பேராசிரியர் டாக்டர் வை. இரத்தினசபாபதி**
*சைவசித்தாந்தத் துறைத்தலைவர் (ஓய்வு)*
*சென்னைப் பல்கலைக்கழகம்*

செஞ்சொற் கவிஞர் இராம. சாரங்கபாணி அவர்கள் மக்களின் வாழ்வியற் செய்திகளைத் திரட்டிச் சேர்த்து அருமையும் இனிமையும் அமைய அமைத்துத் தந்த ஞானப் பெட்டகமே 'பிரம்மஞானம்' எனப் பெயரிய இந்நூல்.

அண்டமும் பிண்டமும், மனிதனும் தெய்வமாகலாம், பிரம்மஞானம், இராஜ யோகம், பதஞ்சலி யோக சூத்திரம், ஆத்ம போதம், தியான யோகம் ஓம்தத்சத், என்ற எட்டுத் தலைப்புகளில் ஆசிரியர் அமைத்துத் தரும் செய்திக் கோவையானது ஆன்ம வர்க்கம் எனப் பெறும் மனிதச் சாதி முழுமையும் பயின்று பயன்தரத்தக்க ஒன்றாகும்.

'மனிதனும் தெய்வமாகலாம்' என்ற அடித்தளத்தை மையமாகக் கொண்டு பிரம்ம ஞானம் எனப்பெறும் வாழ்வியல் நிறைவு எனும் குறிக்கோளை அடைவதற்குரிய பல்வேறு படி நிலைகளை ஏணிப்படிகளாக அமைத்து ஆக்கித்தந்த அற்புதப் படைப்பே பிரம்மஞானம் எனப்பெறும் இந்நூலாகும்.

வடமொழியிலும் தென்மொழியிலும் அமைந்த பல்வேறு ஆன்ம, தத்துவ, சாத்திய மந்திர நூல்களின் அரிய கருத்துக் களையெல்லாம் இணைத்து, எந்த எந்த நூலின் எந்த எந்த இறைச் செல்வம் தேவையோ அவைகளையெல்லாம் செம்மைப் படுத்தி நிரல் படுத்தி அமைத்துத் தந்திருப் பது இந்நூலின் அரிய அமைப்பு.

பகவத்கீதை, உபநிடதங்கள் அவை களுக்குரிய ஆதிசங்கரரின் விரிவுரைப்பகுதி கள், திருக்குறள், திருமந்திரம் ஆகிய நூல் களை அங்கங்கே எடுத்துக் காட்டி நூல் முழுவதும் தொய்வில்லாமல் அனைவரும் விரும்பிப் படிக்கும் வகையில் எளிமையும் இனிமையும் அழகும் மிளிர செந்தமிழ் செவ்விய நடையால் அமைத்துக் கொடுத் திருப்பது பாராட்டக் கூடிய பெருந் தொண்டாகும்.

ஆதிசங்கரர் நிறுவியுள்ள அத்துவித வேதாந்தக் கொள்கையானது மிகவும் தெளி வான முறையில் கவிஞர் அவர்கள் தம்முடைய அனுபவம், சுருதி, யுக்தி ஆகிய

அடிப்படையில் நின்று எளிய நடையில் விளக்கம் பெற்றிருப்பது படிப்பவர்களுக்குப் பெருந்துணை புரிவதாகும்.

கீதையைப்பற்றிப் பெருநூல் எழுதலாம். உபநிடதம் பற்றிப் பெருநூல் எழுதலாம். அவையெல்லாம் கற்றோர்க்கே உவப்பு உண்டாக்கும். கற்றோர்க்கும் எளியவருக்கும் ஆர்வமும் கடைப்பிடிக்கும் எழுச்சியும் ஊட்டத்தக்க வகையில் ஆன்மீக, யோக சாத்திரக் கருத்துக்களைக் கோவைப்படுத்தித் தந்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்பு.

வைரத்தை மேலும் மேலும் பட்டை தீட்டி ஒளிரச் செய்வது போல, பகவத்கீதைக் கருத்துக்களையும் உபநிடதக் கருத்துக்களை யும் இழைத்து இழைத்து ஏற்ற இடங்களி லெல்லாம் ஒளிருமாறு அமைத்துத் தந்த இந்நூலாசிரியர் கவிஞர் சாரங்கபாணி அவர்கள் மக்களால் போற்றப்பெறும் மகத்துவம் வாய்ந்த உத்தமராகிறார்.

வேதாந்தக் கட்டளை போன்ற கட்டளை நூல்கள் கிடைப்பதும் அரிது. கிடைத்தா லும் படிப்பவர்களுக்கு ஆர்வம் இல்லை. அத்தகைய குறைகளை நீக்கி, மனிதனுக்குத் தேவையான வாழ்வியலுக்குப் போதுமான செய்திகளைத் திரட்டி இனிமைமெருகு குன்றாமல் ஏற்றமெலாம் பெற எழுதித் தந்திருப்பது அருமையிலும் அருமை.

ஒவ்வொரு தலைப்பிலும் எடுத்தாண்ட செய்திகள் பற்றி விரிவாக எழுதலாம். என்றாலும் பக்கம் பலவாறாகப் பெருகும். அன்பர்கள் தொட்டால் முழுவதும் படிக்காமல் இடைநிறுத்துவதற்கு இயலாமல் தவிக்கும் நிலையில் ஓர் உயர்ந்த நூலை ஆக்கித் தந்திருக்கும் கவிஞர் திலகம், சாத்திரக் களஞ்சியம், உபநிடதமாமணி கவிஞர் இராம. சாராங்கபாணி அவர்களைத் தமிழுலகம் நன்கு போற்றிப் பயன்படுத்திக் கொள்ளும் என வாழ்த்தி என்றும் எங்கும் நின்று நெடிது விளங்கும் பரம்பொருளை வணங்கி வேண்டி அமைகிறேன்.

வாழ்க கவிஞரின் மெய்ப்பொருள் தொண்டு.

வளர்க அவர்தம் எழுத்துச் செல்வம்.

என்றும் அன்புடன்

வை. இரத்தினசபாபதி

Q. பிளாக், எண் 1
ரோகிணி கார்டன்
சென்னை-600 028
10-6-94

ஓம்

# பிரம்மஞானம்

## நூன்முகம்

**ஓம்எனும் மந்திரத் தொலியே சரணம்**
**ஓதும் மறையின் பொருளே சரணம்**
**ஒளியே வெளியே சரணம் சரணம்**
**ஒன்றில் பலவாய் உறைவோய் சரணம்**
**அதுவும் இதுவும் பூரணம் சரணம்**
**அள்ளினும் குறையான் பூரணன் சரணம்**
**ஒன்றே சத்தியம் பலவாய்ப் பேசினும்**
**ஒன்றே பிரம்மம் சத்சித் சரணம்.**

பண்டைய மகரிஷிகள் வேதவிஷயங்கள் அடங்கிய நூல்களை எழுதிய போது ''நானே எழுதினேன்'' என்று சொல்லவில்லை. ''பழைய கிரந்தங்களைப் பார்த்து எழுதினேன்'' என்றே கூறி யுள்ளார்கள்.

கற்பனைக்கோ, சொல்லாட்சிக்கோ இடம் இல்லாத உண்மை பொருளைப் பற்றியும், நம்முடைய புராதன வேதம் மற்றும் யோக விஷயங்களை அடிப்படையாகக் கொண்டும் 'பிரம்மஞானம்' (உண்மைப் பேரறிவு) என்ற தலைப்பில் இந்நூலை எழுதியுள்ள இராம. சாரங்கபாணியும், படித்து அறிந்தது, மற்றும் கேட்டு அறிந்தனவற்றின் தொகுப் பாகவே இந்நூலை எழுதியுள்ளான் என்று கூறிக்கொள்வதில் பெருமிதம் அடைகிறான்.

வேதாந்த விஷயங்களையும் உபநிஷத்துக்களையும் சென்னை மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தினர் தமிழில் பதிப்பித்து வெளி யிட்டுள்ள அரிய பல நூல்கள், இந்நூலின் எழுத்துப் பணிக்கு உறுதுணையாக இருந்தது என்பதும் உண்மையான விஷயமாகும்.

ஞானகுரு வாழ்க குருவே துணை

அன்பன்,

**இராம. சாரங்கபாணி**

'பிரணவம்'
35, தம்புசெட்டி சந்து,
இராயபுரம், சென்னை-600 013.

# 1. அண்டமும் பிண்டமும்

**''இவ்வுலகத்திற்கு உற்பத்தி முதலியன
எதனிடமிருந்து வந்ததோ அதுவே பிரம்மம்''**

பிரம்மசூத்திரம்—அத் 1. சூ-2.

அறிவுக்குப் புலப்படாதது எதுவோ அதுவே சத்தியம், அது தான் பிரம்மம். இரண்டற்றதும் ஒன்றேயானதும் என்றும் எப்போதும் எங்கும் வியாபித்துள்ள உண்மைப் பொருளாகிய பரம்பொருள்—இறைவன் பிரம்மம் என்று அழைக்கப்படுகிறது. ஞானம் என்றால் பேரறிவு ஆகும். உண்மைப் பேரறிவின் துணையால் வினைமாசு நீங்கிய காலத்துதான் கிடைத்தற்கரிய பிரம்மஞானம் திருவருள் துணையால் கிடைக்கும்.

ஆக்கல், காத்தல்,அழித்தல் (துரிசுநீக்கம்) மறைத்தல்,அருளல் ஆகிய ஐந்தொழிலுக்குரிய அருவமானதும் ஒன்றேயானதுமான ஆதார சக்தி எதுவோ, அதுவே பிரம்மம், சிவம், பரம்பொருள், பரபிரம்மம், ஈஸ்வரன், சக்தி, நாராயணன், பகவான், இறைவன், ஆன்மா, கடவுள் என்றெல்லாம் பேசப்படுகிறது.

**''ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ''**

என்று மணிவாசகப் பெருமானும் பாடியுள்ளார்.

உருவம் அருவம் உருவருவம் இல்லாத பரம்பொருளாகிய பிரம்மம் எண்வகைத் (அட்டமூர்த்தம்) திருமேனிகளைக் கொண்டதாகும். நிலம், நீர், தீ, காற்று,விண்,சூரியன்,சந்திரன், உயிர் (ஆன்மா) ஆகிய எண் வகையான திருமேனிகளைக் கொண்டவன் இறைவன் என்று முன் (பூர்வ) நூல்கள் உணர்த்து கின்றன.

உயிர்களுக்கு (ஜீவன்) இறைவன் அறிவு தந்தருளினாலும் உயிரால் (ஆன்மா) எதனையும் எளிதில் அடைந்துவிட முடியாது. ஜீவர்கள் (புருஷன்) சொல்,செயல், சிந்தனைகளை உள்ளடக்கிய வினைமாசுகளை (கர்மவினைகள்) நீங்கப் பெற்ற காலத்துதான் தன்னையும், ஆன்மாவையும் அறியும் திறனை இறைவன் தருகிறான்.

அண்டத்தில் அனைத்தும் இறைவன் அருளாலேயே நிகழ்கிறது. ஆனால் தன்னால்தான் யாவும் நடக்கின்றன என்று பிண்டத்தில் உதித்த மனிதன் நினைக்கிறான். 'யான், எனது' என்ற சிந்தனையை மனிதன் விட்டொழித்த பொழுதுதான், இறைவன் (உயிர்களுக்கு) ஆன்மாவுக்கு பிரம்மஞானத்தை அளிக்கிறான்.

சுத்த வெளியில் எது பிரம்மம் என்று பேசப்படுகிறதோ அதுவே பிண்டத்தில் அறிவு என்று பேசப்படுகிறது.

ஆண் பெண் சேர்க்கையால் ஒரு ஜீவன் உற்பத்தி ஆகிறது என்பது உண்மை. ஆனால் இன்றைய விஞ்ஞானம் செயற்கை முறையிலும் கருத்தரிப்பு சாத்தியமென்று நிரூபித்துள்ளது.

புதுமையாகப் பேசப்படும் இவ்வகையிலான செயற்கைக் கருத்தரிப்பு முறைகள் நமது பண்டைய வேதங்களிலும், புராண இதிகாசங்களிலும் கூறப்பட்டுள்ளது.

மித்ரா, வருணன் ஆகிய தேவர்களின் விந்து ஊற்றப்பட்ட கும்பத்திலிருந்து (குடம்) வசிஷ்ட முனிவர் தோன்றியதாக ருக் வேதத்தில் கூறப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அதே போன்று மகாபாரதத்தில் கௌரவர்களும் அவர்களது சகோதரியும் காந்தாரியின் வயிற்றிலிருந்து பிறந்ததாகக் குறிப்பிடவில்லை. நெய் நிரப்பிய குடத்தில் வளர்ச்சியடையாதக் கருக்களைச் சேமித்துவைத்து அதிலிருந்து தோன்றியதாகப் புராணங்களில் கூறப்பட்டுள்ளது. அகத்தியரும் கும்பத்திலிருந்து பிறந்ததாகக் கருதப்பட்டு கும்பமுனி என்று அழைக்கப்படுகிறார்.

செயற்கை முறைக் கருத்தரிப்பு என்பது பற்றியெல்லாம் நமது வேதங்களிலும், புராணங்களிலும் கூறப்பட்டுள்ளது அபத்தம் என்று கூறியவர்கள் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனாகச் செயல்முறைப் படுத்தப்படும் செயற்கை கருத்தரிப்புப் பற்றி பெருமையாகப் பேசுகிறார்கள்.

வேதாந்தம் தெளிவுபடுத்தும் மெய்ஞ்ஞானக் கருத்துக்கள் விஞ்ஞானத்தின் அடிப்படைத் தத்துவங்களைச் சார்ந்ததே யாகும்.

புல்பூண்டிலிருந்தும் நீர்வாழ் உயிரினங்களில் இருந்தும் மனித இனம் பரிணாம வளர்ச்சி அடைந்ததாக நமது பூர்வ நூல்களில் கூறப்பட்டுள்ள கருத்தினை ஒட்டியே மேனாட்டு தத்துவ ஆசிரியர்கள் குரங்கிலிருந்து மனிதன் தோன்றியதாகக் கூறியுள்ளார்கள்.

புல்லும் பூண்டும், நீர்வாழ் உயிரினங்களும் குரங்கும் ஆதியில் எப்போது, எப்படி? யாரால் தோற்றுவிக்கப்பட்டிருக்கும்? என்பதற்கு விடை காண்பது கடினமேயாகும்.

மனிதனின் பரிணாம வளர்ச்சி ஆண் பெண் சேர்க்கையினால் தான் என்று கூறும்போது ஆதியும் மூலமுமாகத் தோன்றிய ஆண் பெண்வர்க்கம் எப்படி எப்போது யாரால் படைக்கப்பட்டிருக்கும் என்ற வினாவுக்கு வேதாந்தம் மூலம் அறியப்படுவது யாதெனில், புத்திக்குப் புலப்படாத இவ்வகையிலான பிரபஞ்ச விருத்திகளுக்கு மூலகாரணம், பரம்பொருளின் (பிரம்மம்) நிலைக்கூற்றின் அம்சத்திலிருந்து ஒரு பகுதி வெளியாகும் போது ''பிரகிருதி'' (மாயா சக்தி) எனப்படுகிறது. அந்தப் பிரகிருதியே'அத்யாத்மம்' என்றும் பின்னர், அப்பிரகிருதி செயலில் (உழைப்பு) ஈடுபடும் போது அதுவே 'கருமம்' என்றும் பெயர் பெறுகிறது. பிரகிருதியின் இயக்கம் (உழைப்பு) காரணமாக ஜீவராசிகள் சிருஷ்டிக்கப் படுகிறது என்று வேதாந்த தத்துவங்களில் கூறப்பட்டுள்ளது.

பூமியும், பூமியில் வாழும் உயிரினங்களும் மட்டும் பிரபஞ்சம் ஆகிவிடாது. அண்டத்திலிருக்கும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் போன்ற எண்ணற்ற கோள்களும், வானிடைக் காற்றும் காற்றிடை நெருப்பும், நெருப்பிடை நீரும், நீரிடை நிலமும் இணைந்ததாகவுள்ள பல்வேறு ஜீவராசிகளைத் தன்னகத்தே கொண்டது பிரபஞ்சமாகும்.

பஞ்சபூதத் தத்துவங்களின் பேரியக்க மண்டலமான ஆகாயப் பெருவெளித் தத்துவத்தையே விஞ்ஞானிகள் 'யூனிவர்ஸ்' என்கிறார்கள்.

பரவெளியில் அண்டத்தில், எக்காலத்துக்கும் நித்தியமாகவும் சத்தியமாகவும் இருப்பதும் இயங்கக் கூடியதே யாயினும் இயக்கம் எதுவுமின்றித் தானே தானாய் இருப்பது எதுவோ அதுவே பரமாணு (பரம்பொருள்) ஆகும்.

அணுவிற்குள் அணுவாய் (பரமாணுவாய்) அப்பாலுக் கப்பா லுமாய் பரவெளி (ஆகாயம்) தத்துவத்துக்கு, மூலகாரண மான பரப்பிரம்மம். அவித்தை என்னும் மாயா (சக்தி) ரூபத்தில் பிரதிபலிக்கும் போது அதுவே ''பிரகிருதி'' எனப்படுகிறது ஜீவனாகக் காட்சியளிக்கிறது.

பரவெளியின் பேரியக்கத் தத்துவத்தின் அடிப்படையில் பரமாணுக்களின் அசைவு—இடைவெளி—மூலக்கூறுகள் என்று மூவகையாக உணர்த்தப்பட்டுள்ளது.

**அது அசைவுள்ளது எனினும் அது அசையாது**
**அது தூரத்திலுள்ளது எனினும் சமீபத்திலுமுள்ளது**
**அது அனைத்துக்கும் உள்ளே இருப்பதாயினும்**
**அனைத்துக்கும் அப்பாலு மாயுள்ளது**

என்று ஈசாவாஸ் யோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. 1-5

இக்கருத்தைத்தான் விஞ்ஞான அடிப்படையில்'எலக்ட்ரான்' 'புரோடான்' 'நியூட்ரான்' என்ற பெயரில் பரவெளியில் உள்ள அணு இயக்கங்கள் பற்றி இன்றைய அறிவியல் (விஞ்ஞானம்) கூறுகிறது.

மாறுதலுக்குரிய, பார்வைக்குப் புலனாகும் பொருள்களும், உலக விவகார விருத்திகள் மட்டும் விஞ்ஞானம் (அறிவியல்) ஆகி விடாது. அறிவுக்குப் புலப்படாத மெய்ப் பொருள்களையும், பரவெளித் தத்துவங்களையும் அறிவதற்கு உண்மைப் பேரறிவு என்ற ஞானம் தேவைப்படுகிறது.

ஞானம் பயில்வதற்கு நமது முன்னோர்கள் பலவிதத் தத்துவங்களை வகைப்படுத்தி கற்பித்துள்ளார்கள். அவைகள் முறையே வேதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், நாதாந்தம் (யோகாந்தம்) கலாந்தம் என்ற பலவகைப் பிரிவுகளில் மெய் ஞானம் கற்பிக்கப்பட்டுள்ளது.

வேதாந்தம் என்பது நான்கு வகையான வேதங்களைக் கற்று ஆய்ந்த அறிவு, சித்தாந்தம் என்பது சுத்த அத்வைத சைவ சமய அறிவு, போதாந்தம் என்பது ஞானமார்க்க அறிவு. நாதாந்தம் யோகாந்தம் ஆகிய இரண்டும் ஒன்றேயாகும். நாதாந்தம் யோகாந்தம் என்பது யோக நிலையில் ஒன்றினைந்து ஞானநிலையில் சித்திபெறும் அறிவு. கலாந்தம் என்பது நுண்கலைகளான சிற்பம் ஓவியம் பயிலும் அறிவு.

வேதாந்த அறிவின் துணைக் கொண்டு வேதவிற்பனர்களால் படைக்கப்பட்ட புராண இதிகாசங்களிலுள்ள வரலாற்று நாயக நாயகிகளின் திருமேனிகளைக் கலாந்தம் பயின்ற நுண்கலை நிபுணர்களான சிற்பிகளும் ஓவியர்களும் மனிதரூபத்தின் சாயலில் சிலமாற்றங்களுடன் இப்போது நாம் வணங்கி வழிபடும் தெய்வத் திருமூர்த்தங்களைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாக சிருஷ்டித்து வழங்கியுள்ளார்கள், அத்தகைய தெய்வத் திருமேனி களையே நாமும் தொன்று தொட்டு வணங்கி வழிபட்டு வருகிறோம்,

சைவ சித்தாந்த தெய்வ மூர்த்தத்தைக் கலாந்தம் பயின்ற நுண்கலைஞர்களான சிற்பிகள், மிகவும் சூட்சுமமான முறையில், அம்மையப்பனின் திருமேனியை இலிங்க வடிவத்தில் தெய்வ மூர்த்தமாக வடிவமைத்து தந்துள்ளார்கள்.

பஞ்சபூதங்களாகிய மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவற்றைத் தெளிவில்லாமலும், அச்சத்துடனும் வழிபாடு செய்துவந்த ஆதிமனிதன், பிற்காலத்தில் வேதாந்திகளாலும், கலாந்திகளாலும் சிருஷ்டிக்கப்பட்ட தெய்வமூர்த்தங்களை வழிபட்டு பக்திமார்க்கத்தில் மனம் ஒன்றினைந்து, அறிவுபூர்வமாக மனித இனம் பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளது.

உருவ வழிபாடு மூலம் இறை உணர்வைப் பெருக்கிக் கொண்டு அருவநிலையிலுள்ள பரம்பொருளைத் தியானித்து சிரவண மனன நிதுத்தியாசம் (கேட்டல்—சிந்தித்தல்—தெளிதல்) மூலம் பக்தியோகம், கர்மயோகம், இராஜயோகம், ஞானயோகம் மற்றும் ஆன்ம விசாரணை வாயிலாகத் தூய்மையான ஞானமாகிய உண்மைப் பேரறிவினைப் பெறுவதற்கு, போதாந்த அறிவு நமக்கு தேவைப்படுகிறது.

ஜீவாத்மாவின் இத்தகைய பரிணாம வளர்ச்சியை நமது முன்னோர்கள்.

**''புல் ஆகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்அசுரராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லா அ நின்ற இத்தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்''**

என்று மணிவாசகப் பெருமானும் மற்றும் பல அருளாலர்களும் பாடியுள்ளார்கள்.

அண்டத்திலுள்ள ஐம்பூதத் தத்துவார்த்தம் பிண்டத்தில் எவ்வாறு சேர்க்கையாகி ஜீவராசிகள் எப்படி உற்பத்தியாகியது என்ற விவரங்கள், சித்தர் இலக்கியங்கள் போன்ற பலப் பூர்வ நூல்களில் கூறப்பட்டுள்ளது.

மண்ணின் (பிருத்வி) அம்சமாக ஊன்றப்படும் வித்துக்களால் புல், பூண்டு. செடி, கொடி, மரம் முதலியன உற்பத்தியாகின்றன.

நீர் (அப்பு) அமசமாக உடற்சேர்க்கையால் கருவுற்று மனிதனும் மற்றும் விலங்கினங்களும் உற்பத்தியாகின்றன.

காற்று (வாயு) அம்சமாக முட்டை இட்டு குஞ்சு பொறித்லால் கோழி, வாத்து, பல்லி, பாம்பு, போன்ற பறப்பனவும் ஊர்வனவுமாகிய ஜீவராசிகள் உற்பத்தியாகின்றன.

நெருப்பு (தேயு) அம்சமான வியர்வை மற்றும் வெப்ப உணர்வுகளால் ஈ, புழு, மீன், பேன் போன்ற இனங்கள் உற்பத்தியாகின்றன.

ஆகாயம் (பரவெளி) அம்சமாய் எது பிரம்ம சிருஷ்டி என்று பேசப்படுகிறதோ, அதுவே ஜீவாத்மாவிடம் அறிவு, ஆன்மா, உயிர் என்றுபேசப்படுகிறது.

ஓரறிவு உடையன தாவரங்களாகும். அவை உணர்வு (ஸ்பரிசம்) மட்டும் அறிவும்.

ஈரறிவு உடைய சிப்பி, சங்கு, புழு, மீன் போன்றவை ஆகும். அவை உணர்வும், ருசியும் அறியும்.

மூவறிவு உடைய கறையான், எறும்பு, பல்லிபோன்ற ஊர்வன வற்றுக்கு உணர்வு, ருசி, வாசனை அறியும் சக்தியுண்டு.

நான்கு அறிவு உடையன பாம்பு, தும்பி, வண்டு, தேனீ போன்ற உயிரினங்க்ளுக்கு உணர்வு, ருசி, வாசனை, உருவம் (ரூபம்) ஆகியவற்றை அறியும் திறன் உண்டு. பாம்புக்கு கண்களே செவியாகி விடுகிறது.

ஐயறிவு உடையன பறவை மற்றும் மிருக இனங்களாகும். அவைகள் உணர்வு, ஓசை, ருசி, வாசனை, உருவம் அறியக் கூடியவையாகும்.

ஆறறிவு உள்ளவன் மனிதன். கண்களால் பார்க்கிறான். காதுகளால் கேட்கிறான். நாவினால் சுவைக்கிறான். மூக்கினால் முகர்கிறான். மெய் (தோல்) உடலால் உணர்கிறான், இவ்வைந்து அறிவுக்கும் மேலாக அந்தகரணங்களின் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) உதவியினால் இறைநிலை அடைய ஆறாவது அறிவாகிய ஞானத்தை அறியும் அறிவுடையவனாகவும் இருக்கிறான். ஆகவேதான் மனிதன் ஆறறிவு உடையவன் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், மனிதன் அந்த ஆறாவது அறிவான ஞானத்தைப் போற்றிக் கடைப்பிடிக்கிறானா என்பது கேள்விக் குறியாகி விட்டது.

'மனிதன் ஒருவன்தான் கடவுளுக்கு மிக நெருங்கிய சம்பந்த முள்ளவன்' என்று வேதங்களும் உபநிஷத்துக்களும் யோக நூல்களும், சித்தர் இலக்கியங்களும் தெளிவுபடுத்துகின்றன,

'அண்டமே பிண்டம் பிண்டமே அண்டம்' எனப்படும் தத்துவம் யாதெனில், பரமாணுவும், பஞ்சபூதங்களும். கிரகங்களும் அதன் செயல்பாட்டின் மூலம் மனிதனை இயக்குவிக்கிறது. மனிதனும் வானுலகக் கோள்களின் இயக்கத்துக்கு உட்பட்டவன் ஆகிறான்.

அண்டத்திலுள்ள நவகிரகங்கள் எனப்படும். ஒன்பது வகையான கோள்கள் பருவுடலுடன் எவ்வாறு உணர்த்தப்பட்டுள்ளது என்பது கீழே விளக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| சந்திரன் | — | உடல் |
| சூரியன் | — | உயிர் |
| செவ்வாய் | — | கண்கள் |
| புதன் | — | மெய்-தோல் (ஸ்பரிசம்) |
| குரு | — | மூக்கு (மணம்) |
| சுக்கிரன் | — | நாக்கு (ருசி) |
| சனி | — | செவி (ஒலி) |
| இராகு | — | குதம் (மலவாய்) |
| கேது | — | குய்யம் (ஜனை உறுப்பு) |

மனிதனின் உடல், உயிராற்றல். ஆன்மா ஆகியவற்றுக்கு ஆதாரமாக உள்ளது தொண்ணூற்றாறு தத்துவங்கள் ஆகும் என்று மெய்ஞான நூல்களில் கூறப்பட்டுள்ளது, இவ்வகையிலான தொண்ணூற்றாறு தத்துவங்கள் சிவப்பிரகாசக்கட்டளை, திருவாலவாய்க்கட்டளை, வேதாந்தக் கட்டளை தத்துவ தீபிகைக்கட்டளை, சித்தாந்தக்கட்டளை, யூகி முனிவர் சிந்தாமணிக் கட்டளை என்ற பல வகையான பூர்வ நூல்களில் விளக்கப்பட்டுள்ளது. இவைகள் ஒன்றுக்கொன்று சில மாறுபட்ட தத்துவங்களைக் கொண்டுள்ள போதிலும் இவைகள் அனைத்தும் மொத்தத்தில் கூட்டுத் தொகையாக தொண்ணூற்றாறு தத்துவங்களைக் கணக்கில் கொண்டுள்ளது. இவ்வனைத்து தத்துவக் கட்டளைகளைகளைப் பற்றியும் எழுதுவதானால் நூல் விரிவுபடும் என்ற கருத்தினால், சுத்த அத்வைத சைவசமய சார்புடைய சிவப்பிரகாசக்கட்டளை. யோக சாத்திரங்களை அடிப்படையாகக் கொண்ட வேதாந்தக்கட்டளை ஆகிய இவ்விரு கட்டளைகளில் கூறப்பட்டுள்ள தொண்ணூற்றாறு தத்துவ விளக்கங்களை மட்டும் இந்நூலில் விரிவுபட எழுதப்பட்டுள்ளது.

வேதாந்தத் தந்துவக் கட்டளையில் கூறப்பட்டுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்கள் பின்வருமாறு :

பூதங்கள் 5, பொறிகள் 5, புலன்கள் 5, கன்மேந்திரியம் 5, கன்ம விஷயம் 5, அந்தக்கரணம் 4, அறிவு 1, நாடிகள் 10, வாயுக்கள் 10, ஆசயம் 5, கோசம் 5, ஆதாரம் 6, மண்டலம் 3, மலம் 3, தோஷம் 3, ஏடணை (வேதனை) 3, குணம் 3, இராகம் 8, வினை 2, அவஸ்தை 5=96.

வேதாந்தக் கட்டளையில் கூறப்பட்டுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களின் விளக்கங்கள் பின்வருமாறு :

**பூதங்கள்—5** மண், நீர், தீ, காற்று, ஆகாயம்.

**பொறிகள்—5** (ஞானேந்திரம்) மெய், நாக்கு, கண், மூக்கு, செவி.

**புலன்கள்—5** (தன் மாத்திரைகள்) சுவை, ஒளி, உணர்தல், ஓசை, வாசனை.

கன்மேந்திரியங்கள்—5 கை, கால், வாய், கருவாய், எருவாய்.

கன்ம விஷயம்—5 வசனம் (வாய்) சொல்லல், கமனம் (கால்) நடத்தல், தானம் (கை) கொடுத்தல், வாங்குதல் விடுத்தல் (எருவாய்) மகிழ்தல் (கருவாய்).

**அந்தக்கரணம்—4** மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

**அறிவு—1** தன்னைக் கண்டு மகிழ்ந்திருத்தல்.

**நாடிகள்—10** இடகலை, பிங்கலை, சுழுமுனை, சிங் குவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு,

**வாயுக்கள்—10** பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்.

**ஆசயம்—5** அமர்வாசயம், பகிர்வாசயம், ஜலவாசயம், மலவாசயம், சுக்கிலவாசயம்.

1. **அமர்வாசயம்** என்பது இரைப்பை என்றும் இரைக்குடல், என்றும் வழங்கப்படுகிறது. சாப்பிடும் அன்ன ஆகாரம் தங்குமிடம்.

2. **பகிர்வாசயம்** என்பது செரிகுடல் ஆகும். சாப்பிடும் உணவு வகைகள் ஜீரணம் ஆகும் இடம்.

3. **ஜலவாசயம்** என்பது நீர்க்குடல் என்பதாகும், அருந்தும் நீர் தங்கும் இடம் நீர்க்குழி என்றும் கூறுவர்.

4. **மலவாசயம்** என்பது அன்ன சாரத்திலிருந்து வெளியாகும் மலமாகிய கழிவுகள் தங்கும் மலக்குழி ஆகும்,

5. **சுக்கில வாசயம்** என்பது வெண்ணீர் (விந்து) மற்றும் சுரோணிதம் பிரியுமிடம்.

**கோசம்—5** அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம், என்பவையாகும். கோசம் என்றால் உறைவிடம் (தங்கும் இடம்) என்று பொருள்.

அன்னமயகோசம் என்பது நாம் சாப்பிடும் உணவு வகைகளின் சாரத்தினால் ஊனுடம்பு (பரு உடம்பு)வளர்ச்சிக்குத் தேவையான இரசம், குருதி, தசை, கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை (எலும்பினுள் உள்ள சதைப்பிடிப்பு),விந்து ஆகிய ஏழுவகையான தாதுக்கள் அடங்கிய உடற்கட்டு அன்னமயகோசம். எனப்படும்

பிராணமயகோசம் என்பது காற்று உடம்பு என்றும் வளி உடம்பு என்றும் வழங்கப்படும். பிராணவாயு முதலான பத்து வாயுக்களின் இயக்கமும் கை, கால், வாய், கருவாய், எருவாய். ஆகிய கன்மேந்திரியங்களை மையமாகக் கொண்டது பிராணமயகோசம்.

மனோமயகோசம் என்பது மன உடம்பு எனப்படும். இது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றும் அந்தக்கரணங்களுடன் மெய், நாக்கு, கண், மூக்கு, செவி, ஆகிய ஞானேந்திரிய இயக்கங்களுடன் கூடியஉடம்பு மனோமய கோசம் எனப்படும்.

விஞ்ஞானமயகோசம் என்பது அறிவு உடம்பு எனப்படும். புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடிய திரேக விஷயங்களை அறியும் இயல்பும், ஆற்றலும் கொண்ட திறனாய்வுடன் கூடிய உடம்பு.விஞ்ஞான மயகோசம்.

ஆனந்தமயகோசம் என்பது இன்ப உடம்பு என்றும் வழங்கப்படும். அறிவு, இச்சை, உடலுறவு, ஆகியவற்றுடன் உறக்க (சுழுத்தி) நிலையுடன் கூடியது ஆனந்தமயகோசம்.

ஆதாரம்—6 மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞா எனப்படும்.

1. **மூலாதாரம்** குத்துக்கும் (மலவாய்) மூத்திரக் குழாய் (குய்யம்)க்கும் நடுவிலுள்ள இடம் மூலாதாரம்.

2. **சுவாதிஷ்டானம்** மூலாதாரத்துக்கு இரண்டு விரற்கடைக்கு மேலே கொப்பூழ் பகுதியிலுள்ளது. சுவாதிஷ்டானம்,

3. **மணிப்பூரகம்** சுவாதிஷ்டானத்துக்கு (கொப்பூழ்) மேல் எட்டு விரற்கடைக்கும் மேலே உள்ள மேல்வயிற்றுப் பகுதி மணிப்பூரகம்.

4. **அனாகதம்** என்பது மணிப்பூரகத்துக்கு மேலே பத்து விரற்கடைக்கு மேலேயுள்ள இருதய நிலைக்கு அனாகதம் எனப்படும்.

5. **விசுத்தி** என்பது அனாகதத்துக்கு மேலே பத்துவிரற் கடைக்கு மேலேயுள்ள நெஞ்சுக்குழிக்கு விசுத்தி எனப்படும்.

6. **ஆக்ஞா** என்பது விசுத்திக்குப் பன்னிரண்டு விரற் கடைக்கு மேலேயுள்ள புருவ நடுப்பகுதிக்கு (லலாடஸ்தானம்) ஆக்ஞா எனப்படும்.

**மண்டலம்—3** அக்கினி மண்டலம், ஆதித்தமண்டலம். சந்திரமண்டலம்.

அக்கினி மண்டலம் என்பது மூலாதாரத்துக்கு இரண்டு விரற்கடைக்கு மேலுள்ள பகுதி அக்னிமண்டலம். குதமும் (பிருதிவி) குய்யமும் (நீர்)கூடிய இடம்என்றும் கூறலாம். ஆதித்த மண்டலம் என்பது இருதய கமலப்பகுதியாகும். சந்திரமண்டலம் என்பது தலையின் நடு (உச்சிப்) பகுதியில் நிலையாக நிலை கொண்டு இருக்கும் பகுதி சந்திரமண்டலம் எனப்படும். இதை அமுதகலை என்றும் கூறுவர்.

**மலம்—3**

1. **ஆணவம்,** மாயை, காமியம் ஆகும். ஆணவம் என்பது 'நான் எனது' என்று அறியாமையினால் பேசி அறிவாற்றலை இழந்து விடுவது.

2. **மாயை** என்பது எந்த ஒரு பொருளையும் தன்னுடைய தாக்கிக் கொள்ளும் நினைப்புடன் (வேட்கையுடன்) துன்பத்தைத் தேடிக் கொள்வது மாயை.

3. **காமியம்** என்பது முந்தைய ஆணவம், மாயை என்ற இருநிலைகளுடன் நல்வினை, தீவினைகளைப் பகுத்தறியாத நிலை காமியம் எனப்படும். காமியம் கன்மம் என்பதும் ஒன்றேயாகும்.

**தோஷம்—3** வாதம், பித்தம், கபம், இந்த மூவகைத் தோஷங்கள் உடல் முழுவதும் பரவியுள்ளது. இருப்பினும் வாதம் (வளி) கொப்பூழ்க்கு கீழும், அனலின் தன்மையை ஒத்த பித்தம் (அழல்) நாபிக்கும். இதயத்துக்கும் இடையேயுள்ள பாகங்களி

லும், கபம் (ஐயம்) இதயத்துக்கு மேலுள்ள பாகங்களிலும் பொது வாக நிரவி நிற்கும்.

**வாதம்** குணங்களாவன, நெகிழ்ச்சி, பரவுதல், விரைவாக இடம்விட்டு இடம் போதல், தண்ணென்றிருத்தல், நுண்ணிய தாய் கண்ணுக்குப் புலப்படாமல் இருத்தல். வாதத்தின் (வளி) இயற்கைப் பண்புகளாவன. ஊக்கமுண்டாக்குதல், மூச்சுவிடல் மூச்சுவாங்கல், மனம், மொழி, மெய்களுக்குரிய செயலைத் தருவது மலம் முதலியவற்றை வெளிப்படுத்தல், சாரம் முதலிய ஏழுவகைத் தாதுக்களை உடற்கட்டுக்கு ஒத்த நிகழ்ச்சியைத் தருதல். ஐம்பொறிகளுக்கும் வன்மையைக் கொடுத்து உடலுக்கு துணைபுரிதலே வாதத்தின் பண்பாகும். வாதம் பத்து வகையான வாயுக்களின் தொழிலோடும் சார்ந்து நிற்கும்.

**பித்தம்** (அழல்) குணங்களாவன உடலைக் காக்கும் தன்மை யுடையது, வெதுப்புதல், நுண்ணியத்தன்மை, நீர்த்தன்மை நெய்ப்பசையுடைமை, வெகுட்டல் தரும் குணமுடைமை, சூட்டைத் (உஷ்ணம்) தரல் ஆகியவையாகும். பித்தத்தின் இயற்கை பண்புகளாவன. உடலில் வெப்பம் உண்டாக்குதல், செந்நிறம் அல்லது மஞ்சள்நிறம் தோன்றல், உண்ட உணவுப் பொருட்கள் பக்குவமடையும் போதும் செரிக்கும் சமயத்திலும் வெப்பம் உண்டாக்குதல், வியர்த்தல், மயக்கம் ஏற்படல், செந்நீர் மிகுதல், அவ்வாறு மிகுந்த செந்நீர் வெளிப்படுதல் கண், தோல் (சருமம்) மலம், சிறுநீர் மஞ்சள் நிறம் அடைதல் சீற்றம், வணக்கமின்மை. அசைவு இன்மை, நினைவுவெறி, மெலிவு, எரிவு உண்டாகுதல். எந்த சுவையும் கசப்பாகவும் (கைப்பு) புளிப்பாகவும் இருத்தல்.

**கபம்** (ஐயம்) குணங்களாவன. குளிர்ச்சி, திடத்தன்மை, அழுத்தமுடைமை மாற்றமில்லாத நிலைமை, குழகுழப்பு, நெய்ப்பசையுடைமை, விரைதல் இல்லாதத் தன்மை, மெத் தெனும் தன்மை, இளகிய நிலையும், வழுவழுப்புடைமையு மாகும், கபத்தின் பண்புகளாவன நிலைத்தல், நெய்ப்பு, கீல் களின் அமைப்பில் கட்டுகள், பசி, நீர்வேட்கை, துயரம், கலக்கம், வெப்பம், இவைகளைப் பொறுத்துக் கொள்ளும். சமான வாயுடன் சம்பந்தப்பட்டது கபம். சுழுமுனை, விந்து, தலை, ஆக்ஞா, நாக்கு, உண்ணாக்கு, கொழுப்பு, (நிணம்), மஜ்ஜை, குருதி, மூக்கு, மார்பு, நரம்பு, எலும்பு, மூளை, பெருங்குடல், கண், மூட்டுகீல்கள், என்னும் இடங்களில் கபம் சார்ந்து இருக்கும். கபத்தின் தொழில் நெய்ப்பு, வன்மை, சொறிவு, தண்மை, பருத்தல், எலும்பின் மீது ஏதோ பூசப்பட்டது

போன்ற உணர்ச்சி, மூட்டுகீல்கள் தொழில் புரியாதிருத்தல், உடல் வெளுத்தல், உணவு விரைவில் செரியாமை, அதிக தூக்கம், நாவில் இனிப்புச் சுவை தோன்றல், தோல் (சருமம்) கண், மலம், சிறுநீர் வெண்ணிறமடைதல் சுறுசுறுப்பு இல்லாமை ஆகியவை கபத்தின் தொழிலாகும்.

**ஏடணை** (வேதனை)—3 அர்த்த (பொருள்) வேதனை. புத்திர வேதனை, உலக வேதனையாகும். அர்த்த (பொருள்) வேதனையாவது பணம் முதலியவற்றால் ஏற்படும் பற்றுதல் அல்லது பிணக்கு (சண்டை). புத்திரவேதனை என்பது பிள்ளைகள் முதலான சுற்றத்தாரால் ஏற்படும் பற்றுதல் அல்லது பிணக்கு. உலக வேதனை. உலகம் முதலான (லௌகீக) விஷயங்களில் பற்றுதல் அல்லது ஊருடன் ஒத்து வாழாத போக்கு (மனநிலை)

**குணம்—3** சத்துவம், இரஜோ. தாமசம் எனப்படும். சத்துவ குணங்களாவன. அருள், ஐம்பொறி அடக்கல், ஞானம். தவம்; பொறை, மேன்மை, மோனம், வாய்மை, ஆகிய எண் குணமடையது. இரஜோ குணங்களாவன. ஊக்கம், ஞானம், வீரம், அறம், தவம், ஈகை, கல்வி, கேள்வி, ஆகிய எண் குணமடையது. தமோ குணங்களாவன. காமம், சினம் கொலை, சோம்பல், நெடுந்துயில், பேருண்டி, மறதி, வஞ்சகம் ஆகிய எண்குணங்களாகும்.

**இராகம்— 8**காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் (உட்பகை) இடும்பை (கோபம்) அகங்காரம், ஆகியவைகளாகும்.

**வினை—2**. நல்வினை, தீவினையாகும்.

**அவஸ்தை—5** ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகியவைகளாகும்.

1. **ஜாக்கிரம்**, என்பது விழிப்புநிலையாகும். வலிமை மிக்க பிராணன் ஆக்ஞையுடன் இணைந்தநிலை. உடலில் காணும் நினைவும், உணர்வும் உள்ளநிலை ஜாக்கிரம் எனப்படும்.

2. **சொப்பனம்** பத்து வாயுக்களும் நெஞ்சுக்குள் நிலைக் கொள்ளும் சமயம் கனவுகள் (சொப்பனம்) தோன்றும் நிலை ஏற்படும்.

3. **சுழுத்தி** என்பது பழக்கப்பட்ட பிராணனும் உதானனும் இருதயத்தில் உறக்கம் கொள்ளும் நிலை சுழுத்தி எனப்படும்.

4. **துரியம்** என்பது ஒரு முகப்பட்ட பிராணன் உந்தியில் (வயிறு) கருக்கொள்ளும் நிலையான (நிஷ்டை, தியானம்) துரியம் எனப்படும்.

5. **துரியாதீதம்** என்பது திடமாக (ஆழ்நிலை) ஒரு முகப் படுத்தப்பட்ட பிராணன் கொப்பூழ் பகுதியில் நிலை கொள்ளும் சமாதி நிலை துரியாதீதம் எனப்படும்.

இதுவரை வேதாந்தக்கட்டளையில் கூறப்பட்டுள்ள தொண்ணூற்றாறு கட்டளையின் விளக்கங்களை அறிந்தோம். இனி சிவப்பிரகாசக் கட்டளையில் கூறப்பட்டுள்ள தொண்ணூற் றாறுதத்துவக்கட்டளையின் விளக்கங்கள் யாதென்று அறிவோம்.

**பூதங்கள்—5** மண், நீர், தீ, காற்று, ஆகாயம்.

**பொறிகள்** (ஞானேந்திரியம்)—5, மெய், நாக்கு, கண், மூக்கு, செவி.

**தன்மாத்திரைகள்—5**, சுவை, ஒளி, உணர்தல், ஓசை, வாசனை.

**கன்மேந்திரியங்கள்—5**. கை, கால், வாய், கருவாய், எருவாய்.

**அந்தக்கரணங்கள்—4**. மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

**சுத்த வித்யாதத்துவங்கள்—7**. காலம், நியதி, கலை, நினைப்பு, விருப்பு, புருடன், மாயை.

**சிவதத்துவங்கள்—5**. சுத்த வித்தை (தூயநினைவு) ஈசுரம் (தலைமை) சாதாக்கியம் (அருள்நிலை) சத்தி (அன்னை) அத்தன் (சிவம்).

**புறக்கருவிகள்** (பருவுடல்) பஞ்சீகரணம்—25 இவைகள் பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றும் ஐந்து கூறுகள் கொண்டதாகும்.

**மண் கூறு**—மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை, **நீர்க் கூறு**—ஒடுநீர், குருதி, வெண்ணீர் (விந்து) **மூளை** (மஜ்ஜை) கொழுப்பு. **தீக்கூறு**—உணவு, தூக்கம், அச்சம், உடலுறவு, சோம்பல், **காற்றின் கூறு** ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல், **விண்கூறு** காமம், குரோதம், உலோபம், மோகம், கொழுப்பு, (மதம்).

**வாயுக்கள்—10**. பிராணன் (உயிர் காற்று) அபானன் (மலக் காற்று) வியானன் (தொழில் காற்று) உதானன் (ஒலிக் காற்று) சமானன் (நிரவுக் காற்று) நாகன் (தும்மல் காற்று) கூர்மன்

(பார்வைக் காற்று) கிருகரன் (கொட்டாவிக் காற்று) தேவதத்தன் (இமைத்தல் காற்று) தனஞ்சயன் (வீக்கம்பண்ணும் காற்று)

**நாடிகள்—10.** இடகலை (இடதுநாசிக் காற்று) பிங்கலை (வலதுநாசிக் காற்று) சுழுமுனை (நடுமூக்குக் காற்று) சிங்குவை (உள் நாக்கு நரம்பு) புருடன் (வலதுகண் நரம்பு) காந்தாரி (இடது கண் நரம்பு) அத்தி (வலது செவி நரம்பு) அலம்புடை (இடது செவி நரம்பு) சங்கினி (கருவாய் நரம்பு), குகு (எருவாய் நரம்பு).

**வாசனாதிகள்—5.** வசனம், கமனம், தானம், விர்ச்சனம், ஆனந்தம், வசனம்—சொல்லுதல், பேசுதல்—வாய், கமனம்—நடத்தல்—கால், தானம்—வாங்குதல், கொடுத்தல் கை—விசர்ச்சனம், விடுதல்—எருவாய். ஆனந்தம்—மகிழ்தல்—கருவாய்.

**வாக்குகள்—4** சூக்குமை (நுண்ணோசை) பைசந்தி (நினைவோசை) மத்திமை (மிடற்றோசை) வைகரி (செவி யோசை)

**குணங்கள்—3** சத்துவம் (அமைதி) இரஜோ (எழுச்சி) தாமசம் (மயக்கம்)

**அகங்காரம்—3** தைசசா அகங்காரம், வைகாரி அகங்காரம், பௌதாதி அகங்காரம்.

மேலே குறிப்பிட்ட தொண்ணூற்றாறு தத்துவங்களின் செயல் முறை விளக்கங்கள் பின்வருமாறு.

**பூதங்கள்—5.** பிருதிவி (மண்) உரத்துத் தறிக்கும் கடினத் தன்மையுடையது. நிறம் பொன்மை வடிவம் நாற்சதுரம்.

**அப்பு**—(நீர்) குளிர்ந்துபதம் செய்யும். நிறம் வெண்மை, பண்பு—நெகிழ்ச்சி, வடிவம் இரு கோணம்.

**தேயு**—(தீ) சுட்டெரிக்கும், நிறம் செம்மை தொழில் உலர்த்தல், வடிவம் முக்கோணம்.

**வாயு** (காற்று) அசைந்து திரட்டும், வீசும், நிறம் கருப்பு. சுபாவம் நிறைத்தல், தொழில் விம்முதல், வடிவம் அறுகோணம்.

**விசும்பு** (ஆகாயம்) நிரந்தரமாய் அனைத்துக்கும் இடம் கொடுக்கும், நிறம் புகை. பண்பு இடம் கொடுத்தல், சுபாவம் நிற்றல், தொழில் போக்குதல், வடிவம் வட்டம்.

**ஐம்பொறிகள்—5.** (ஞானேந்திரியம்) சுரோந்திரம் (செவி) ஆகாயத்தத்துவமாய் ஒலியை அறியும். துவக்கு (மெய்—தோல்) இது காற்று அம்சம். ஸ்பரிசம் (உணர்வு) தோற்றுவிக்கும். சட்சு

(கண்) இது நெருப்பு அம்சமாய் இருந்து உருவத்தை (ரூபம் அறியச் செய்யும். சிங்குவை (நாக்கு) இது நீர் அம்சமா நின்று ருசியை அறிவிக்கும். கிராணம் (மூக்கு) இது மண் அம்சமாய் நின்று வாசனை அறியச் செய்யும்.

**தன்மாத்திரைகள்—5,** சுவை, ஒளி, உணர்வு, ஓசை, வாசனை.

கன்மேந்திரியம்—5 (தொழிலுறுப்புகள்) வாய்—ஆகாயத்தத் வமாய் நின்று பேச வைக்கும். கால்—(பாதம்) காற்று அம்சமாய் இருந்து நிற்றல், நடத்தல் ஆகிய தொழிலைச் செய்யும். பாணி (கை) நெருப்பு அம்சமாய் இருந்து கொடுத்தல் வாங்குதல் போன்ற தொழிலைச் செய்விக்கும். பாயுரு (எருவாய்) இது நீர் அம்சமாய் இருந்து மலத்தைக் கழிக்கும் உபஸ்த்தம் (கருவாய்) இதுமண் அம்சமாய் இருந்து விந்து (சுக்கிலம்—சுரோனிதம்) வெளிப்படுத்தி ஆனந்திக்கும்.

**அந்தக்கரணங்கள்—4,** சித்தம் (மனம்) புத்தி, அறிவு அகங்காரம்.

## சுத்தவித்யா தத்துவங்கள்—7

1. **காலம்**—சென்றது—நிகழ்வது—வருவது...

2. **நியதி**—கன்மபலத்தை உள்ளளவும் நிறுத்தும் நிலை

3. **கலை**—ஆணவத்தைச் சிறிது நீக்கி ஆன்மாவுக்கு கிரியை செய்யும்.

4. **வித்தை** — (நினைப்பு) ஆன்மாவுக்கு நினைப் ஞானத்தை உணர்த்தும்.

5. **அராகம்**—(விருப்பு) ஆன்மாவுக்கு இச்சையை எழுப்பும்

6. **புருடன்**—(ஜீவாத்மா) ஐந்து வகையான சுவை, ஒளி உணர்வு, ஓசை, வாசனை சுகத்தை உணர்த்திப் புலன் வழி அமரும் இடம்.

7. **மாயை**—குணரூப சித்த விருத்திகளில் ஜீவனை அழுத்து தன்மையாகும்.

## சிவதத்துவங்கள்—5

1. சுத்தவித்தை (தூய நினைவு) ஞானேந்திரியங்களான மெய், நாக்கு, கண், மூக்கு, செவி ஆகியவற்றின் செயல்பாடுகள் குறைந்திருப்பது.

2. **ஈசுரம்** (தலைமை) ஞானேந்திரியங்களின் (மெய், நாக்கு, கண், மூக்கு, செவி) செயல்பரடுகள் மிகுந்து, ஞானம் குறைந்திருப்பது. 3. சாதாக்கியம் (அருள் நிலை) ஞானேந்திரியங்களின் செயல்பாடும் ஞானநிலையும் ஒத்து இருப்பது. 4. சத்தி (அன்னை) சக்தி தத்துவமாய் இருந்து இயக்குவித்தல் 5. அத்தன் (சிவம்) சிவதத்துவத்தோடு ஞானநிலையில் இருப்பது.

**புறக்கருவிகள் :** (பருவுடல்] பஞ்சீகரணம்—25 இவைகள் பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றுக்கும் ஐவகைக்கூறுகள் கொண்டவையாகும்:

**மண் :** (பிருதிவி) தத்துவம்—5. மண்ணில் மண்ணாய் இருத்தல் எலும்பு, மண்ணில் நீர் சேர்க்கையால் மாமிசம். மண்ணில் தீ. சேர்க்கையால் தோல். மண்ணில் காற்று சேர்க்கையால் நரம்பு. மண்ணில் ஆகாயம் சேர்க்கையால் மயிர்.

**நீர் :** (புனல்) தத்துவம்—5 நீரில் நீர் சேர்க்கையால் சிறுநீர். நீரில் மண்சேர்க்கையால் உமிழ்நீர். நீரில் தீ சேர்க்கையால் வியர்வை. நீரில் காற்று சேர்க்கையால் இரத்தம். நீரில் ஆகாயம் சேர்க்கையால் விந்து (சுக்கிலம்—சுரோணிதம்)

**தீ :** (அனல்) தத்துவம்—5. நெருப்பில் நெருப்பு சேர்க்கையால் தூக்கம். நெருப்பில் மண்சேர்கையால் பசி. நெருப்பில் நீர் சேர்க்கையால் தாகம். நெருப்பில் காற்று சேர்க்கையால் அசதி. நெருப்பில் ஆகாயம் சேர்க்கையால் ஆண் பெண் உடலுறவு.

**காற்று :** (வளி) தத்துவம்—5. காற்றில் காற்றுசேர்க்கையால், ஓட்டம். காற்றில் மண் சேர்க்கையால் படுத்தல். காற்றில் நீர் சேர்க்கையால் நடத்தல். காற்றில் தீசேர்க்கையால் உட்காருதல். காற்றில் ஆகாயம் சேர்க்கையால் தாண்டுதல்.

**ஆகாயம் :** (விண்) தத்துவம்—5 ஆகாயத்தில் ஆகாயம் சேர்க்கையால் மோகம். ஆகாயத்தில் மண் சேர்க்கையால் இராகம். (இராகம் எண்வகைப்படும். அவைகள்—காமம், குரோதம், லோபம், மதம், மாச்சரியம், அச்சம், கோபம், மோகம்,) ஆகாயத்தில் நீர் சேர்க்கையால் துவேஷம். ஆகாயத்தில் தீ சேர்க்கையால் பயம், ஆகாயத்தில் காற்று சேர்க்கையால் நாணம் (வெட்கம்)

**வாயுக்கள்—10**

**பிராணவாயு :** இது இருதயப் பகுதியிலிருந்து மூக்கு வழியாக சுவாசிப்பதன் மூலம் மேல் நோக்கி நடந்து பசி தாகங்களை உண்டாக்கிப் புசித்த ஆகாரத்தை ஜீரணம் செய்விக்கும்.

**அபானவாயு :** இது குதத்தைப் (எருவாய்) பற்றி நின்று மலம், மூத்திரம், சுக்கிலம் (விந்து) சுரோணிதம் ஆகியவற்றை வெளியில் தள்ளிவிடும்.

**உதானவாயு :** இது கண்டம் (தொண்டை) பகுதியிலிருந்து உணவு வகைகளை உள்ளுக்கு விழுங்கச் செய்து உணவு சாரங்களை (வைட்டமின்) நரம்புகளில் வியாபிக்கச் செய்யும். சுவாசப்பைகளைக் கட்டுப்படுத்தும். குரலோசை எழுப்பும். தூங்கும்போது கண்கள், மூக்கு, வாய், செவி, சரீரத்தின் மேலிருக்கும் தோல் ஆகிய ஐந்து இந்திரியங்களை அஞ்ஞானம் என்னும் இருளில் அழுந்தச் செய்யும்,

**சமானவாயு :** இது நாபிப் பகுதியிலிருந்து உதான வாயுவினால் அனுப்பப்பட்ட சாரத்தை நரம்புகள் மூலம் பகிர்ந்தளித்து தேகத்தைத் திடமாக வளரச் செய்யும்.

**வியானவாயு :** இது சரீரத்தில் எல்லா இடங்களிலும் வியாபித்து உணவு வகையிலுள்ள தாதுக்களைக் கிரகிக்கச் செய்யும். புசித்த உணவிலிருந்து திப்பி வேறு ரசம் வேறாகப் பிரித்தெடுக்கும்.

**நாகன் வாயு ;** இது தொண்டையிலிருந்து வாந்தி உண்டு பண்ணும். அன்றியும் கண்களால் எல்லாவற்றையும் பார்க்கவும் செய்யும்.

**கூர்மன் வாயு :** இது கண்களைத் திறக்கவும், மூடவும் செய்யும்.

**கிருகரன் வாயு :** இது மூக்கிலிருந்து குருகுருத்து தும்மலை உண்டு பண்ணும்.

**தேவதத்தன் வாயு :** இது மார்பிலிருந்து கபத்தைச் சேர்த்து நெட்டித்தள்ளும். கொட்டாவி மற்றும் விக்கலை உண்டு பண்ணும்.

**தனஞ்ஜயன் வாயு :** இது கர்ப்பத்திலிருந்து பிண்டத்தை (சிசுவை) வெளியில் தள்ளும். உயிர் நீங்கிய சரீரத்தை வீங்க வைத்து நாற்றமெடுக்கச் செய்யும். மரணம் அடைந்த சரீரம் தகனம் செய்யும் வரை உடலில் தங்கியிருக்கும் வாயு தனஞ்ஜயனாகும்.

**நாடிகள் — 10**

**இடைகலை :** இது வலதுகால் பெருவிரலில் இருந்து இடது நாசி துவாரத்தைப் பற்றி நிற்கும்.

**பிங்கலை :** என்பது இடது கால் பெருவிரலிலிருந்து வலது நாசி துவாரத்தைப் பற்றி நிற்கும்.

**சுழுமுனை :** மூலாதாரத்திலிருந்து ஆரம்பித்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாக இருபுருவமத்தியில் தங்கி நிற்கும்.

**சிங்குவை :** நாடி உள்நாக்கினைத் துணைக் கொண்டு நிற்கும்.

**புருடன் :** வலது கண்பக்கம் இயங்குவது.

**காந்தாரி :** இடதுகண் பக்கம் இயங்குவது.

**அத்தி :** வலது காது பக்கம் இயங்குவது.

**அலம்புடை :** இடது காது பக்கம் இயங்குவது,

**சங்கினி :** இது ஆண் பெண் குறியினை இயக்குவது.

**குகு :** அபானனுக்குத் துணையாகக் குதத்தைப் (எருவாய்) பற்றி மலத்தை வெளிப்படுத்தும்.

**வாசனாதிகள்—5.** தொழிலுறுப்புகளின் ஐவகைச் செயல்கள் வாசனாதிகள் எனப்படுகிறது. அவைகள் வசனம், கமனம், தானம், விசாச்சனம், ஆனந்தம் எனப்படும். ஐந்து வகையான தொழிலுறுப்புகளின் செயல் விளக்கம் பின்வருமாறு : வசனம்—என்பது பேசுதலாகிய வாயின் தொழிலாகும். கமனம்—என்பது நடத்தலாகிய கால்களின் தொழிலாகும். தானம்—என்பது கொடுத்தல் வாங்கலாகிய கைகளின் தொழிலாகும். விசாச்சனம் என்பது விடுதல் என்பதாகும். இது அபானனின் தொழிலாகும். ஆனந்தம்—என்பது மகிழ்தல். இது ஆண் பெண் குறிகளுக்குரிய தொழிலாகும்.

**வாக்கு—4** சூக்குமை (நுண்ணோசை) என்பது நேர்மையாய் ஒன்று சொல்ல வந்த இடத்தில் துரியத்தில் நாதமாய் தோன்றுவது. பைசந்தி (நினைவோசை) என்பது சுழுத்தியைப் பொருந்திய நாதம். இது உதானவாயுவின் துணையினால் ஒலி அலைகளை வெளிப்படுத்தும். மத்திமை (மிடற்றோசை) என்பது பிராணவாயுடன் சேர்ந்து பேச்சின் ஒலி அலைகளை வாயின்மூலம் வெளிப்படுத்தாமல் கண்டத்தினுள்ளேயே (தொண்டையினுள்ளே) ஒலி நிற்பது. வைகரி (செவியோசை) என்பது நாக்கு, உதடு, உள்நாக்கு (அண்ணாக்கு) பல், மூக்கு, யாவற்றினின்றும் புறப்பட்டு ஒலி எழுப்பிப் பேசப்படுவதும் செவிக்கு உணர்த்தப்படுவதுமான வாக்கும் பேச்சும் ஆகும்.

**குணங்கள்—3**

**சத்துவம் :** அருள், ஐம்பொறி அடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மை, ஆகிய எண் வகை யுடையது.

**இரஜோ :** என்பது—ஊக்கம், ஞானம், வீரம், அறம், தவம், ஈகை, கல்வி, கேள்வி, ஆகிய எண்வகைக் குணங்களையுடையது.

**தாமசம் :** என்பது—காமம், சினம், கொலை, சோம்பல், நீண்ட தூக்கம், பெரும்தீனி, மறதி, வஞ்சகம் ஆகிய எண் வகைக் குணங்களையுடையது.

**அகங்காரம் (முனைப்புகள்)—3 தைசசா அகங்காரம்** என்பது சத்துவ குணத்தினையுடைய இவ்வகங்காரத்தில், புத்தியும். இந்திரியங்களாகிய கண், காது, மூக்கு, செவி. மெய் ஆகிய வற்றின் விருத்திகள் தோன்றும்.

**வைகாரி அகங்காரம் :** என்பது இரஜோ குணத்தினையுடைய இவ்வகங்காரத்தில் கருமேந்திரியங்களான கை, கால், வாய், எருவாய், கருவாய் ஆகிய ஐந்தின் விருத்திகள் தோன்றும்.

**பௌதாதி அகங்காரம் :** என்பது தாமச குணத்தினை யுடைய இவ்வகங்காரத்தில், சுவை, ஒளி, ஊறு, ஓசை, வாசனை, ஆகிய ஐவகை தன் மாத்திரைகளின் (புலன் வழி) விருத்திகள் தோன்றும். இவ்வாறாக சிவப்பிரகாசக் கட்டளையில் தொண்ணூற்றாறு தத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளது.

இந்த தொண்ணூற்றாறு தத்துவங்கள் அடங்கியுள்ள ஆன்ம (உயிர்) இயல்பற்றி திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் பின்வருமாறு கூறியுள்ளார், ''மெய்க்கூற்றில் அடங்கி யுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களுடன் கூடிய உடம்பில் உயிர் இருக்கவும், நிலைபெறவும் காரணமாயுள்ள ஆத்மாவிற்கு அனேக ஆதாரங்கள் உண்டு. தேவரீர் திருவருட் சுதந்திரத்தை என்னிடத்தே வைத்தருளி மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம், அவஸ்தைகள் எல்லாவற்றையும் தவிர்த்து இத்தேகத்தை நித்ய தேகமாக்கி எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெரு வாழ்வில் என்னை வாழ்வித்தல் வேண்டும்'' என்று திருவருட் பிரகாச வள்ளலார் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரிடம் விண்ணப்பித்து வேண்டுகோள் விடுக்கிறார்.

வள்ளலாரின் வேண்டுதல் போன்று மரணமில்லாப் பெரு வாழ்வு வாழ வேண்டுமென்றால் அரிதான பிறவி எடுத்துள்ள மனிதப் பிறவியின் இறைநிலைத் தத்துவத்தை உணர்ந்து

நல்வழி நடந்து மூத்தோரின் அறிவுரைப்படி உள்ளத் தூய்மையுடனும் பற்றுதலற்ற இயல்புடனும் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஒழுக்கமான தூய வாழ்க்கையை மேற்கொண்டு சொல்லாலும் செயலாலும் சிந்தனையினாலும் மற்றவர்களுக்கு யாதொரு தீங்கு செய்யாமலும், அன்பு-அருள்-கருணையுடன் எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க நல்லிணக்கத்துடன் செயல் முறைகளை (கர்மாக்களை) மேற் கொள்வது தவநிலை முயற்சியாகும்.

தவம் என்றால் சந்நியாசம் பெற்றுக் காடு மலை என்று சுற்றித்திரிந்து தவப்பயிற்சி மேற்கொள்ள வேண்டுமென்று நினைக்க வேண்டாம்.

ஒழுக்கமான சிந்தனை இல்லையென்றால் சொல்லும் செயலும் சீரற்றுப் போகும். சித்த (மன) விருத்திகளின் தன்மையை அறிந்து அவ்விருத்திகளின் சீர்கேட்டினை அழிக்க தியானப் பயிற்சிகளையும் யோக சாதனைகளையும், ஞானம் என்னும் உண்மைப் பேரறிவினையும் அருந்துணையாக நாம்மேற் கொள்ள வேண்டும்.

மனத்தின் உணர்வுகளின் பதிவுகவாகிய எண்ணங்கள் (ஆசைகள்) நிறைவேறாத போது ஏக்கம் உண்டாகிறது. ஏக்கம் மிகுதியானால் ஆசைக்கு மனம் அடிமையாகி விடுகிறது. பின்னர் ஆசை பேராசையாகிறது. அதன் காரணமாக காமம், கோபம், குரோதம், லோபம், மோகம். மதம், மாச்சரியம் ஆகிய கீழ்ச் செயல்களுக்கு மனம் வித்திட்டு விடுவதால் மன அமைதி கெடுகிறது. அறிவின் மேலாதிக்கத்துக்குக் கட்டுபபடாத மனம் தீங்கு விளைவிக்கக் கூடிய புலன்வழித் தூண்டுதல்களுக்கு ஆட்பட்டு துன்பங்கள் அனுபவிக்க நேரிடுகிறது. இவ்வகையிலான துயரங்களில் இருந்து விடுபட வேண்டுமென்றால், மனத்தை ஒருமுகப்படுத்தும் தியானப் பயிற்சிகளிலும் யோகசாதனைகளிலும் ஈடுபட வேண்டும்,

இன்பமும் துன்பமும் மனத்தின் தூண்டுதலினால் ஏற்படும் வினைப் பயன்களேயாகும். ஒழுங்கற்ற செயல்பாட்டின் (கர்மாக்களின்) தாக்குதல் துன்பமாகும். நிலையான ஆனந்தம் எனப்படும் இறைநிலை உணர்வு பெறுவதே விவேகம், தவப்பயன், ஞானம் எனப்படும்.

ஒரு பொருளை அடைவதற்கும் ஒருவரின் அன்பைப் பெறுவதற்கும் இடையூறாக அனுபவிக்க நேரிடும் துன்பத்தையும் துயரத்தையும் மனம் வெகு விரைவில் மறந்துவிடுகிறது.

நிராசையால் மனத்தளவில் அனுபவிக்க நேரிடும் துன்பத்தையும், தொல்லைகளையும் உணர்வுகளின் படிவங்களாக்கி மனம் அடிதளத்தில் பதிவு செய்து விடுகிறது. அத்தகைய உணர்வு அலைகளின் அதிர்வுகள் ஆழ்மனத்தின் தூண்டுதலுடன் நிராசையை மீண்டும் நிறைவேறும் ஆசைகளாக மாற்றிக் கொள்ள மனம் புது உத்திகளை சிந்திக்கிறது.

எந்த ஒரு பொருளினால் நமக்கு நிலையான சுகமும் அனுகூலமும் இல்லை என்று புத்தி புலப்படுத்துகிறதோ அதை மனம் பொருட்படுத்துவது இல்லை. ஆசையின் காரணமாக மனம் அப்பொருளின் மீதுள்ள பற்றுதலை விட்டுவிடுவதில்லை. அதை நினைந்து நினைந்து ஏக்கம் மிகக் கொண்டு சஞ்சலத்துடன் மனம் வேதனையில் ஆழ்கிறது. இவ்வகையிலான விசித்திரப் போக்குக்குக் காரணம் என்னவென்பதை மனத்தை மேலாதிக்கம் செய்யக்கூடிய அறிவின் துணைக் கொண்டு விவேகமும், ஞானமும் பெற்றுவிட்டால், மனம் என்ற உடலாதிக்கச் சக்தி ஒன்று உள்ளது என்பதையும் நாம் மறந்துவிட முடியும்.

புலன் வழித் தோன்றும் இன்ப உணர்வுகளை அறிவு பூர்வமாகச் சிந்தித்து சித்தத்தின் (மனம்) விருத்திகளை ஒழிப்பது எதுவோ அதுவே யோகம். தவம் என்று யோகசாஸ்திர நூல்களில் கூறப்பட்டுள்ளது.

"வெளியிடை ஒன்றே விரிந்து அதில் பற்பல
அளிஉற வகுத்த அருட் பெருஞ்ஜோதி
வெளியிடைப் பலவே விரிந்து அதிற்பற்பல
அளிதர அமைந்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடை உயிர் இயல் வித்து இயல் சித்து இயல்
அளிபெற அமைந்த அருட்பெருஞ் ஜோதி
வெளியில் அனைத்தையும் விரித்து அதில் பிறவும்
அளிஉற அமைந்த அருட்பெருஞ் ஜோதி"

அகவல் 505-512

என்று திருவருட்பிரகாச வள்ளலார் பஞ்சபூத தத்துவங்களுடன் பஞ்சீகரண விளக்கத்தையும் அருட்பெருஞ் ஜோதி அகவல் மூலம் தெளிவு படுத்தியுள்ளார்.

"ஆகாயத்தில் (வெளியிடை) பலவகைக் கோள்கள் பல ஒளி நிலைகளுடன் இயங்கி வந்தாலும் அண்டம் (ஆகாயம்) ஒன்றெனத் தோன்றுவது போலவும், அப்பர வெளி தத்துவத்தில் ஆன்ம (உயர்) இயல், வித்து (அறிவு) இயல், சித்து (அருப) இயல்களைக் கொண்டு ஆகாயப் பெருவெளியாகிய அண்டத்தில் பரவி கிடக்கும் அருட்பேரொளி கருப்பிண்டத்தில் உருவாகும் ஜீவாத்மாக்களின் உயிர் (ஆன்ம) இயலை மேலெழலைக்கும் ஊக்கமும், தயவும், ஒளிதரும் உடம்பும் பெறுவதற்குரிய வளர்ச்சியை பிண்டத்திலேயே தந்தருளுமாறு வேண்டுதல் புரிந்தால்,

"பிண்டத்தில் ஆன்மா, ஜீவன், அகக்கரணம், புறக்கரணம் என்ற நாலும் முறையே அண்டத்தில் ஆவன், அவள், அது, அல என்ற நாலுடன் இணைய, இவ்வெட்டையும் கடந்த மேல் ஒன்பதாம் நிலையில் பொருந்திய சிவத்தின்" திருவருட்கடாட்சத்தால் மனிதனும் தெய்வமாகலாம்.

"அவனோடு அவளாய் அதுவாய் அலவாய்
நவம்ஆம் நிலைமிசை நண்ணிய சிவமே."

அருட்பெருஞ்ஜோதி அகவல்-945

# 2. மனிதனும் தெய்வமாகலாம்

அன்னத்தில் சாரந்தோன்றி, சாரத்தில் செந்நீர் தோன்றி, செந்நீரில் தசை தோன்றி, தசையிலே கொழுப்பு தோன்றி கொழுப்பினில் எலும்புதோன்றி, எலும்பினில் மூளை (மஜ்ஜை) தோன்றி, மூளையில் வெண்ணீர் (விந்து) தோன்றியது என்றுக் கூறப்படும் அத்துவாதத்துவ வழி நெறியில், சுக்கிலச்சுரோணிதச் (விந்துநாதம்)சேர்க்கையால் கர்ப்பத்தில் பிண்டமாகி உருவாகும் மனிதன், எலும்புக்கூடு, நரம்பு, தசை முதலியவைகளினால் மட்டும் ஆக்கப்பட்டவன் என்று கூறுவது அறியாமையாகும்: மனிதனுள் அண்டத்திலுள்ள எல்லா பொருள்களும் சூட்சம நிலையில் அமைந்து கிடக்கின்றன என்பது வேதாந்த சாரமாகும்.

மனிதனுடைய உடல்( தேகம்) ஐந்து வகைகள் ஆகும் என்று கூறப்பட்டுள்ளது, அவைகள் இருள்தேகம் மருள்தேகம், சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம் எனப்படும்.

ஸ்தூல (பரு) உடலில் அபானத்தில் மலக் குற்றம், நாவில் நாடிக்குற்றம், கண்டத்தில் கபக்குற்றம், மேல் மூலத்தில் திரைக் குற்றம்' மனத்தில் ஆணவமனம், பொருந்தி ''நான்'' என்னும் அஞ்ஞானக் குற்றமுள்ள உடல் இருள் தேகம். மாயா சம்பந்தமாகத் தனக்கு வருவது தெரியாமல் அகங்காரம் கொள்வது மருள்தேகம். கருவி கரணாதிகளான ஐம்பொறிகள் மற்றும் ஐம்புலன்களின் விருத்திகளை அழித்து அறிவு அன்பு அருள்-கருணை - தொண்டு வடிவமாய்த் தேகம் பார்வைக்குத் தோன்றுவது சுத்த தேகம். தேகம் தோன்றினாலும் கைக்குப் புலப்படாததும் நிழல், சாயை இல்லாததுமாகியது பிரணவ தேகம்,கண்ணுக்குத்தோன்றாமல் அறிவுக்குமட்டும் புலப்படுவது ஞான தேகம்;

இவ்வகையிலான தேக அமைப்புகள் கொண்ட ஜீவர்களுக் குரிய அறிவு நான்கு வகைகள் ஆகும் என்று பூர்வ நூல்களில் கூறப் பட்டுள்ளது. அவைகள் ஆன்ம அறிவு, ஜீவ (உயிர்) அறிவு மன அறிவு, இந்திரிய அறிவு என அறிவியல் பகுத்துக் கூறப் பட்டுள்ளது.

ஒரு பொருளின் உண்மை நிலையை அறிவது ஆன்ம அறிவு: ஒரு பொருளின் பிரயோஜனம் (பயன்) பற்றி தெளிந்து அறியும் அறிவு ஜீவ (உயிர்) அறிவு. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனப்படும் அந்தக்கரணங்களுடன் சம்பந்தப்பட்டது மன அறிவு. ஒரு பொருளின் பெயரையும். உருவத்தையும் (நாமரூபம்) குணம் பயன் மற்றும் குற்றங்களையும் விசாரித்து அறிவதற்கு காரணமா யுள்ளது மன அறிவு. இந்திரிய அறிவு எனபது கண், செவி, மூக்கு, நாக்கு, மெய் ஆகியவைகளுடன் சம்பந்தப்பட்டது. ஒரு பொருளின் நாம ரூபம் (பெயர்—உருவம்) குணம், பயன், குற்றம் ஆகியவைகளைக் காணாமலும். விசாரியாமலும் இந்திரியங்களின் செயல்பாடுகள் (தன்மாத்திரைகள்) மூலம் அப்பொருள்யா தென்று கூறுவது இந்திரிய அறிவு.

இந்திரிய அறிவு யாதென்று உணர்த்துவதற்கான ஒரு உதாரணம் யாதெனில், மல்லிகை மலரின் மணம் காற்றோடு கலந்து வீசுகிறது. மலரின் மணத்தை மட்டும் சுவாசிக்க நேரிடும் சமயம், மலரைக் காணாமலும், மலரின் பெயர் யாதென்று கேட்டு அறியாமலும் 'மல்லிகை மணம் வீசுகிறது' என்று கூறப் படுவது இந்திரிய அறிவு ஆகும்.

அறிவு சொரூபியான ஜீவாத்மாவின் பேரறிவு ஆகிய ஞான சொரூபமே பிரம்மம் என்று வலியுறுத்தப்படுகிறது. ஆத்ம சொரூபியான மனிதன் பிரம்மத்தோடு இரண்டறக் கலந்து இறைநிலை அடைய முடியும்.

ஒரு சிறு ஆல விதையினுள் மிகப் பிரமாண்டமான ஆலமரம் உறைந்திருப்பது போன்று, சொல்லில் அடங்காத மிகப் பெரிய விஷயங்களை கிறுவாக்கியங்களின் வாயிலாக, நமக்கு மிகவும் சூட்சுமமாக 'மகாவாக்கியம்' என்ற பெயருடன் உண்மைப் பேரறிவின் மேன்மைகளை ஞானவிளக்கத்துடன் வேதங்கள் நமக்கு போதித்துள்ளது.

"பேரறிவே பிரம்மம்" (ப்ரஞ்ஞானம் பிரம்மம்) என்று ருக்வேதமும், "நான் அறிவு செரூபமாக இருக்கிறேன்" (அகம் பிரமாஸ்மி) என்று யஜுர்வேதமும், "நீ அறிவு சொரூபமாக இருக்கிறாய்" (தத்தவமஸி) என்று சாம வேதமும், "ஆத்மா அறிவு சொரூபம்" (அயமாத்மா பிரம்மம்) என்று அத்ர்வண வேதமும் நமக்கு தெளிவுபடுத்தியுள்ளது.

சைவசித்தாந்தத்தின் மகா வாக்கியமாக அமைந்துள்ளது பதி—பசு—பாசம் என்பதாகும்.

பிரம்ம சொரூபியான மனிதன் உண்மைப் பேரறிவாகிய ஞானத்தின் துணைக் கொண்டு தெய்வீக குணங்களுடன் வாழ வேண்டும். தெய்வீக குணங்கள் யாவை? அசுரகுணங்கள் யாவை? என்பதுபற்றி பகவத்கீதையின் பதினாறாம் அத்தியாயமான 'தேவா அசுராசம்பத் விபாகயோகம்'' என்ற பகுதியில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அவைகள் பின்வருமாறு—

1. அஞ்சாமை, உள்ளத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் செயல் உறுதி, தானம், தன்னடக்கம், ஆன்மீக ஆராய்ச்சி, தவம், நேர்மை,

2. அகிம்சை, சத்தியம், கோபத்தை அடக்குதல், தியாக உணர்ச்சி, சாந்தம், கோள் சொல்லாமை, எல்லா உயிர்களிடத்தும் இரக்கம், பேராசையின்மை, மரியாதை. அடக்கம், அற்பச் செயல்களில் ஈடுபடாமல் இருத்தல்,

3. விறுவிறுப்பு, மன்னிக்கும் குணம், தளராத உறுதி. தூய்மை, துவேஷத்திலிருந்தும் இறுமாப்பிலிருந்தும் விடுதலை ஆகியவைகளே தெய்விக குணங்களாகும்.

4. டம்பம், இறுமாப்பு, தற்புகழ்ச்சி கோபம், முரட்டுத் தனம் ஆகியவைகளே அசுரகுணங்களாகும்.

5. தெய்வ இயல்பு குணங்கள் மோட்சத்தைக் கொடுக்கிறது அரசு இயல்பு குணங்கள் அடிமைத்தளத்தில் ஆழ்த்துகிறது.

6. இந்த உலகத்தில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள உயிர்களுள் தெய்விக இயல்பும் அசுர இயல்பும் கொண்ட இருவகைகள் இருக்கின்றன.

7. அசுர இயல்புள்ள மனித்ர்கள் தாங்கள் எதைச் செய்யலாம், எதைச் செய்யக் கூடாது என்பதை அறியார்கள். அவர்களிடம் தூய்மையோ, நல்லொழுக்கமோ, சத்தியமோ இருப்பதில்லை.

8. இந்த உலகம் பொய்யானது. ஆதாரமற்றது. கடவுள் இல்லாதது. காமம் ஒன்றினால் மட்டுமே தூண்டப்பட்டு ஆண் பெண் சேர்க்கையால் உண்டானது உலகம் என்று அவர்கள் கூறுகின்றனர்.

9. இவ்வகையிலான அபிப்பிராயம் கொண்ட சீர்கெட்ட இந்த ஆன்மாக்கள் அற்பபுத்தி உடையவர்கள். இவர்கள் உலகத்தை நாசம் செய்வதற்காக உலகத்தின் விரோதிகளாக வந்து சேருகிறார்கள்.

10. திருப்தி செய்ய முடியாத காம இச்சையில் ஆழ்ந்த இவர்கள், டம்பம், இறுமாப்பு, தற்பெருமை ஆகியவற்றால் தீய நோக்கம் கொண்டு களங்கமுள்ள செயல்களையே செய்பவர்களாக இருக்கிறார்கள்.

11. மரணத்தின் போதுமட்டுமே தீரக்கூடிய அளவில்லாத கவலைகளில் ஆழ்ந்து அவர்கள் போகங்களையும் சிற்றின்ப இச்சைகளையுமே வாழ்க்கையில் அனுபவிக்கத் தக்கது என்று நம்புகிறார்கள்.

12. எண்ணற்ற ஆசைவலைகளில் சிக்கிக் கொண்டு காமத்திற்கும் கோபத்திற்கும் அடிமைகளாகியும் தங்களுடைய ஆசைப் பசியை தீர்த்துக் கொள்வதற்காக அநியாயமான வழிகளில் செல்வம் திரட்ட முற்படுவார்கள்.

13. இன்று இதனை நான் அடைந்தேன். இந்த ஆசையைப் பூர்த்திசெய்துக் கொள்வேன். இந்த செல்வம் என்னுடையது, இனிமேலும் பல செல்வங்கள் என்னுடையதாகிவிடும்.

14. இந்த விரோதியை நான் முன்பே கொன்று விட்டேன். மற்றவர்களையும் கொல்லப் போகிறேன். நான் எல்லார்க்கும் எஜமானன். போகமும் இன்பமும் எனக்கே சொந்தம். எனது செயல்கள் குற்றம் குறையற்றது. பலம் எனக்கு உரியது. ஆனந்தமும் எனக்கே உரியது,

15. நான் செல்வந்தன். உயர்குலத்தில் பிறந்தவன். எனக்கு சமமானவர் எவர் உளர்? நான் யக்ஞம் செய்பவன்.நான் தானங்கள் கொடுப்பேன். நான் ஆனந்தமாக இருப்பேன் என்று அறியாமையினாலும் மதிமயக்கத்தினாலும் அவர்கள் இவ்விதமெல்லாம் எண்ணுகின்றனர்.

16. கற்பனைமான பலவித ஆசைகளுக்கு இரையாகி, மதிமயக்கமாகிய வலையில் சிக்குண்டு போகங்களில் ஆழ்ந்து அவர்கள் துர்நாற்றம் நிறைந்த நரகத்தில் வீழ்கின்றனர்.

17. தங்களைத் தாங்களே புத்திசாலிகள் என்று தம் பட்டம் அடித்துக் கொண்டு செல்வம், அந்தஸ்து ஆகியவை காரணமாக இறுமாப்பும் பிடிவாதமும் கொண்டு அவர்கள் பெயருக்காகவும், பகட்டுக்காகவும் விதிகளுக்கு முரணாகவும் யக்ஞங்களைச் செய்வார்கள்.

18. அகங்காரம், பலம், துடுக்கு, காமம், கோபம் முதலிய தீய குணங்களை மேற்கொண்டு அவர்கள் அவர்களுடைய

உடலிலும் மற்றவர்களுடைய உடல்களிலும் இருக்கும் பிரம்மத்தை வெறுத்துத் தூஷிப்பார்கள்.

19. நிந்திக்கும் கொடியகுணம் உள்ள இவர்கள் மனிதவர்க்கத்தில் மிக மிகக் கீழ்த்தரமானவர்கள். இழிவானவர்கள். அவர்களைப் பிரம்மம், அசுர இயல்புள்ளவர்களின் கருப்பைகளில் அடிக்கடி தள்ளுகிறது.

20. அசுர (தீய) குணமுள்ளவர்களின் கருப்பைகளில் தள்ளப்பட்ட இந்த மூடர்கள் ஒருகாலத்திலும் என்னிடம் வரமுடியாமல் ஒவ்வொரு பிறப்பிலும் மேலும் மேலும் கீழ்த்தரநிலையை அடைவார்கள்.

21. மனிதனை நாசமாக்கும் இந்த நரகத்திற்கு காமம், கோபம், பேரரசை ஆகிய மூன்று விதமான வாயில்கள் இருக்கின்றன. இந்த மூன்றையும் தவிர்க்கவேண்டும்.

22. இருள் சூழ்ந்த இந்த மூன்று வாயில்களில் இருந்து தப்பித்துக் கொள்ளும் மனிதன் தன்னுடைய உயர்ந்த நலனுக்கு வழிதேடிக் கொண்டு அதிலிருந்து மகோன்னதமான நிலையையும் (பரமபதம்) அடைகிறான்.

23. சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து விட்டு யார் சுய நலமான ஆசைகளைப் பூர்த்தி செய்துக் கொள்ள முற்படுகிறானோ அவன் சித்தியையோ, ஆனந்தத்தையோ அல்லது பரமபதத்தையோ அடைவதில்லை.

24. ஆகையால் எது செய்ய வேண்டியது எது செய்யத் தகாதது என்பதை நிர்ணயிப்பதில் சாஸ்த்திரத்தையே ஒருவன் பிராமணமாகக் கொள்ள வேண்டும். எனவே சாஸ்திரத்தின் விதிகளை ஒருவன் நிக்சயமாக அறிந்து கொண்டு அவற்றிற்கு இணங்க ஒருவன் தனது கடமையைச் செய்ய வேண்டும்.

இவ்வாறாக பகவத்கீதையின் பதினாறாவது அத்தியாயமான ''தைவாசுரசம்பத்விபாக யோகம்'' முடிவுறுகிறது.

பற்றற்ற அல்லது கடவுளுக்கு அர்ப்பணமான அல்லது தன்னலமற்ற சித்தாந்தங்கள் எதுவோ அவைகளே சாஸ்திரம் எனப்படும்.

மனிதன் அசுரகுணங்களை நீக்கித் தெய்விக குணங்களுடன் வாழவேண்டுமென்றால், திடமான ஒருங்கிணைந்த மனநிலையுடன் இந்திரியங்கள் எனப்படும் புலன்வழி சுகானுபவங்களில் அளவுக்கு மீறி நாட்டம் கொள்ளாது, சாஸ்திரங்களின் விதிகளைப் பின்பற்ற வேண்டும்.

உடுத்தும் உடைகள் மற்றும் உண்ணும் உணவு வகைகள் முதல் காமக் கேளிக்கைகள்வரை ஒரு அளவோடு இருக்கப் பழகிக்கொள்ள வேண்டும். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு ஆகும் என்பதை நினைவில்கொள்ள வேண்டும்.

'நான்' என்றும் 'என்னுடையது' என்றும், நாம் எவ்வளவு பொருள்பற்றுகளை நமது மனம் என்னும் பெட்டகத்தில் திணித்துக்கொண்டு மூச்சுத் திணறலுடன் திக்குமுக்காட முடியும்?

மனக்கோணல் இன்றியும் மனத் தெளிவுடனும் வாழ்வியலுக்குத் தேவையான மனவியல் நிறைவு இல்லையென்றால், ஆசாபாசத்துக்கு மனம் அஸ்திவாரமிட்டுவிடுகிறது. கற்பனை மிகுந்த கனவு உலகில் மனிதன் ஜீவிக்க வேட்கைக் கொள்ளுகிறான். அதன் விளைவாக அடுக்கடுக்காகப் புத்திக்குப் பொருந்தாத தவறுகளைச் செய்யவும் மனிதன் முற்படுகிறான்.

"தளர்ந்த தோறும் அடியேன் சார்பு அணைந்து என்னை
உளம் தெளிவித்த ஒருமை நல்தாயே."

(அருட்பெருஞ்ஜோதி அகவல் 1080)

"சோர்வுற்றுத் தளருங்காலத்தெல்லாம் அடியேனாகிய என்னைச் சார்ந்து அணைந்து ஆன்மாவின் உயிராற்றலாம் ஜீவனையும் மனத்தையும் தெளிவுறச் செய்து, ஒருமைப் பேரறிவு அளித்திட்ட ஒருமை நல்தாயே" என்று அருட்பெருஞ்சோதி ஆண்டவரைத் தாயாகப் பாவித்து, ஜீவபிரம்ம ஐக்கியத்துக்காக சோர்வுற்றுத் தளராதத் தெளிவினை அளிவிக்குமாறு அருட்பிரகாச வள்ளலார் வேண்டுகிறார்.

'சிரவண மனன நித்தியாசங்கள்' எனப்படும் கேட்டல் சிந்தித்தல், தெளிந்து ஆய்தல் ஆகிய நிலைகளுக்கேற்ப, எந்த ஒரு பொருளைப் பற்றியும் முழுமையாக விசாரித்து அறிய வேண்டும். அவ்வகையிலான கேள்வி ஞானம் மூலம் சுயானுபவமாகச் சிந்தித்து சொல்லையும் செயலையும் தொண்டு உள்ளத்தையும் தெளிவாக வைத்துக்கொள்ள வேண்டும்.

நமக்குத் தெளிவுபடாத விஷயங்களைப் பிறரிடம் கேட்டறிவதாலும், நீதிநூல்களைக் கற்று அதனை ஆய்ந்து அதன் வழி நிற்றல் மூலமாகவும் மனவியலையும், வாழ்வியலையும் தூய்மைப் படுத்திக்கொள்ள வேண்டும்.

இழுக்கல் உடையுழி ஊற்றுக் கோல் அற்றே
ஒழுக்க முடையார் வாய்ச் சொல்.

குறள் 415.

"ஒழுக்கமுடையவரின் வாய்ச்சொல், வழுக்கும் தன்மையுடைய நிலத்தில் நடப்பவர்க்கு ஊன்றுகோல்போலத் துணை செய்யும்.

"தெளிந்த சிந்தையுடையவன் எந்த ஒரு உலகத்தை மனத்தால் சங்கல்பிக்கிறானோ, எந்த போகங்களை விரும்புகிறானோ அந்தந்த உலகத்தையும் போகங்களையும் அனுபவிக்கிறான்."

முண்டகோபநிஷத்-3-1-10

"தூய சிந்தனையுடைவன் அற்பமான சுகானுபவங்களை விரும்பமாட்டான் என்பது தெளிவு. அறிவாற்றலுடன் ஒழுக்கம், அடக்கம், சகிப்புத்தன்மை அன்பு, உண்மை, அருளுடைமை, பிரம்மச்சரியம், கொல்லாமை, புறம்பேசாமை. ஈகை, இரக்கம், ஜீவகாருண்யம், இனியவை பேசுதல், நல்லதே நினைத்தல், சினம் தவிர்த்தல் ஆகிய நற்பண்புகளையுடைய கருணை உள்ளம் கொண்டவர்கள், மேலே கூறப்பட்டுள்ள முண்டகோப நிஷத் வாக்கியப்படிக்கு ஜீவன் முக்தி சித்தியாகி இறைநிலைக்கு உயர்வடைய முடியும்.

வேதங்களில் கருமகாண்டம், ஞானகாண்டம் என்று இரு வகைகளில் நற்கருத்துக்கள் போதிக்கப்பட்டுள்ளன. வேள்விகள், சடங்குகள், கிரியைகள்முதலியன மூலம் வெவ்வேறுநிலையிலுள்ளவர்களின் கடமைகளைக்கூறுவது கர்மகாண்டமாகும். இவைகளே மந்திரம், உபாசனா, பாராயணம் எனப்படுகிறது.

வேதத்தின் முடிவான நோக்கம் யாது என்பதை உபநிஷத்துக்கள்மூலம் அறிவது ஞானகாண்டம்.

"இவ்வுலகில் தோன்றிமறைவதானவை எவை உளவோ அவை அனைத்திலும் இறைநிலை (தெய்வாம்சம்) நிரம்பியுள்ளதாகக் கருத்தில் கொண்டு கிடைத்ததைக்கொண்டு உயிர் ஜீவித்திருப்பதற்குத் தேவையானது எதுவோ, அதுவும் கடவுள் கொடுத்தது என்று ஏற்றுக்கொண்டு, வேறு எவருடைய பொருளுக்கும் பேராசைப்படாது வாழவேண்டும்."

ஈசாவாஸ்யோப நிஷத்-1--1.

இது ஞானகாண்டவாக்கியமாகும்.

''மனித வாழ்வை இவ்வுலகில் விரும்புகிறவன் அவனுக்குள்ள நித்ய கருமங்களை ஒழுங்காகச் செய்துகொண்டு நூறாண்டுகள் வாழட்டும்.''

இது கர்ம காண்ட வாக்கியமாகும்.

ஈசாவாஸ்யோபநிஷத் 1-2

மேலே கூறப்பட்டுள்ள உபநிஷத் வாக்கியங்களுக்கேற்ப, கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைவதற்கு பொன்செய்யும் மருந்தாகிய போதுமென்ற மனம் இருக்கவேண்டும்.

ஒரு செயலைச் செய்யும்போது பயனை முன்னிலைப் படுத்தாது நித்திய கருமங்களை ஒழுங்காகச் செய்துமுடிக் தளர்வில்லா ஊக்கமும், மனத்தெளிவும் மனத்திடமும் வேண்டும். ஆகவே, மனிதனுடைய மனத்தெளிவுக்கும், மன நிறைவுக்கும், செயல்நேர்த்திக்கும் கிடைத்ததைக்கொண்டு திருப்தியடைய வேண்டும். போதுமென்ற மனப்பக்குவமும், சீரிய சிந்தனையும் இருந்தாலன்றி அலைபாயும் மனத்தை அடக்கி ஆளமுடியாது. துன்பமில்லாத வாழ்வியலும் அமையாது.

பற்றற்ற உள்ளம் என்பதும் தெளிந்த தூய உள்ளம் என்பதும் அந்தக்கரணங்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களாகும். மனம் என்பது எவ்வாறெல்லாம் மாறுபட்ட செயல்பாட்டுடன் இயங்கு கிறது என்பது யோகசாஸ்திரத்தில் பின்வருமாறு ஐவகைகளாக விளக்கப்பட்டுள்ளது.

தொடர்பற்ற மனோநிலை (ஹிப்தம்) எண்ணங்கள் அற்ற வெற்று மனோநிலை (முக்தம்) குழப்பமான மனோநிலை (விக்ஷிப்தம்) ஒருங்கிணைந்த திடமான மனோநிலை (ஏகாக்ரம்) சமாதிநிலை (நிருத்தம்) என்று கூறப்பட்டுள்ளது.

இத்தனை வேறுபாடுகளையுடைய மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றால் பற்றற்ற (துறவு) நிலை எந்த ஒரு விஷயத் திலும் இருக்க வேண்டும். நமது சொல்—செயல்—சிந்தனை ஆகியவற்றில் சுயநலம் இல்லாத மனோநிலையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

தானும் வாழ்ந்து மற்றவர்களும் வாழவேண்டும் என்ற பண்பு நிறைந்த விரிந்த மனமும், தான் வாழப் பிறரை வருத்தாமலும் பழிக்காமலும் இருக்க வேண்டும் என்ற சீரிய பண்பும், தனக்கு ஒரு நீதி; மற்றவர்க்கு ஒரு நீதி என்று தருதாத—கற்பிக்காத, நெறி தவறாத நிலையும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழ வேண்டுமென்ற கருணை உள்ளமும் கொண்ட

வாழ்வியலார்க்கு மனத்தூய்மையும், தடுமாற்றமுமில்லாத ஒருங்கிணைந்த மனோநிலையும் தெய்வத் திருவருளால் சித்தியாகும். இது உண்மையும் உறுதியுமாகும்.

நமது சொல்லும் செயலும் மற்ற உயிர்களுக்குத் துன்பமும் தீங்கும் விளைவிக்குமேயானால் அது பாவம் என்றும், நமது சொல்லும் செயலும் மற்ற உயிர்களின் துன்பங்களைப் போக்கித் தீங்கு யாதும் விளைவிக்காது கருணையுடன் அமையுமேயானால் அது புண்ணியம் என்றும் கூறலாம்.

'நான் நல்லதையே நினைக்கிறேன். நல்லவையே செய்கிறேன். எனக்குத் துன்பமும் துயரமும் நேரிடுவது ஏன்?'' என்று கேட்போரும் உளர்.

நமக்கு ஏற்படும் துயரங்கள் பிராரப்தம், ஆகாமியம், சஞ்சிதம் என்று மூவகைப்படும் என்று பூர்வ நூல்களில் கூறப்பட்டுள்ளது.

பிராரப்தம் என்பது ஒருவன் எடுத்த பிறவியில் அனுபவிப்பதற்காக அமைந்த வினை. ஆகாமியம் என்பது பிராரப்தத்தை அனுபவிக்கும்போதே மேலும் பெருகுவதற்குரிய வினையாகும். சஞ்சிதம் என்பது வினைமூட்டை. அதிலிருந்து கொஞ்சம் எடுத்து இப்பிறவி வினையாகக்கொண்டு வருகிறோம்.

பிராரப்தத்தை அனுபவித்து ஒழிக்கவேண்டி வந்த மனிதன் மேலும் வினையைப் பெருக்கிக் கொண்டுபோய் சஞ்சிதத்தில் சேர்த்துக் கொள்கிறான்.

சஞ்சிதம் என்பது மேல் வினை என்றும், பிராரப்தம் என்பது எடுத்த வினை என்றும் ஆகாமியம் என்பது மேல் வளர்வினை என்றும் கூறலாம்.

தீய வினைகளை விட்டொழிப்பது அவசியமாகும். தீய வினைகளை நீககாவிட்டால் நல்வினைகள் அமைவது சாத்தியமில்லை.

ஜீவர்களை வருத்தும் துன்பங்களும் (மரணங்கள்) மூவகைகளாகும். உலக ஜீவர்கள் அனைவருக்கும் பொதுவாக இவ்வகையிலான மூன்று பிரிவுகள் மூலமாகத்தான் மரணங்கள் சம்பவிக்கும். இவைகள் காலவர்த்தமானங்களுக்கு மாறுதல் இல்லாதது ஆகும். அனைவருக்கும் சம்பவிக்கும் மரண அவஸ்தைகள் முறையே ஆதியாத்மீகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்வதம் எனப்படும்.

ஆதியாத்மீகம் என்பது தன்னைப் பற்றி வருவனவாகிய துன்பங்கள் எனப்படும். தன்னைப் பற்றி வருவன என்றால் உடலையும் உள்ளத்தையும் பாதிக்கக்கூடிய நோய் சம்பந்தப் பட்ட மரணங்களாகும்.

ஆதிபௌதிகம் என்பது பிற உயிராலும் உயிரற்றவை களாலும் வருவனவாகிய துன்பங்கள் எனப்படும். இதனை பகைவர்கள், கள்வர் மற்றும் விலங்கினங்கள் மூலமாகவும், விபத்துக்கள் முதலியவற்றாலும் நேரக்கூடிய மரணங்களாகும் எனலாம்.

ஆதிதெய்வதம் என்பது கடவுளைப் பற்றி வருவனவாகிய துன்பங்கள் எனப்படும். கடவுளைப்பற்றி வருவன என்பதாவது இயற்கையின் சீற்றம் ஆகும். அதாவது புயல், மழை, பூகம்பம், வறட்சி போன்றவற்றால் நேரக்கூடிய மரணங்களாகும்.

தற்கொலை மரணங்கள் இயற்கைக்கு விரோதமானது. மனிதபாஷையில் எது 'விபத்து' (மரணம்) என்று பேசப்படு கிறதோ அதுவே தேவபாஷையில் 'சம்பத்து' என்று பேசப்படு கிறது. இது பெரியோர்கள் (ஞானிகள்) கண்ட ரகசியமாகும்.

சோகம் என்பது ஆசைகள் பூர்த்தியாகாததால் ஏற்படும் துன்பம். மோகம் (ஆனந்தம்—சந்தோஷம்) என்பது, ஒரு பொருளை வெவ்வேறாகக் (பல ரூபங்களில்) கற்பனை செய்து அதை அடைவதற்கு மயக்கமுற்றுச் செய்யும் செயல்களாகும்.

பசி, தாகம், சோகம், மோகம், மூப்பு, மரணம் ஆகியவை எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை. மேற்படி துயரங்கள் கடலின் அலைகளைப் போலவும், இரவு பகல்களைப் போலவும் மாறி மாறி வந்து ஜீவர்களை ஆட்டி வைக்கின்றன. இவ்வகை யிலான வாழ்வியலே சம்சார சாகரம் எனப்படுகிறது. கிரகஸ்தன் எனப்படுபவன் அனுபவிப்பதும் இவ்வகையிலான துயரங்களே யாகும்.

சம்சார சாகரத்தில் (கடலில்) சிக்கிச் சுழலும் கிரகஸ்தன் சம்சாரி என்று அழைக்கப்படுகிறான். ஆனால் அச்சம்சாரியின் ஆன்மாவோ 'அசம்சாரி'யாகும் என்று வேதங்களும் உபநிஷத்துக்களும் தீர்க்கமாகக் கூறுகின்றன.

சம்சாரி என்று அழைக்கப்படுபவன் வாழும் சமுதாயத் தில் இருந்துதான், நான்கு வகையான ஆசிரம தருமங்கள் உணர்த்தப்பட்டுள்ளன. அவைகள் முறையே கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், பிரம்மச்சாரி, சந்நியாசி என்ற நான்கு

வகையிலான ஆசிரமங்கள் கிரகஸ்தனிடமிருந்துதான் ஆரம்பமாகின்றன.

கிரகஸ்தன் இந்திரிய சுகானுபவங்களினால் கவரப் பட்டு குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதில் தவறு இல்லை. கிரகஸ்தன் இல்லாத சமூகத்தில் சந்நியாசம் மேற்கொண்டவர்கள் வாழ்வது இயலாத காரியம். சாதுக் களுக்குத் தேவையான உணவு முதலியவைகளையும் ஜீவ உபசாரங்களையும் வழங்குவதற்கு கிரகஸ்தன் தேவைப்படு கிறான்.

கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், பிரம்மச்சாரி, சந்நியாசி ஆகிய நால்வருக்கும் சில வாழ்வியல் நெறிமுறைகள் (நியமங்கள்) இருக்கின்றன. பிரம்மச்சாரியும் சந்நியாசியும்நித்ய ஜீவஉபசாரங் களுக்குத் தேவையானவற்றை கிரகஸ்தனிடம் கேட்டுப் பெறுவதில் தோஷம் இல்லை. இல்லறத் துறவியான வானப்பிரஸ் தன் இல்லறப் பற்றுகளைப் படிப்படியாக விட்டு விடவேண்டும். நாளடைவில் பொருள்பற்று, புத்திரப்பற்று, உலகப்பற்று ஆகியவற்றை உதறிவிட்டு, இல்லறத்திலிருந்து கொண்டே முக்தி நிலையடைய துறவறவியலில் வானப்பிரஸ்தன் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும்.

புலன் வழித்தோன்றும் ஆசைகளைத் தவறு என்றும், துயரம் தரத்தக்கது என்றும் அறிவு தெளிவு படுத்துவதையும் மீறி, புலன் வழி இன்பங்களில் மனம் கவர்ச்சி வசப்பட்டு, ஆசையின் தூண்டு தலினால் துன்பங்களை அனுபவிக்க நேரிடுகிறது.

மன எழுச்சிகளையும், மனத்தின் தெளிவில்லாத செயலாதிக் கத்தையும் தவறு என்றுணர்த்தும் தெளிந்த பகுத்தறிவே விவேகம், ஞானம், இறைநிலை என்று பூர்வ நூல்களில் வலியுறுத் திக் கூறப்பட்டுள்ளது.

உலகப் பொதுமறை எனக்கூறப்படும் பூர்வ நூலாம் திருக்குறளின் ஞான காண்டம் எனப்படும் அறத்துப்பால் பகுதி யில் 'நீத்தார் பெருமை' அதிகாரத்திலுள்ள பத்துக் குறட்பாக் களின் மெய்ப் பொருள் உணர்ந்து கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், பிரம்மச்சாரி, சந்நியாசி ஆகிய நான்கு ஆசிரமவாசிகளும் எவ்வாறு வாழ்வியலை அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற நீதியை மிகத் தெளிவாகப் புகட்டுகிறது. 'நீத்தார் பெருமை' அதிகாரத்துப் பத்துக் குறள்களும் அவற்றின் பொருளும் பின் வருமாறு:

**ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு** (குறள்—21)

ஒழுக்கத்தில் நிலைத்து நின்று பற்றுகளை விட்டு ஒழித்தவர்களின் பெருமையைப் போற்றிக் கூறுவதே நீதி நூல்களின் சிறப்பாகும்.

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று,** (குறள்—22)

பற்றுகளைத் துறந்து விட்டவர்களின் பெருமையை அளவிட்டுப் புகலுதல், உலகத்தில் பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடத் தொடங்கினாற் போன்றதாகும்.

**இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு.** (குறள்—23)

இன்பம் துன்பம், பிறப்பு இறப்பு போன்ற இருமைகளின் வேற்றுமைகளை ஆய்ந்து அறிந்து தூய்மை (ஞான) நிலை மேற்கொண்டவர்களின் பெருமையே இவ்வுலகில் உயர்ந்தது.

**உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.** (குறள்—24)

அறிவு என்னும் அங்குசத்தால் ஐம்புலன்களாகிய யானைகளை அடக்கி ஆள்பவர்கள் மெய்ஞான நிலை அடைவார்கள்.

**ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்பு ளார் கோமான்**
**இந்திரனே சாலுங் கரி.** (குறள்—25)

"ஐம்புலன் வழி விருத்திகளான ஆசாபாசங்களை ஒழித்தவன், தேவர்களின் தலைவனான மழைக் கடவுளான இந்திரனுக்குத் தகுந்த சான்று ஆவான்.

**செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.** (குறள்—26)

"செயற்கரிய செயலாகிய பொறிபுலன்களை அடக்கி ஆள்வோர் பெரியோர். அவ்வாறான செயற்கரியதை செய்ய முடியாதவர் சிறியோர்."

**சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்று ஐந்தின்**
**வகை தெரிவான் கட்டே உலகு.** (குறள்—27)

"சுவை, ஒளி, உணர்வு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து வகையான இந்திரிய விருத்திகளை ஆராய்ந்து அடக்கி ஆளும் வல்லவனது அறிவின் (ஞானம்)கண் இவ்வுலகின் இயல்பு உள்ளது.

**நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.** (குறள்—82)

"பயன் நிரம்பிய (நிறைமொழி) சொற்களைப் பேசும் சான்றோர் பெருமையை அவர்களுடைய வேதவாக்குகளே நிரூபித்துவிடும்.

**குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது.** (குறள்—29)

"நற்குணம் (ஞானம்) என்னும் மலையின் மேல் ஏறி அமர்ந்துவிட்ட அருளாளர்கள், ஒரு நொடிப் பொழுது அளவு கோபம் கொள்ள நேர்ந்தாலும் எவர்க்கும் அதன் விளைவைத் தாங்குதல் முடியாது.

**அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்.** (குறள்—30)

"எல்லா உயிர்களிடத்தும் செந்தண்மை எனப்படும் அன்பும், அருளும், கருணையும் கொண்டு பழகும் மாசு அற்ற மனத்தினையுடைய நீதி வழுவாத ஒழுக்கச் சீலர்களே அந்தணர் எனப்படுவார்.

தயவும் கருணையும் கொண்டு ஆன்ம நேயத்துடன் வாழ் வியலை மேற் கொள்பவர்களே நீ(ர்)த்தார் பெருமைக்கு உரியவர் கள் ஆவார்கள். இந் நீத்தார் பெருமையை கிரகஸ்தன், வானப் பிரஸ்தன், பிரம்மச்சாரி, சந்நியாசி ஆகிய நான்கு ஆசிரமவாசி களும் தவறாமல் கடைப்பிடித்து ஒழுகவேண்டும்.

மனிதனின் ஒட்டுமொத்தமான முழு ஆற்றலின் ஒரு பகுதியே பாலுணர்வு எனப்படும். இப்பாலுணர்வினை கட்டுப் பாடுடன் கூடிய சுயச்சிந்தனையினால் மட்டுமே பிம்மச்சரிய விரதத்தை முழுமையாகக் கடைபிடிக்க முடியும். தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் பிரம்மச்சரிய விரதத்தைத் தவறாமல் கடைபிடிக்கும் விரதிக்கு, மேதைநாடி என்ற ஒரு புதிய நாடி தோன்றும் என்று யோகசாஸ்திர நூல்களில் குறிப்பிடப் பட்டுள்ளது, பிரம்மச்சரிய விரதிக்கு அவ்வாற்றலே ஓஜஸ் ஆக மாறிவிடுகிறது. அதன் காரணமாக உயர்ந்த சூட்சுமமான இறை நிலை உணர்வுகள் (தெய்வீக ஆற்றல்) பிரம்மச்சாரிக்கு கைவல்ய

மாகிறது. ஓஜஸ் என்றால் உள்ஒளி, உடல் பொலிவு என்பதாகும்.

பாலுணர்வு கட்டுப்பாடுகள் பற்றிப் போதிக்கும் போது, அதனை மனம் வெகு இலகுவில் ஏற்றுக் கொள்வதில்லை. எதிர்ப் புணர்வுகளே மேலோங்கி வரும். அதனை மிகவும் பக்குவமாகவும் சுய சிந்தனையுடனும் கட்டுக்கு கொண்டு வர முயற்சித்தல் வேண்டும்.

சில வகையான உணவு வகைகளினாலும், பாலினச் சிந்தனைகளினாலும் பாலுணர்வு வெளிப்படுகிறது. சில நேரங்களில் கனவில் விந்து வெளிப்படுதல் (ஸ்கலிதம்) உண்டு. அவற்றால் குற்றம் யாதுமில்லை. கவலைபடத் தேவையில்லை.

பிரம்மச்சரியத்தைச் சற்றும் வழுவாமல் கடைபிடிப்பவன் தன் உடல், உள்ளம் ஆகியவற்றின் வலிமையை முழுமையாகப் பேணிப் பாதுகாக்கிறான். ஐம்புலன்களால் உணர முடியாத விஷயங்களையும் கிரகித்துக் கொள்கிறான். இந்திரிய அறிவுக்கும் மேலானதோர் சூட்சும அறிவு.பிரம்மச்சாரிக்கு உறு துணையாக அமைகிறது.

காம உணர்வு ஜீவர்களுக்கு கடவுள் அருளியது. அதில் வேட்கைக் கொள்வதில் தவறு என்ன இருக்கிறது? காம இச்சையை அடக்குவது கேடுவிளைவிக்கும் என்றெல்லாம் கருத்து தெரிவிப்போரும் உளர். இவ்வகையான கருத்துகளை பூர்வநூல்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. காம வேட்கையும், விந்து விரயமும் மனிதனை பலவீனப் படுத்தி விடும். இவற்றில் கட்டுப்பாடு மேற்கொள்வது சாலச்சிறந்தது. இந்திரிய சுகானுபவர்களுக்கு பிரம்மச்சரியம் என்பது பிதற்றலாகத் தோன்றலாம். சுயக்கட்டுப்பாடுடன் காமவேட்கைக்கு ஒரு வரம்பு அமைத்துக் கொள்ள வேண்டும். அதுவே போதுமானது. ஆனால் ஆழ்ந்தபக்தி ஆழ்நிலைதியானம், யோக சாதனையில் வைராக்கிய சிந்தனையுள்ளோர்க்கு பிரம்மச்சரிய விரதமிருப்பது கடினமான செயல் இல்லை.

தெய்வ சிந்தனையாளர்கள் சுத்தபிரம்மத்தை நெருங்குவதற்காகத் தனது உடலையும் ஆன்மாவையும் தூய்மையாகவும் கறை படாததாகவும் வைத்திருக்க வேண்டுமென்றால், பிரம்மச்சரிய விரதியாக இருந்தேயாக வேண்டும்.

ஒருவன் எவ்வளவு பலசாலியாக இருந்தாலும் அவனது கை பலத்தை மட்டும் உபயோகித்துச் சுவற்றில் ஒரு ஆணியை அடித்து ஏற்றமுடியாது. சுவற்றில் ஆணியை அடித்து ஏற்ற

வேண்டுமென்றால், ஒரு சிறு சுத்தியல் என்ற கருவியின் துணை தேவைப்படுகிறது. சுத்தியலின் துணைகொண்டு பலமுள்ள வனாயினும் சரி பலவீனனாயினும் சரி சுலபமாக சுவற்றில் ஆணியை அடித்து ஏற்றிடமுடியும். அதுபோன்று இந்திரிய சுகானுபவங்களில் ஈடுபடாமல் தூய வாழ்வியலுக்கு தன்னைத் தயார்படுத்திக் கொள்ள விகும்பும் ஒருவன், வைராக்கிய சிந்தனை என்ற சுத்தியலின் துணைகொண்டு இந்திரிய சுகானு பவங்கள் என்ற மாயையை வெகு எளிதில் அடித்து வீழ்த்திவிட முடியும்.

தூய வாழ்வியலையும் இறைநிலையையும் ஒவ்வொரு மனிதனும் அடையமுடியும் என்ற கருத்தினை விளக்கும் வகையில் கடோப நிஷத்தின் வரலாற்றுச்சுருக்கத்தைப் பின்வரும் வரிகளில் விளக்கப்படுகிறது.

உயர்ந்த பயனில் இச்சையுடையவராகிய வாஜசிரவஸ் என்ற ஒரு அந்தணர் தன்னிடம் உள்ள பொருள்கள் அணைத்தையும் தானமாகக் கொடுப்பதாகச் சங்கல்பம் செய்துகொண்டு விஸ்வஜித் என்ற யாகம் செய்தார்.

வாஜசிரவஸ் என்ற அந்த அந்தணனுக்கு நசிகேதஸ் என்ற ஒரு மகன் இருந்தான். மகன் தனது தந்தையைப்பார்த்து, "அப்பா உங்களுடைய பிரியமுள்ள குமாரனாகிய என்னையுமல்லவோ யாகத்தில் தானம் கொடுக்கவேண்டும்" என்று நசிகேதஸ் கேட்டான்.

"ஆமாம், உன்னையும் எமனுக்குத் தானமாகக் கொடுக்கிறேன்" என்று கூறிய வாஜசிரவஸ் யாகத்தில் கொடுப்ப தாகச் சொன்னதைக் கொடுத்தே தீரவேண்டும் என்ற குழப்பத்தில் இருந்த தந்தையை நோக்கி நசிகேதஸ் "அப்பா உங்களது சங்கல்பத்தைப் பூர்த்தி செய்யவும், உங்களது யாகம் சிறப்புற்று உயர்ந்த பயனைத் தரவும் நான் சந்தோஷமாக எமனிடம் செல்லுவேன்" என்று தகப்பனார்க்கு ஆறுதல் கூறி விட்டு நசிகேதஸ் எமலோகம் போய் சேர்ந்தான்.

எமலோகத்தில் எமதர்மராஜனைச் சந்தித்து பேச மூன்று நாள்கள் காத்திருக்க வேண்டியதாயிற்று. அந்த மூன்று நாள் களின்போதும் நசிகேதஸ் பட்டினியாக இருக்க நேர்ந்தது.

"அதிதியாக வந்த நீ மூன்று தினங்களாக எதுவும் புசிக்காமல் காத்திருந்ததால் எமதர்மராஜனாகிய நான் குற்றம் செய்தவனா வேன். அதற்குப் பரிகாரமாக மூன்று வரங்களைக் கேட்டுப்பெற்றுக் கொள்" என்று நசிகேதசை எமன் கேட்டுக் கொண்டான்.

நசிகேதஸ் எமனை வணங்கி "ஐயனே! என் தகப்பனார் கவலை நீங்கி என்மேல் இருக்கக்கூடிய கோபமும் நீங்கி, உம்மால் விடப்பட்டு எமலோகத்திலிருந்து நான் வீட்டுக்கு திரும்பிப் போய் எனது தகப்பனாரைச் சந்திக்கும்போது அவர் என்னைச் சந்தோஷமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுவே எனது முதல் வரம்" என்று கேட்ட நசிகேதசை நோக்கி, "அங்ஙனமே ஆகுக" என்றார் எமன்.

"சுவர்க்கத்தை எய்துவதற்குச் செய்ய வேண்டிய யாகத்தின் முறையை எனக்கு உபதேசித்தருளல் வேண்டும். இதுவே இரண்டாவது வரம்" என்றான் நசிகேதஸ்.

எமன் அங்ஙனமே அக்கினி வித்தையையும், அதன் முறையையும் உபதேசித்து "உன் புத்தியையும், சிரத்தையையும் மெச்சினேன். நான் உனக்கு உபதேசித்த அக்கினி வித்தை இனி உலகில் பிரசித்திப் பெற்று, 'நசிகேதஸ் யாகம்' என்று உன் பெயராலேயே வழங்கட்டும்" என்று கூறினார்.

"சாவுக்குப் பின் ஆத்மாவின் (உயிர்) நிலைப்பற்றி பலர் பலவிதமாகப் பேசுகின்றனர், இதன் உண்மையை அறிய விரும்புகிறேன். இதுவே நான் கேட்கும் மூன்றாவது வரம்" என்றான் நசிகேதஸ்.

எமன் நசிகேதசைச் சோதிக்க எண்ணி "அப்பா, நீ சிறுவன். நீ கேட்பதோ பெரிய கேள்வி. தேவர்களும் இதை அறியவில்லை உலகில் நீண்ட ஆயுளையும் குறைவற்ற செல்வத்தையும் விரும்பிக் கேட்டுப் பெற்றுக்கொள். மரணத்துக்குப்பின் ஆன்மாவின் நிலை என்ன? என்ற விவரத்தை மட்டும் வற்புறுத்திக் கேட்காதே" என்றார்.

நசிகேதஸ் "எமதர்ம ராஜனே! உயிரைக் கொண்டு போகும் சக்தி படைத்த நீ இருக்கும்வரை எத்தனை நீண்ட ஆயுளை உடையவராயினும் அது எம்மாத்திரம்? நீ தருவதாகச் சொல்லும் செல்வங்கள் என்ன சுகம்தரும்? மனிதன், அவன் பெறும் செல்வங்களால் மட்டும் திருப்தியடைய முடியாது, ஒரு குருவிடம் கேட்டுப் பெறும் உபதேசம் போன்று 'மரணத்துக்குப் பின் ஆன்மாவின்நிலை என்ன?' என்பதை உன்னிடம்கேட்கிறேன். எனக்கு இந்த உண்மையான உபதேசத்தை அருளவேண்டும்" என்றான்.

"நசிகேதஸ்! உன்னைப் போன்ற விவேகியும் ஆசைகளை அறவே ஒழித்தவனுமாகிய தீரன் சீடனாகக் கிடைப்பது அரிது"

என்று கூறி எமனும் சம்மதித்து நசிகேதசுக்கு உபதேசித்த கடோபநிஷத்தின் சுலோகங்களின் சுருக்கம் வருமாறு—

"வேதங்களைக் கற்றதாலோ, நுண்ணறிவினாலோ, விரிந்த கேள்வியினாலோ இந்த ஆன்மா (ஒரு சாதகனால்) அடையப் பெறுவதன்று. ஆத்மா ஒன்றையே ஆத்மாவினால் பிரார்த்திக் கப்படுபவனால் மட்டுமே, ஆத்ம ஞானம் அடைய முடியும். அவனுக்கு அப்போது இந்த ஆன்மா தன்னுடைய உண்மை சொரூபத்தை பிரகாசப்படுத்துகிறது. 2—23.

"துர் நடத்தையிலிருந்து விலகாதவனும், இந்திரியங்களை அடக்காதவனும், மனத்தை ஒருமுகப்படுத்தி சாந்தி எய்தாதவனும் பிரஞ்ஞானத்தால் இந்த ஆன்மாவை அடையமாட்டான். 2—24

"சரீரத்தைத் தேராகவும், மனத்தைக் கடிவாளமாகவும், ஜீவனை சரீரமென்னும் தேரில் அமர்ந்து இருப்பவனாகவும் அறிவாயாக! 3—3

"இந்திரியங்களைக் குதிரைகள் என்றும் கூறுவர். இந்திரிய விருத்திகளை அவைகள் செல்லும் பாதைகள் என்றும் கூறுவர், சரீரம், இந்திரியம், மனம் இவற்றுடன் கூடிய ஜீவனையே 'போக்தா' என்று ஞானிகள் கூறுகின்றனர்; 3—4

"அடக்கப்படாத மனத்துடனும், விவேகமில்லாத புத்தியுடனும் கூடியவன் எவனோ அவனுக்கு சாரதிக்கு அடங்காத துஷ்டக் குதிரைகள் போல் இந்திரியங்கள் வசப்படமாட்டாது. 3—5

"எப்போதும் அடக்கப்பட்ட மனத்துடனும், விவேகமுள்ள புத்தியுடனும் கூடியவன் எவனோ, அவனுக்கு சாரதிக்கு அடங்கிய நல்ல குதிரைகளைப்போல் இந்திரியங்கள் வசப்பட்டவையாகும்". 3—6

"எப்போதும் விவேகமற்றவனாகவும், அடங்காத மனமுடையவனாகவும் (மும்மலக்குற்றமுள்ள) அழுக்குடையவனாகவும் உள்ளவன் எவனோ அவன் ஜீவ பிரம்ம ஐக்கியநிலை அடையமாட்டான். மீண்டும் மீண்டும் பிறவிப் பாதையிலேயேசென்றுக் கொண்டிருப்பான்: 3—7

"எப்போதும் விவேகத்துடன் கூடியவனாகவும், அடங்கிய மனமுடையவனாகவும், பரிசுத்தமானவனாகவும் உள்ளவன் எவனோ அவன் எங்கிருந்து மீண்டும் பிறப்தில்லையோ அந்த பரம பதத்தை எய்துகிறான். 3—8

"எந்த மனிதன் விவேகமுள்ள புத்தியைச் சாரதியாகவும், அடக்கப்பட்ட மனத்தைக் கடிவாளமாகவும் உடையவனோ, அவன் சம்சாரமாகிய கடுவழியின் எல்லை நிலத்தை அடைகிறான். அதுவே எங்கும் நிறைந்த பரம்பொருளுடன்ஒன்றுபட்ட பரமபதம் (ஜீவ பிரம்ம ஐக்கியம்) என்னும் நிலையாம்.'' 3-9

''இந்திரிய சுகானுபவங்களைப் பரமேஸ்வரன் வெளி நோக்குடையவைகளாகச் சிருஷ்டித்துள்ளார். ஆகவே மனிதன் வெளித் தோற்றங்களையே பார்க்கிறான். எவனோ ஒருவன் மரணமில்லாப் பெருவாழ்வினை (சாகாநிலையை) விரும்பி இந்திரியங்களை அடக்கி உள்முகமாகப் பிரத்யகாத்மாவைப் பார்க்கிறான்.'' 4-1

('நான்' என்பது யார்? என்ற விசாரணையே பிரத்யகாத்மா எனப்படும்.)

''அறிவிற் சிறியோர் இன்ப நுகர்ச்சிகளையே தொடர்ந்து அனுபவிக்கின்றனர். அதன் மூலம் மரண வலையில் விழுகின்றனர். பிரத்யகாத்மாவை அறிந்தவர்கள் நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையை நிலையானது என்று கருதுவதில்லை. அழிவற்ற உண்மைப் பொருள்களையே அடைய விரும்புகிறார்கள்.'' 4-2

சப்த-ஸ்பரிச-ரூப-ரஸ-கந்தம் (ஓசை. ஊறு. ஒளி, சுவை, வாசனை) வடிவான இந்திரிய நுகர்ச்சிகளை எந்த அறிவினால் மனிதன் அனுபவிக்கிறானோ அந்த அறிவினாலேயே அவைகளை (ஆன்மா) ஆய்ந்து உணர்கிறான்." 4-3

''பஞ்ச பூதங்களுக்கு முன்னமேயே தோன்றி, எல்லா உயிர்களிடத்தும் உறைந்துள்ள ஆத்மாவை உலக உயிர்களிடத்தும் காண்பது ஆய்வுநிலை,'' 4-6

''பிரம்மத்திடமிருந்து தோன்றி அனைத்து ஜீவர்களிடமும் உறைந்துள்ள பொருள் எதுவோ அதுவே (ஆன்மா) நாம் தேடும் பொருள்.'' 4—7

''தீயைக் கடைந்தெடுக்கும் கட்டையில் மறைந்திருக்கும் தீயைப் போலவும் கர்ப்பிணிகளால் பாதுகாப்பாக மறைத்துக் காக்கப்படும் கருவைப் போலவும், நாள்தோறும் பூஜிக்கப்படும் அக்கினி ஹோமம் செய்பவர்களால் அக்கினி காக்கப்படுவது போலவும், ஜீவனிடம் ஆத்மா மறைத்து வைக்கப் பட்டுள்ளது. அதுவே ஆராயும் பொருளாகும்.'' 4-8

''இது மனத்தாலேயே (ஆத்ம ஞானம்) அடைய வேண்டியதாகும். இதில் சிறிதும் வேற்றுமை இல்லை. எவன் இதில்

வேற்றுமை காண்கிறானோ அவன் மரணத்தினின்று அவன் மரணத்தையே அடைகிறான். 4-11

"மலை உச்சியில் பெய்த மழைநீர் மலைச்சாரல்களில் பல வாறாகச் சிதறிப் பாய்வது போல், தர்மங்களைத் தனித்தனியா கப் பிரித்துக் காண்பவன், அவ்வேற்றுமைகளைப் பின்பற்றியே ஓடுகிறான். 4-14

"சுத்த ஜலத்தில் (நீர்) விடப்பட்ட சுத்த ஜலம் எவ்வாறு அது போலவே ஆகிறதோ, அங்ஙனமே உண்மையை உணர்ந்த ஞானிகளின் ஆன்மா பரிசுத்தமானதாகிறது. 4-15

"உடலில் உறையும் ஆத்மாவாகிய இவன் உடலை விட்டுப் பிரிந்து சென்று விட்டால் என்ன எஞ்சி நிற்கும்? 5-4

"பிராணனாலோ அபானனாலோ எந்த மனிதனும் ஜீவித் திருக்கவில்லை எதை இவ்விரண்டும் ஆதாரமாகக் கொண்டு உள்ளதோ அதனாலன்றோ மனிதன் ஜீவித்திருக்கிறான். 5-5

"பிரம்ம இரகசியம் பற்றிக் கூறுவதைக் கவனமாகக் கேட் பாயாக. ஜீவாத்மா மரணத்துக்குப் பின் எங்ஙனம் உழல்கின்றது என்று கூறுவேன். 5-6

"உடல் படைத்தோரில் சிலர் வேறு உடல்களை வேண்டி யோனியை அடைகின்றனர். அவரவர் கருமத்துக்கும் ஞானத்துக் கும் ஏற்றவாறு மறுபிறவிகள் சம்பவிக்கிறது. 5-7

"தூங்கும்போதும் எந்தப் புருஷன் பலவிதமான ஆசைகளை உருவகப்படுத்திக் கொண்டு விழித்திருக்கிறானோ, அவனே சுத்தன். அவனே பிரம்மம். அவனே அமிர்தம் எனப்படுகிறான். அவனிடத்திலேயே உலகங்களெல்லாம் நிலை பெறுகின்றன. அவனை மீறிச் செல்பவன் எவனும் இல்லை. இதுவே அது. 5-8

"உலக ஜீவர்கள் அனைவர்களிடமும் அந்தராத்மாவாகவும், ஆண்டவனுமாகிய எந்த ஒருவன் ஒன்றேயாகிய தன் உருவை பல ரூபங்களாகக் காட்சிக்குரியதாக்குகிறானோ அவனை எந்த தீரர்கள் தங்களிடம் உறைபவனாக (பிரம்மமாக) கருதுகிறார் களோ, அவர்களுக்கே அழிவில்லாச் சுகம் கிடைக்கிறது. மற்றவர்களுக்கு இல்லை. 5-12

"நிலையில்லாப் பொருள்களிடையே நிலையுள்ளவனாகவும் அறிவுள்ள உயிர்களின் அறிவாகவும், ஒருவனாய் நின்று அனைவருடைய ஆசைகளுக்கும் காரணமாயுள்ளவனை எவர் தங்களிடம் உறைபவனாகக் (பிரம்மமாக) காண்கிறார்களோ அவர்களுக்கே அழிவில்லாத சாந்தியுண்டு. 5-13

"சுயம்பிரகாசமுள்ள ஆன்ம ஒளியினாலேயே சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், நெருப்பு, அனைத்தும் பிரகாசிக்கிறது. 5-15

(இக்கருத்தினை ஒத்தபழம் பாடல் ஒன்று உண்டு.)

**"கண்முதற் புலன்க ளந்தக்கரணங்கள் விளங்குமெத்தாற்**
**றண்மதியருக் கனங்கி தாரகை விளங்கு மெத்தால்**
**விண்முதற் பூதமியாவும் விளங்கு மெத்தாலந்த**
**உண்மையாம் சிவப்பிரகாச ஒளியது வாழிவாழி**

"இந்திரியங்களை விட மேலானது மனம், மனத்தைவிட மேலானது புத்தி. புத்தியை விட மேலானது சமஷ்டிபுத்தி எனப் படும் சூத்ராத்மா, மகத்தான சூத்ராத்மாவைவிட மேலானது அவ்வியக்கம், 6-7

(அவ்வியக்தம் என்றால் மூலப் பிரகிருதி என்று பொருள்)

"மூலப்பிரகிருதிக்கும் (அவ்வியக்தம்) மேலானவன் புருஷன். அவன் எங்கும் பரவி குணமும் குறியுமின்றி இருப்பவன். அவனை அறிந்து ஜீவன் விடுதலை எய்திச் சாகா நிலையை அடைகிறான், 6-8

"இதனுடைய ரூபம் கண்முன் நிற்காது: எவனும் கண்ணால் காண்பதில்லை. நிச்சயமான புத்தியாலும், மனத்தாலுமே இது அடையத் தக்கது. இதை அறிந்தவர்கள் சாகா நிலையை அடைகின்றனர். 6-9

"எப்போது ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனத்துடன் அசையாது நிற்கின்றதோ, புத்தியும் தொழிலற்றுப் போகின்றதோ அதை உயர்ந்த நிலை என்பர்; 6-10

இந்திரியங்கள் அசைவற்று அடங்கிய நிலையே (இந்திரிய தாரணை) யோகம் என்பதாகும். யோக சாதகன் இந்திரியங்களின் வசமாகி மயங்காமல் விழிப்புடன் இருக்கிறான். யோகமானது தோன்றி மறையும் இயல்புடையதேயாகும். 6-11

"வாக்காலும் மனத்தாலும் கண்ணாலும் அடைவதற்கு முடியாததாக (ஆன்மா). ஆத்மவஸ்து உள்ளது என்று உணர்ந்து கூறும் ஞானிகளிடம் இருந்து அல்லாது வேறு எங்ஙனம் ஆத்ம ஞானம் அடைய முடியும். 6-12

"எப்போது இவனுடைய இருதயத்தில் பொதிந்துள்ள ஆசைகள் எல்லாம் ஒழிகின்றனவோ அப்போது சாகும். இயல்புடைய மனிதன் சாகாதவனாகிறான், பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான். 6-14

''இவ்வாறு எமனால் உபதேசிக்கப்பட்ட இந்த வித்தையையும் யோக விதிகள் அனைத்தையும் பெற்று நசிகேதஸ் பிரம்மத்தை அடைந்து எல்லா மலங்களும் நீங்கியவனாகவும் சாவைத் தாண்டியவனாகவும் ஆனான். வேறு எவனாயினும் இவ்வாறு அத்தியாத்ம தத்துவத்தை அறிவானேயாயின், அவனும் அவ்வாறே (பிரம்மத்தையடைந்து எல்லா மலங்களை நீங்கினவனாகவும் சாவைத் தாண்டியவனாகவும் ஆவான்.'' 6-18

இங்ஙனம் கடோபநிஷத் முற்றும்.

மும்மலங்கள் என்பது ஆணவம், மாயை, கன்மம், எனப்படும். ஆணவம் என்பது ஆன்ம அறிவை மறைத்து 'நான்' 'எனது' என்ற அறியாமையைப் பிறப்பித்து உலக சுகபோகங்களில் ஆசையை உண்டாக்கி யாவற்றையும் தனதென்று கூறி இறுமாப்புடன் இருப்பது. ''மாயை'' என்பது ஒரு பொருளைத் தனதென்று நினைத்து அதனை அடைவதற்கான முயற்சியில் ஈடுபட்டுத் துன்பத்தையும் துயரத்தையும் வருவித்துக்கொள்வது. கன்மம் என்பது தீவினைகள் புரிந்து நன்மை தீமையாது என்பதைப் பகுத்துணராது பாவச் செயல்களில் ஈடுபடுவது.

மும்மலக் குற்றங்களோடு பிறக்கும் மனிதன் 'மாயாப் பிறவியின் மயக்கம் அற' உண்மைப் பேரறிவு என்னும் ஞானம் பெற்று வினைமாசுகள் இல்லாத வாழ்வியலை மேற்கொள்ள வேண்டும். இதனை மலபரிபாகம் என்பர்.

ஆணவம், கன்மம், மாயை, ஆகிய மும்மலங்களிடையே உழன்றுக் கொண்டிருக்கும் மனிதனுக்கு விவேகஞானம் வந்தவுடன் கடவுளைப் பற்றிய சிந்தனை வந்து விடுகிறது; தெளிவு உண்டாகிறது, பேரானந்த வாழ்வு கிடைக்கிறது.

ஆணவம், கன்மம், மாயை, ஆகிய மும்மலமுடையவர்களை சகலர் என்பர். ஆணவம், கன்மமாகிய இருமலமுடையவர்களை பிரளயாகலர் என்றும் ஆணவம் மட்டுமேயுடையவர்களை விஞ்ஞானகலர் எனவும் கூறுவர்.

ஆணவம், கன்மம், மாயை, எனப்படும் மும்மலமுடைய சகலர்க்கு இறைவன் பூமியில் குருவாக வந்து அருள்பாலிப்பார். ஆணவம், கன்மம், என்ற இருமலமுடைய பிரளயாகலர்க்கு இறைவன் தேஜோ மயமான தெய்வமூர்த்தமாகக் காட்சியளித்து இருமலப் பந்தங்களை நீக்குகின்றான். ஆணவமலம் மட்டுமேயுடைய விஞ்ஞானகலர்க்கு இறைவன் பரஞ்ஜோதி வடிவமாகத் தோன்றி மெய்ஞானமளித்து பேரின்பம் அளிக்கிறார்.

"சகலர் விஞ்ஞான கலர் பிரளயாகலர் இதய; சாட்சி யாகிய பூம்பதம்" என்று திருவருட் பிரகாச வள்ளலார் அவர் களும் திருவடிப் புகழ்ச்சியில் ஓதியுள்ளார்கள்.

மேலே கூறப்பட்ட மூவகை மலங்கள் நீங்கினால் மட்டும் போதாது. மனிதனை வாட்டும் அவ(ஸ்)த்தைகளிலிருந்தும் விடுபடவேண்டும். கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை என்ற மூவகையான அவத்தைகள் உள.

மனிதனாய்ப் பிறந்தவன் அறிவிலியாக விலங்கினையொத்த வாழ்க்கை வாழ்வது கேவலாவத்தையாகும். ஆன்மா ஆணவ மலத்தோடு கூடி நின்று இச்சா, கிரியா, ஞானம் யாதென்று அறிய முடியாத நிலை சகலாவத்தையாகும். மலக்குற்றங்களும் பிறவியும் நீங்கி ஆன்மா வியாபக அறிவு (மெய்ப் பொருள் ஞானத்தை அறிந்த அறிவு) எய்திருக்கும் நிலை சுத்தாவத்தை யாகும்.

திருக்குறளில் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் இறைவனை எண்குணத்தான் என்று திருவள்ளுவரும் ஒரு குறள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. குறள்—9

எட்டு குணங்களையுடைய கடவுளின் திருவடிகளை வணங்காத தலை, கேளாத செவி முதலியவை போலப் பயனற்றவையாகும்.

எண்குணங்களையுடைய இறைவனின் திருவடிகளை வணங்காத தலையும் இறைவனது திருவடிகளை வாழத்தாத வாயும் இறைவனது புகழ்தனைக் கேளாத செவிகளும் பயனற்றவைகளாகும் என்ற கருத்தினை திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வமணி மாலையில் மிகத் தெளிவாகப் பாடி யுள்ளார்.

எந்தை நினை வாழ்த்தாத பேயர்வாழ் கூழுக்கும்
ஏக்கற்றிருக்கும் வெறுவாய்
எங்கள் பெருமான் உனை வணங்காத மூடர்தலை
இகழ்விற் கெடுக்கும் தலை

கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்
கலநீர் சொரிந்த அழுகண்
கடவுள்நின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி
கைத்திழவு கேட்கும் செவி

**பந்தம்அற நினை எணாப்பாவிகள் தம்நெஞ்சம்**
**பகீர்என நடுங்கும் நெஞ்சம்**
**பரமநின் திருமுன் குவியாத வஞ்சர்கை**
**பலி ஏற்க நீள்கொடுங்கை**

என்று அழகாகப் பாடியுள்ளார்கள்:

எண்குணத்தினனான இறைவன் அறிவாலும் மனத்தாலும் எட்டிப் பிடிக்க முடியாத தொலைவிலுள்ளான் என்பதை உணர்த்தும் வகையில்'' அறிவுக்கு அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே, மனாதிகளுக்கு எட்டா வடிவாய்'' இறைவன் இருக்கின்றான் என்று குமரகுருபரரும் பாடியுள்ளார்கள்.

இறைவனுக்குள்ள எண்குணங்கள் யாவை? இறைவனுக்குள்ள ஐந்தொழில்கள் யாது? என்பதைப் பார்ப்போம். தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல். இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை. இவைகளே இறைவனுக்குள்ள எண் குணங்களாகும். இந்த எட்டுணங்களும் சகுணபிரம்மத்துக்கு குரியது. நிர்க்குணபிாம்மம் இவ்வகையிலான எண் குணங்களுக்கு அப்பாற்பட்டதாகும்.

உருவவழிபாட்டுக்குரிய தெய்வத்திருமேனிகள் சகுணபிரம்ம மென்றும். தியானத்துக்குரிய பரம்பொருள் நிர்க்குணபிரம்மம் எனவும் கூறப்படும். நடராஜர் திருமேனி சகுணபிரம்மம்; திருச்சிற்றம்பலத்திலுள்ள 'சிதம்பரரகசியம்' நிர்க்குணபிரம்ம மாகும்.

இறைவனுக்குள்ள எண்குணங்களைப்பற்றி விளக்கம் பின் வருமாறு:

1. **தன்வயத்தனாதல் :-** அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதற்கேற்ப உலகு அனைத்துக்கும் இறைவன் மேலானவனாக இருக்கிறான். இறைவனுக்கு ஆணையிடும் நிலையில் அவனுக்கு மேலேயாரும் இல்லை, இறைவன் எதையும் தன்னிட்டப்படி செய்யும் சர்வசுதந்திரம் படைத்தவனாதலால் இறைவன் தன்வயத்தவனாகிறான். தன்வயத்தன் என்றால் சுவாதீனன் என்றும் சுவதந்திரன் என்றும் பொருளாகும்.

2. **தூய உடம்பினனாதல் :-** தூயவனாகவும் விசுத்த தேகம் படைத்வனாகவும் இறைவன் இருத்தலால் தூய உடம்பினன் என்றழைக்கப்படுகிறான்.

**3. இயற்கை உணர்வினன் :-** இதனை தூய உணர்வினன் என்றும் கூறலாம், இராக துவேஷங்கள் எனப்படும் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் மாச்சரியம், இடும்பை (அச்சம்) அகங்காரம் ஆகிய பொறிபுலன் வழி உபாதைகளும் உணர்வுகளும் இல்லாத நிராமயத்மனாக (உபாதைகளற்றவன்) இருத்தலால் இறைவன் இயற்கை (தூய) உணர்வினன் என்று அழைக்கப்படுகிறான்.

**4. முற்றும் உணர்தல் :** அனைத்தும் அறிந்தவன் கடயுள் எள்பதை உணர்த்தும் வகையில், முற்றும் உண்ர்ந்தவனை சர்வக்ஞன் என்றும் கூறுவர். வாலறிவனான இறைவன் உலகத்தின் தோற்றம், இருப்பு. ஒடுக்கம், ஜீவர்களின் கடந்த காலம், நிகழ்காலம், வருங்காலமாகிய முக்கால நிலைகளையும் நன்கு அறிந்தவனாசிய இறைவன், ஜீவர்களின் உணர்வுகளையும் அறிந்தவனாதலால் முற்றும் உணர்ந்தவனாகிறான்.

**5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் :-** இறைவனின் எண்ணற்தப் படைப்புகளில் எத்தனைப் பிரிவுகள். அவ்வுயிர்கள் அனைத்தும் ஒன்றோடொன்று எத்தனை வகையானப் பாசப் பிணைப்புகளுடன் இயங்குகின்றன? என்பதனை இறைவன் நன்கு அறிவான். ஜீவர்களின் பொருள்பற்று, புத்திரப்பற்று, உலகப்பற்று ஆகியவற்றிலிருந்து ஜீவர்களை விடுவிக்க இறைவன் நிர்மலனாகக் காட்சியளிக்கிறான். உயிர்களைப் பந்தபாசங்களிலிருந்து விடுவித்து பற்றற்ற நிலைக்கு உயர்த்தும் பேற்றினை அளிப்பவர், நிர்மலனான இறைவனாதலால் இயல்பாலவே பாசங்களை நீக்குபவனாகவும் ஆகிறான்.

**6. பேரருள் உடைமை :-** ஜீவர்கனின் மலபரிபாகத்துக் கேற்ப, அவர்களுக்குத் தேவையானவற்றை வேண்டும் காலத்தே இல்லை எனாது வழங்கி ஐவகைத் தொழிலில் ஐந்தாவதாகிய அருளல் மூலம் ஜீவர்களை உய்விக்கும் அருளாளனாக இருக்கின்றான். அதுவே அனுக்குப் பேரருள் உடைமையாவும் இருக்கிறபடியால், இல்லை என்பது இல்லாமல் உயிர்களுக்கு பேரருளை அளிக்கின்றான்.

**7. முடிவில் ஆற்றல் உடைமை :-** அணுவிற்குள் அணுவாகவும், அண்டமெங்கும் பரவித்திகழும் பரம்பொருளாகவும், பேரொளியாகவும், படைத்தல் (ஆக்கல்), காத்தல், துரிசுநீக்கம் (அழித்தல்) மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களுடன் ஜீவர்களின் முனைப்புகளுக்கேற்ப உயிர்களுக்கு வீடு பேறு அளிக்கும் ஆற்றலை உடைமையாகக் கொண்டவனாகவும் இறைவன் இருக்கின்றான்.

**8. வரம்பில் இன்பம் உடைமை** :- சச்சிதானந்த மூர்த்தி யாகிய இறைவன் ஜீவர்கள் வினைமாசுகளை நீக்கிய காலத்து, அவர்களை பேரானந்தத்தில் ஆழ்த்தி ஜீவன் முக்தர்களாக்கி பேரின்பம் என்ற வரம்வில் இறைவன் உயிர்களை உய்விக் கின்றான். ஆகவே வரம்பில் இன்பத்தை உடைமையாகக் கொண்டவனாகவும் இருக்கிறான்.

இவைகளே இறைவனுக்குரிய எண்குணங்களாகும். இனி இறைவனுக்குரிய ஐவகைத் தொழில்கள் யாதென்று அறிவோம். அவைகள் படைத்தல், காத்தல், அழித்தல், (துரிசுநீக்கம்) மறைத்தல், அருளல் என்பவைகளாகும்.

உயிர்கள் செய்யும் வினைகளுக் கேற்ப இறைவன் நுண்ணு டலைத் தந்திருக்கிறான், இது படைத்தல் ஆகும். உடலைக் கொண்டு ஆன்ம (உயிர்) இயலை உணரவும் நுகரவும் வாழ் வியலைத் தந்திருப்பது காத்தல் ஆகும். வாழ்வியலாரை வாழ் வியலால் இளைப்பாறுவித்தல் (துரிசுநீக்கம்) அழித்தல் ஆகும். உயிர்கள் தங்களது வினைகளை (கர்மபலன்) நுகரும் போது அவற்றிற் கேற்ப உள்ளனவற்றை (இன்பம் துன்பம், பிறப்பு இறப்பு) நினைக்கச் செய்து பிறவளவற்றை மறக்கச் செய்வது மறைத்தல் ஆகும். இந்நான்கு நிலைகளையும் நுகர்ந்தபின் வீடு பேற்றையளித்தல் அருளல் ஆகும்.

இறைவனின் அருளையும். அருட்சுடரையும் பெறவும், கண்டுகளிக்கவும் வேதாந்தம், சித்தாந்தம் இரண்டும் சில திருவருட் குறிப்புகளை உணர்த்தியுள்ளது. அத்திருவருட்குறிப்பு களை 'தரிசனம்' என்றும் கூறலாம். தரிசனம் என்ற சொல் லுக்குப் பார்த்துத் தெளிதல் என்றும் பொருள் கொள்ளலாம்.

பெரு நூல்களின் உட்கருத்துக்களை அட்டவணைப் படுத்திப் பல அத்தியாயங்களாகப்பிரித்து உள்ளுறை என்றும், நூல் (பொருள்) அடக்கம் என்றும் அப்பெருநூல்களின் முகப்பில் பட்டியலிட்டுக் காண்பிப்பதுண்டு. திருக்குறளிலுள்ள ஆயிரத்து முன்னூற்று முப்பது குறள்களை அறம். பொருள், இன்பம் என்று முப்பகுதிகளாக்கி இயல் அகவரிசை என்று கூறப்பட்டுள்ள தல்லவா? அதேபோன்று நான்கு வேதங்களுக்குமாகச் சேர்த்து ஆயிரத்து நூற்று எண்பது சாகைகள் (பிரிவுகள்) ஸ்ரீவியாசரால் பிரிக்கப்பட்டுள்ளது. அதில் ஒரு சாகையையாவது செவ்வை யாக அத்தியயனம் (மனனம்) செய்யாதவன் பிராமணன், (வேதியன்) ஆகமாட்டான் என்றும் கூறப்பட்டுள்ளது.

ஆயிரத்துநூற்று எண்பது சாகைகளிலும் கர்மகாண்டம், ஞானகாண்டம் (உபநிஷத்துக்கள்) என்று இருவகைப் பிரிவுகள் உண்டு. கர்மகாண்டத்தில் மந்திரம். பிராமணம் என்று இருவகைப் பிரிவுகள் உள. பிராமணம் என்பதும் உபாசனா மார்க்கம் என்பதும் ஒன்றேயாகும். வேதங்களில் கர்மகாண்டப் பிரிவுகளில் கூறப்பட்டுள்ள மந்திரம், பிராமணம் ஆகிய இரு பிரிவுகளையும், உபநிஷத்துக்களையும் கற்றுணர்ந்தவர்கள் வேதியன் என்றும் பிராமணன் என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

வேதங்களின் ஞானகாண்டப்பிரிவுகள் உபநிஷத் எனப்படுகிறது. வேதங்களின் பின்னுரையாக (கடைப்பகுதி) உபநிஷத்துக்கள் அமைந்துள்ளன. பிறவித்துன்பத்தை நீக்கி பேரின்ப பெருவாழ்வு பெறுவதற்கான மெய்ஞான விளக்க நூல்களாக உபநிஷத்துக்கள் கருதப்படுகின்றன. உப=என்றால் சமீபம் என்று பொருள். ஆசாரியனுக்கு சமீபமாக இருந்து கேட்டுப் பெற்ற உபதேசம். நி=என்றால் நிச்சயமாக, ஷத் = என்றால் களைகிறது என்று பொருள். (அஞ்ஞானம் களைந்து விடுகிறது.) உபநிஷத்துக்கள் வேதங்களின் கடைசிபாகமாகக் கருதப்படுவதால் உபநிஷத்சாரங்கள் வேதாந்தம் என்று பெயர் பெற்றுள்ளது.

வேதங்கள் நான்குக்கும் ஆறுவகையான தரிசனங்கள் வகுக்கப்பட்டுள்ளன. அவைகள் முறையே நியாயம், வைசேஷகம், மீமாம்சை, சாங்கியம், யோகம், வேதாந்தம் என்பவைகளாகும்.

**நியாயம்** என்பது எப்படி சிந்திப்பது? எப்படி போதிப்பது என்பதை உணர்த்துவதாகும். **வைசேஷகம்** என்பது அறியப்படும் பொருள் கசடறக் கற்றதுதானா என்ற ஆய்வு நிலையும், கற்றறிந்தது உண்மைப் பொருள்தானா என்று தெளிவு பெறுதலுமாகும். இந்த வைசேஷக தரிசனத்துக்கு ஒத்துள்ள பொருளுடன் கூடிய திருக்குறள் ஒன்று உண்டு.

**எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** குறள்—355

**மீமாம்சை** என்பது எது தர்மம்? எது அதர்மம்? என்று ஆயந்தறிதல்.

**சாங்கியம்** என்பது பிரபஞ்ச உற்பத்திக்கு மூலகாரணமாயுள்ள பிரகிருதியின் தோன்றாநிலை (அவ்யக்தம்) தோற்றத்துக்குரிய நிலை (வியக்தம்) ஆகிய இரு நிலைகளின் தத்துவங்களை உணர்த்துவது சாங்கியம் ஆகும்.

**யோகம்** என்பது அஷ்டாங்க யோகமாகும். இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம் சமாதி எனப்படும் எட்டு வகையான யோகப் பயிற்சிகளுக்குரிய நிலைகளாகும்.

**வேதாந்தம்** என்பது வேதங்களுக்கெல்லாம் அந்தமாக அமைந்துள்ள உபநிஷத்துக்களின் சாரங்கள் வேதாந்தம் எனப் படுகிறது.

சைவசித்தாந்தங்கள் அடங்கிய பெருமறை நூல்களிலும் திருவருட்குறிப்புகள் (தரிசனங்கள்) சொல்லப்பட்டுள்ளன. அவைகள் ஆசிரம நெறிமுறைகள் என்று நான்கு தரிசனங்களும், பதமுத்தி நிலைகள் என்று நான்கு தரிசனங்களும் கூறப் பட்டுள்ளன. ஆசிரம நெறிமுறைகளின் கீழ் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு குறிப்புகளும், பதமுத்தி நிலைக் குறிப்புகளாக சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம் என்று நான்கு நிலைகளும் கூறப்பட்டுள்ளது. இவ்வெட்டு திருவருட் குறிப்புகளின் விளக்கங்கள் யாதென்று பார்ப்போம்.

**சரியை** என்பது மன்னுயிர்கள் அனைத்தையும் தன்னுயிர் போல் காத்தல். நீதி நூல்களை ஓதுவது, ஓதுவிப்பது, அடியார் களுக்கு தொண்டாற்றுவது சரியையாகும்.

**கிரியை** என்பது குருமொழி நின்று கற்றறிந்தனவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுதல். உடலையும் உள்ளத்தையும் தூய்மை யாக்கி இறைவனை உள்முகமாக உணர்ந்து மானசீக பூசை மூலம் திருமுழுக்காட்டல் கிரியையாகும்.

**யோகம்** என்பது சித்த விருத்திகளைக் கட்டுப்படுத்தி ஒருமுக மான மனநிலையுடன் இணைதல் யோகம் எனப்படும். இவ்வகை யான யோகப் பயிற்சிகள் இயமம், நியமம், ஆசனம், பிராணா யாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம்,சமாதி என்று எண் வகைப் பயிற்சி நிலைகளுடன் கூடியது. அது அட்டாங்க யோகம் என்றும் கூறப்படுகிறது.

**ஞானம்** என்பது தன்வினை அறுத்து வினைமாசுகளை நீக்கித் தூய வாழ்வினனாகி, வீடுபேற்றை இறைவனின் அருளால் கிடைக்கப் பெறும் மேல்நிலைக்கு உயர்த்தும் உண்மைப் பேரறிவு பெறுவது ஞானம் ஆகும்.

**சாலோகம்** என்பது கடவுள் சிருஷ்டித்த உலகில் வசித்து, முக்தி, பெறுவதற்குரிய மார்க்கங்களையுடையதாகும். இது சரியைக்குரிய மார்க்கமாகும்.

**சாமீபம்** என்பது கடவுளைத் துதித்துப் போற்றி புகழ்ந்து வாழ்த்தி இறைவனுக்கு அணுக்கத் தொண்டனாக இருந்து முக்தியடைவது. இது கிரியைக்குரிய மார்க்கமாகும்.

**சாரூபம்** என்பது காமக் குரோதாதிகளை நீக்கி சத்துவ குணனாய் இருந்து இறைவனது திருமேனியை நெஞ்சில் பதித்து மெய்யுருகி முக்தி நிலையடைதல். இது யோகத்துக்குரிய மார்க்கமாகும்.

**சாயுஜ்யம்** என்பது இறைவனோடு இரண்டறக் கலந்து 'அதுவே தானாய்,தானே அதுவாய்' சங்கமித்து முக்தி பெறுதல். இது ஞான மார்க்கமாகும்.

இறைவனுக்கு அணுக்கத் தொண்டனாக இருந்து அவனது திருவடிப் பேறுபெறுவதற்குரிய திருவருட் குறிப்புகளான சரியை, கிரியை, யோகம், ஞானம், சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம் ஆகிய எண் வகையான திருவருட் குறிப்புகளைக் கடைப்பிடித்து ஒழுகி, ஆன்மபோதம் (நுண்ணறிவு) மூலம் இறைவனின் திருவடிகளை நினைவிலிருத்தி, இறைவனோடு இரண்டறக் கலந்து, 'அதுவே தானாய், தானே அதுவாய்' சங்கமிக்கும் திருவடிப் பேறு பெற்றவர்களுக்கு பிரம்மஞானம் சித்தியாகிறது. ஜீவன் பிரம்மத்தோடு ஐக்கியமாகிறது. மனிதனும் தெய்வமாகிறான்.

"நான் அறிவு சொரூபமாக (பிரம்மமாக) இருக்கிறேன் என்பதுதான் 'அகம்பிரமாஸ்மி' என்ற மகாவாக்கியத்தின் பொருளாகும். எவனொருவன் நான் பிரம்மமாக இருக்கிறேன் (அகம்பிரமாஸ்மி) என்று அறிகிறானோ, அவன் இது அனைத்துமாக ஆகிறான். அவனது பெருமையைக் குறைவுபடுத்த தேவர்களாலும் இயலாது."

பிருகதாரண்ய கோபநிஷத் 1.10

**யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.** (குறள்—346)

தானல்லாத உடம்பைத் தான் என்றும்,தன்னுடையதல்லாத பொருளைத் தன்னுடையது என்றும் நினைத்து மயங்காதவன் எவனோ, அவன் வானவருக்கும் (தேவர்களுக்கும்) எட்டாத வீட்டுலகத்தை அடைவான். (பிரம்ம ஞானமும் பெறுவான்)

# 3. பிரம்ம ஞானம்

யோகம் என்ற சொல்லுக்கு இணைதல் என்பது ளாகும். பக்தியோடு இணைதல் பக்தியோகம். பயனைத் செயலோடு (கர்மா) இணைதல் கர்ம யோகம். இறை தத்துவங்களோடு இணைதல் ஞான யோகம். ஒன்றேயாs பொருளை அறிவதற்கு உண்மைப் பேரறிவுடன் இல பிரம்ம (ஞானம்) யோகம்.

மாறுதல் இல்லாத அன்புடன் நல்ல வார்த்தை பேசுதல், தெய்வ நாமாவளிகளை உள்ளார்த்தமாக படி; பாடுதல் மூலம் இறைவழிபாடு செய்வது பக்தியோகம்.

நித்திய கருமங்களை நியமம் தவறாமலும் பயன் துய்க்காமலும் செயல்களைச் (கர்மாக்கள்) செய்து மு கர்மயோகம்.

இந்திரிய சுகானுபவங்களைத் துறப்பதற்கு பு; துணைக் கொண்டு பற்றற்ற உள்ளத்துடன் அன்பு-கருணை-தொண்டு ஆகிய உணர்வுகளுடன் இறை தத்துவங்களைப் பற்றிய பேரறிவு பெறுதல் ஞானயோகட

பிரம்மம் என்றால் என்ன? அத்யாத்மம் என்றால் கர்மம் எது? அதிபூதம் என்று கூறப்படுவது எது? அதின எது? என்ற பிரம்ம ஞானம் பற்றிய ஆய்வுகள் மூலம் உ பேரறிவு பெறுதல் பிரம்ம (ஞானம்) யோகம்.

இறைநிலைத் (பிரம்ம ஞானம்) தத்துவத்தை ஏற் மறுப்போரும் சமுதாய ஒழுக்கத்தைத் தவறாமல் மேற் வேண்டும். சமுதாய ஒழுக்கத்தைக் கடைபிடிக்காத ஆத் நாத்திகரும் மனிதவர்க்கத்தில் மிகக் கீழ்த்தரமானவர்கள்

கல்வி அறிவு (பாண்டித்யம்) மட்டும் ஒருவனை பக்தட ஆக்கிவிடாது. முதலில் கடவுள் தத்துவத்தின்மீது நம்பிக்கை வைக்க வேண்டும். கடவுள் காட்சிப் பொருள் சாட்சிப் பொருளே ஆவார்.

## பக்தி யோகம்

''மாதா பித்ரு ஆச்சார்யா அதிதி தேவோயபவ'' உபநிஷத் கருத்தினையொட்டி தமிழ்ப் பழமொழிகளும்

''மாதா பிதா குருதெய்வம்'', ''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்ற நீதி வாக்கியங்களே அத்தமிழ் பழமொழி களாகும்.

என்ன காரணத்தாலோ வீட்டுக்கு வருகை தரும் விருந்தினர் களும் தெய்வாம்சம் நிறைந்தவர்களே என்ற கருத்து தமிழ்ப் பழமொழிகளில் வலியுறுத்தப்படவில்லை. அதிதி (யதி) என்ற சொல்லுக்கு சந்நியாசி, சாது என்ற பொருளும் உண்டு.

'விருந்தும் மருந்தும் மூன்று வேளைக்கு மேல் மிகக் கூடாது' என்ற வட்டார வழக்கு மொழிகளுக்கேற்பவும், பொருளாதார நிலைமையை அனுசரித்தும், ஒப்புடன் முகமலர்ந்து விருந்தினர் களை உபசரிக்கும் மனப்பக்குவமும் மக்களிடையே அருகிவிட்ட காரணத்தாலும், விருந்துண்பவர்க்கும் விருந்து அளிப்பவர்க்கும் கூடுதல் மனச்சுமை இருக்கக் கூடாது என்ற காரணத்தாலும், மாதா பிதா குருவுக்கு அடுத்து அதிதிகளை தெய்வத்தின் வரிசை யில் தமிழ் பழமொழிகள் மூலம் வலியுறுத்தப்படவில்லை போலும்?

தமிழ்ப் பழமொழிகள் மூலம் அதிதிகள் தெய்வ வரிசையில் சேர்க்கப்படவில்லையென்றாலும், தெய்வத் திருமறையாம் திருக்குறளில் 'விருந்தோம்பல்' என்ற அதிகாரத்திலுள்ள பத்துக் குறட்பாக்கள் மூலம் விருந்தின் சிறப்பு, பெருமைப்படுத்திப் பேசப்பட்டுள்ளது.

மாதா பிதா குரு அதிதி ஆகியோரைத் தெய்வமாகக் கருத்தில் கொண்டு இறைவழிபாட்டினைத் தொடர வேண்டும்.

அன்பு-அருள்-கருணை- தொண்டு உள்ளம் ஆகிய கல்யாண குணங்களே இறைமாட்சியாகும். உலக மதங்கள் அனைத்தும் 'அன்பே கடவுள்' என்ற தத்துவத்தையே மூலக் கருவாகக் கொண்டுள்ளது.

அன்பு எனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பு எனும் குடில் புகும் அரசே
அன்பு எனும் வலைக்குள்படும் பரம்பொருளே
அன்பு எனும் கரத்தமர் அமுதே
அன்பு எனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பு எனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பு எனும் அணுவுள் அமைந்த பேரொளியே
அன்புருவாம பர சிவமே.

என்ற திருவருட்பாப் பாடல் மூலம் திருஅருட்பிரகாச வள்ளலாரும் அன்புக்கும் ஆண்டவனுக்கும் இடையே உள்ள இறைமாட்சிமையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

சிவம் என்ற சொல்லுக்கு அன்பு என்ற மறைபொருளுமுண்டு இறைவனிடம் நாம் கொள்ளும் அன்புதான் பக்தி என்றும், இறை வழிபாடு என்றும் வலியுறுத்தப் படுகிறது.

பக்திநிலை ஐந்து வகைகளாகும் என்று கூறப்பட்டுள்ளது. அவைகள் முறையே சாந்தம், தாஸ்யம், சகீயம், வாத்சல்யம், மதுரபாவம் எனப்படும்.

பகவானிடம் அமைதி நிலையுடன் பக்தி கொண்டு வழிபாடு செய்வது சாந்தம். சேவா உணர்ச்சியுடன் எஜமான் வேலையாள் போன்ற மனநிலையுடன் இறை வழிபாடு செய்வது தாஸ்யம். தோழமை உணர்வுடன் பக்தி வழிபாடு செய்வது சகீயம். தாய்ப் பாசத்துடன் கூடிய மனோநிலையில் இறை வழிபாடு செய்வது வாத்சல்யம். நாயகன் நாயகிஇருவரிடையே தோன்றும் பரிசுத்த அன்பு பரிவர்த்தனை மனோபாவத்துடன் இறைவழிபாடு செய்வது மதுரபாவம். இந்நிலையைச் சரணாகதி என்றும் கூறலாம்.

மேற்கூறிய பக்தி நிலைகளை அனுபவிப்பதற்குப் பற்றற்ற நிலையில் (விரக்திமயம்) இந்திரிய சுகானுபவங்களை விட்டொழிக்க வேண்டும். கடவுளின் அனுக்கிரகத்தைப் பெறுவதற்குத் தெய்வ நாமாவளிகளைப் பாடியும், புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றும் பக்தி பூர்வமாக பகவானைத் தியானித்துத் தெய்வத் திருவருளை வேண்டுவது பிரேமபக்தி எனப்படும்.

பணிவும் தொண்டு உள்ளமும் இல்லாதவரது பக்தி தகுதியற்ற பக்தி நிலையேயாகும். பக்தியில் நம்பிக்கை இல்லை யென்றால் பணிவும் தொண்டு உள்ளமும் வாய்க்காது. தெய்வ நம்பிக்கையுடன் ஒவ்வொருவரும் அவர்களது அறிவாற்றலை நன்குணர்ந்து அவ்வாற்றலில் [Will Power] பூரண நம்பிக்கை கொள்ள வேண்டும். அறிவாற்றலுடன் கூடிய தெய்வ நம்பிக்கையே மனிதனை உயர்ந்த பண்பு உள்ளவன் ஆக்கும். இவ்வகையிலான நம்பிக்கை உணர்வுடன் தன்னையும் தன் உடைமைகளையும் பகவானுக்கு அர்ப்பணிக்கும் தியாக உள்ளத்துடன் இறைவழிபாடு செய்வது பக்தியோகம் ஆகும்.

புலன்களால் அறிய முடியாத நிர்குண பிரம்மமான அருவமான பரம்பொருளில் மனத்தை நிலை நிறுத்துவோர் அதிகமாக பிரயாசை மேற்கொள்ள வேண்டியிருக்கும். உருவ வழிபாடு மூலம் பக்தி மார்க்கத்தில் நமது மனத்தை நிலை நிறுத்திக் கொள்வதற்கான மார்க்கங்களை மதங்களும், சமய நெறிகளும் நமக்குப் போதிக்கின்றன.

இறை உணர்வு, மனித நேயம், ஆன்ம அறிவியல் ஆகிய வற்றைப் போதிப்பது எதுவோ, அதுவே மதம், தெய்வ சிந்தனை, உண்மை, ஒழுக்கம், இரக்கம் ஆகிய வாழ்வியல் நெறிமுறைகளை போதிப்பது சமயம் எனப்படும்.

வேதகாலத்தில் இன்று நாம் வழங்கும் இந்து மதம் என்ற பெயரில் மதம் எதுவுமில்லை. இறை உணர்வு, மனித நேயம், ஆன்மபோதம், அன்பு, கருணை, தொண்டு, உண்மை, குருபக்தி ஆகியவற்றையே வேதங்களும் உபநிடதங்களும் நமக்குத் தெளிவு படுத்தியுள்ளன.

வேதாந்த அறிவின் விரிந்த நிலையே சைவம் வைஷ்ணவம் என்ற பிரிவுகளை நமக்குப் போதித்தன. பரதகண்டம் என்பது புவியியல் ஆய்வாளர்களால் எப்போது இந்தியா என்று அழைக்கப்பட்டதோ, அந்த காலகட்டத்திலிருந்துதான் இந்தியன், இந்து மதம் என்ற பெயர்கள் ஸ்தாபிக்கப்பட்டன.

இந்து மதக் கொள்கையின் அடிப்படையில் சில மாற்றங் களுடன் பௌத்தமும், ஜைனமும், தனி மதங்களாகப் போதிக்கப் பட்டன.

இந்து மதக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு அறுவகைச் சமய வழிபாட்டு முறைகளை இன்று கடைபிடித்து வருகிறோம். காணாபத்தியம் (விநாயகர் வழிபாடு) சைவம் (சிவ வழிபாடு) வைஷ்ணவம் (விஷ்ணு வழிபாடு) சாக்தம் (சக்தி வழிபாடு) கௌமாரம் (குமரக் கடவுளான முருகன் வழிபாடு) சௌரம் (சூரிய வழிபாடு) ஆகிய சமய நெறிமுறைகள் மூலம் தெய்வ வழிபாட்டினைச் செய்து வாழ்வியல் நெறிமுறைகளை ஒழுங்கு படுத்திக் கொண்டு தெய்வத் திருவருட்கடாட்சத்தால் நலமுடன் வாழ்கிறோம்.

அறுவகைச் சமயத்து அறுவகையோர்க்கும்
வீடு பேறு ஆய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் நாள் தொறும்.

திருவாசகம்—திருவண்டப்பகுதி

"அறுவகைச் சமயங்களையொட்டி தெய்வ வழிபாடு செய்யும் அறுவகைச் சமயத்தவர்களையும், தேவர்களையும், புழு முதலான அனைத்து ஜீவராசிகளையும் இறைவன் சமமாகப் பாவித்து அருள் புரிகிறார்" என்று மணிவாசகப் பெருமானும் கூறியுள்ளார்.

"வெளிப்படையாகத் தெரியாத என்னை பிரத்யட்ச உருவம் உடையவன் என்று அறியாதவர்கள் எண்ணுகின்றனர்"

—கீதை அத்-7-சுலோ 24

சிவம் என்ற சொல்லுக்கு அன்பு என்ற மறைபொருளுமுண்டு இறைவனிடம் நாம் கொள்ளும் அன்புதான் பக்தி என்றும், இறை வழிபாடு என்றும் வலியுறுத்தப் படுகிறது.

பக்திநிலை ஐந்து வகைகளாகும் என்று கூறப்பட்டுள்ளது. அவைகள் முறையே சாந்தம், தாஸ்யம், சகீயம், வாத்சல்யம், மதுரபாவம் எனப்படும்.

பகவானிடம் அமைதி நிலையுடன் பக்தி கொண்டு வழிபாடு செய்வது சாந்தம். சேவா உணர்ச்சியுடன் எஜமான் வேலையாள் போன்ற மனநிலையுடன் இறை வழிபாடு செய்வது தாஸ்யம். தோழமை உணர்வுடன் பக்தி வழிபாடு செய்வது சகீயம். தாய்ப் பாசத்துடன் கூடிய மனோநிலையில் இறை வழிபாடு செய்வது வாத்சல்யம். நாயகன் நாயகிஇருவரிடையே தோன்றும் பரிசுத்த அன்பு பரிவர்த்தனை மனோபாவத்துடன் இறைவழிபாடு செய்வது மதுரபாவம். இந்நிலையைச் சரணாகதி என்றும் கூறலாம்.

மேற்கூறிய பக்தி நிலைகளை அனுபவிப்பதற்குப் பற்றற்ற நிலையில் (விரக்திமயம்) இந்திரிய சுகானுபவங்களை விட்டொழிக்க வேண்டும். கடவுளின் அனுக்கிரகத்தைப் பெறுவதற்குத் தெய்வ நாமாவளிகளைப் பாடியும், புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றும் பக்தி பூர்வமாக பகவானைத் தியானித்துத் தெய்வத் திருவருளை வேண்டுவது பிரேமபக்தி எனப்படும்.

பணிவும் தொண்டு உள்ளமும் இல்லாதவரது பக்தி தகுதியற்ற பக்தி நிலையேயாகும். பக்தியில் நம்பிக்கை இல்லை யென்றால் பணிவும் தொண்டு உள்ளமும் வாய்க்காது. தெய்வ நம்பிக்கையுடன் ஒவ்வொருவரும் அவர்களது அறிவாற்றலை நன்குணர்ந்து அவ்வாற்றலில் [Will Power] பூரண நம்பிக்கை கொள்ள வேண்டும். அறிவாற்றலுடன் கூடிய தெய்வ நம்பிக்கையே மனிதனை உயர்ந்த பண்பு உள்ளவன் ஆக்கும். இவ்வகையிலான நம்பிக்கை உணர்வுடன் தன்னையும் தன் உடைமைகளையும் பகவானுக்கு அர்ப்பணிக்கும் தியாக உள்ளத்துடன் இறைவழிபாடு செய்வது பக்தியோகம் ஆகும்.

புலன்களால் அறிய முடியாத நிர்குண பிரம்மமான அருவமான பரம்பொருளில் மனத்தை நிலை நிறுத்துவோர் அதிகமாக பிரயாசை மேற்கொள்ள வேண்டியிருக்கும். உருவ வழிபாடு மூலம் பக்தி மார்க்கத்தில் நமது மனத்தை நிலை நிறுத்திக் கொள்வதற்கான மார்க்கங்களை மதங்களும், சமய நெறிகளும் நமக்குப் போதிக்கின்றன.

இறை உணர்வு, மனித நேயம், ஆன்ம அறிவியல் ஆகிய வற்றைப் போதிப்பது எதுவோ, அதுவே மதம், தெய்வ சிந்தனை, உண்மை, ஒழுக்கம், இரக்கம் ஆகிய வாழ்வியல் நெறிமுறைகளை போதிப்பது சமயம் எனப்படும்.

வேதகாலத்தில் இன்று நாம் வழங்கும் இந்து மதம் என்ற பெயரில் மதம் எதுவுமில்லை. இறை உணர்வு, மனித நேயம், ஆன்மபோதம், அன்பு, கருணை, தொண்டு, உண்மை, குருபக்தி ஆகியவற்றையே வேதங்களும் உபநிடதங்களும் நமக்குத் தெளிவு படுத்தியுள்ளன.

வேதாந்த அறிவின் விரிந்த நிலையே சைவம் வைஷ்ணவம் என்ற பிரிவுகளை நமக்குப் போதித்தன. பரதகண்டம் என்பது புவியியல் ஆய்வாளர்களால் எப்போது இந்தியா என்று அழைக்கப்பட்டதோ, அந்த காலகட்டத்திலிருந்துதான் இந்தியன், இந்து மதம் என்ற பெயர்கள் ஸ்தாபிக்கப்பட்டன.

இந்து மதக் கொள்கையின் அடிப்படையில் சில மாற்றங் களுடன் பௌத்தமும், ஜைனமும், தனி மதங்களாகப் போதிக்கப் பட்டன.

இந்து மதக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு அறுவகைச் சமய வழிபாட்டு முறைகளை இன்று கடைபிடித்து வருகிறோம். காணாபத்தியம் (விநாயகர் வழிபாடு) சைவம் (சிவ வழிபாடு) வைஷ்ணவம் (விஷ்ணு வழிபாடு) சாக்தம் (சக்தி வழிபாடு) கௌமாரம் (குமரக் கடவுளான முருகன் வழிபாடு) சௌரம் (சூரிய வழிபாடு) ஆகிய சமய நெறிமுறைகள் மூலம் தெய்வ வழிபாட்டினைச் செய்து வாழ்வியல் நெறிமுறைகளை ஒழுங்கு படுத்திக் கொண்டு தெய்வத் திருவருட்கடாட்சத்தால் நலமுடன் வாழ்கிறோம்.

அறுவகைச் சமயத்து அறுவகையோர்க்கும்
வீடு பேறு ஆய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் நாள் தொறும்.

திருவாசகம்—திருவண்டப்பகுதி

"அறுவகைச் சமயங்களையொட்டி தெய்வ வழிபாடு செய்யும் அறுவகைச் சமயத்தவர்களையும், தேவர்களையும், புழு முதலான அனைத்து ஜீவராசிகளையும் இறைவன் சமமாகப் பாவித்து அருள் புரிகிறார்" என்று மணிவாசகப் பெருமானும் கூறியுள்ளார்.

"வெளிப்படையாகத் தெரியாத என்னை பிரத்யட்ச உருவம் உடையவன் என்று அறியாதவர்கள் எண்ணுகின்றனர்"

—கீதை அத்-7-சுலோ 24

பகவத்கீதையின் பன்னிரண்டாம் அத்தியாயம் 'பக்தியோகம்' என்ற பகுதியாகும். அப்பழுக்கற்ற பக்தியினால் மட்டுமே கடவுளின் தோற்றத்தைக் காண்பது சாத்தியம் என்று கீதையில் வலியுறுத்தப்பட்டுள்ளது. இருபது சுலோகங்களைக் கொண்ட பக்தியோக விவரம் பின்வருமாறு.

1. இடைவிடாது அன்புடன் வழிபடும் பக்தர்கள், அழிவற்றப் பரம்பொருளை வழிபடுவோர் இவர்களுள் யார் சிறந்த யோகிகள் ஆவர்.

2. என்னிடத்தில் மனத்தை நிலை நிறுத்தி எப்போதும் பக்தியுடனும், மகத்தான நம்பிக்கையுடனும் என்னை யார் வழி படுகிறார்களோ, அவர்களை நான் யோகிகள் என்று கருதுகிறேன்.

3. அழிவற்ற, விவரிக்க முடியாத, உருவமற்ற, எங்கும் வியாபித்த சிந்திக்க முடியாத பாறை போன்று அசைவற்ற, மாறுதலற்ற பரம் பொருளை யார் வழிபடுகிறார்களோ;

4. இந்திரியக் கூட்டங்களைப் பூரணமாக அடக்கியவர்களும், எல்லோரையும் சமபுத்தியுடன் நோக்குபவர்களும், எல்லோருடைய நலத்திலும் தீவிர அக்கறையுடையவர்களுமான அவர்கள் என்னை அடைகிறார்கள்,

5. உருவமற்ற பரம்பொருளில் மனத்தை நிலை நிறுத்துவோர், அதிகமான பிரயாசையை மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஏனெனில், உடல் எடுத்த மனிதர்கள் பரம்பொருளை அறிவதற்கான லட்சியத்தை அடைவது கடினமாகும்.

6. தங்களுடைய எல்லாக் கர்மங்களையும் அர்ப்பணம் செய்து விட்டு எல்லாவற்றிற்கும் நானே கதியென்று, வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாமல் ஆழ்ந்த பக்தியுடன் என்னை தியானித்து யார் வழிபடுகிறார்களோ.

7. அவ்விதம் யாருடைய சிந்தனைகள் என்னிடம் லயித்திருக்கின்றனவோ, அத்தகையோரை மரணமும் துன்பங்களும் நிறைந்த இந்த உலகமாகிற மகா சமுத்திரத்திலிருந்து நான் கரையேற்றுகிறேன்.

அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது
குறள்—8

"அறக்கடலாக விளங்கும் இறைவனின் பாதகமலங்களைப் பற்றிக் கொண்டாலன்றி பிறவிக் கடலைக் கடப்பது இயலாது" என்ற இக்குறளின் கருத்து மேற்கண்ட கீதை சுலோகத்தோடு ஒத்துள்ளது.

8. உன் மனத்தை என்மீது நிலைநிறுத்தி, என்மீது உறுதியான நம்பிக்கை வைப்பாயாக. அவ்விதமாயின், இதற்குப் பிறகு நீ என்னிடத்திலேயே இருப்பாய் (என்னையே அடைவாய்) என்பதில் சந்தேகமில்லை.

9. என்மீது உன் மனத்தை உறுதியுடன் நிலை நிறுத்த உன்னால் முடியா விட்டால், பின்னர் இடைவிடாத பயிற்சியை மேற்கொண்டு என்னை அடைய முற்படுவாயாக.

10. இடைவிடாது பயிற்சி செய்யும் இந்த பயிற்சியையும் உன்னால் மேற்கொள்ள முடியவில்லையென்றால், எனக்குப் பணி செய்வதிலேயே உன் முழுமனத்தையும் செலுத்துவாயாக, அவ்விதம் எனக்குத் தொண்டு செய்வதன் மூலமாகவும் நீ மோட்சத்தை அடைவாய்.

11. இதைக் கூட உன்னால் செய்ய முடியவில்லை என்றால், மனத்தைக் கட்டுப்படுத்தி எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்து, செயல்களின் (கர்மங்களின்) பலன்களை யெல்லாம் துறந்து விடுவாயாக.

12. யோகப்பயிற்சியைவிட ஞானம் சிறந்தது. ஞானத்தை விட தியானம் சிறந்தது, தியானத்தை விட செயல்களின் (கர்மங்களின்) பலனையெல்லாம் துறத்தல் மேலானது. இவ்விதம் துறப்பதால் சாந்தி ஏற்படுகிறது.

13. யார் மீதும் துவேஷம் இல்லாதவனாக எல்லோரிடத்திலும் நட்பு கொண்டவனாக, எல்லோரிடத்திலும் கருணையுள்ளவனாக, 'என்னுடையது,' 'நான்' என்ற எண்ணத்தையெல்லாம் அறவே கைவிட்டவனாக இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதுபவனாக பொறுமையுடையவனாக.

14. எப்போதும் போதும் என்ற மனத்திருப்தியுடையவனாக, யோகப் பயிற்சியில் அனுபவம் பெற்றவனாக, தன்னடக்கம் உள்ளவனாக, உறுதியான கொள்கையுடைவனாக, தனதுமனத்தையும் அறிவையும் என்னிடம் அர்ப்பணம் செய்தவனாக யார் இருக்கிறானோ அத்தகைய பக்தனே எனக்குப் பிரியமானவன்.

15. எவன் உலகத்திற்கு யாதொரு துன்பமும் இழைப்பதில்லையோ, யாருக்கு உலகம் எவ்விதத் துன்பமும் இழைப்பதில்லையோ, யார் மகிழ்ச்சி, கோபம், அச்சம், கலக்கம் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெறுகிறானோ அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

16. எதையும் விரும்பாதவனும், தூய்மையானவனும், திறமையுடையவனும், பற்றின்றி எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனும், கவலையற்றவனும், புதிய பொறுப்புகளை மேற் கொள்ளாதவனும் யாரோ அவனே எனக்குப் பிரியமானவன்.

17. யார் மகிழ்ச்சியடைவதில்லையோ, துவேஷத்தினால் அலட்டிக் கொள்வதில்லையோ, நல்லது கெட்டது எல்லாவற்றை யும் எவன் துறந்து விடுகின்றானோ அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

18. விரோதியையும், நண்பனையும் ஒரே விதமாகக் கருது பவனும், மானம்—அவமானம், குளிர்—உஷ்ணம், இன்பம்—துன்பம் ஆகியவற்றைச் சமமாகக் கருதுபவனும், பற்றுதலி லிருந்து விடுதலை பெற்றவனும்.

19. புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் ஒன்றாகக் கருது பவனும், மௌனமாக இருப்பவனும், தனக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைபவனும், சொந்த இருப்பிடம் இல்லா தவனும், உறுதியான மனம் படைத்தவனும் யாரோ அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

20. நான் கூறியுள்ள விதம் தர்மத்தின் சாரமான இதையார் நம்பிக்கையுடனும், என்னை லட்சியமாகக் கொண்டு என்னை யார் பின்பற்றுகிறார்களோ, அத்தகைய பக்தர்களே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

'பக்தி யோகம்' என்ற பகவத்கீதையின் பன்னிரண்டாம் அத்தியாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது.

## கர்மயோகம்

பக்தன் அன்பார்ந்த பக்தியினால் தனது குறிக்கோளை அடைய முயற்சிக்கிறான். புத்தி. ஆய்வு இவ்விரண்டின் துணை கொண்டு தனது குறிக்கோளையடைய ஞானி முயற்சி செய்கிறான். பயன் துய்க்காமலும் சுய நலமில்லாமலும் தன்னுடைய ஒவ்வொரு செயலையும் நியமம் (ஒழுங்கு) தவறாமல் செய்து முடிக்க கர்மயோகி முற்படுகிறான்.

ஆன்மிக வளர்ச்சிக்கு முயற்சி தேவைப்படுகிறது முயற்சிக்கு பற்றற்ற கர்மாக்கள் (செயல்) தேவைப்படுகிறது. அவ்வகை யிலான லட்சியங்களையடைய மனிதன் மேற்கொள்ளும் சுயநல மில்லாத செயல்பாடுகளே கர்மயோகம் ஆகும்.

''கடவுளைப் பற்றிய பல்வேறு கொள்கையில் சர்ச்சையிட்டுக் கொண்டு, ஆன்மாவைப் பற்றிய நுட்பமான விஷயங்களை ஆய்ந்து அறிந்து கொள்வதை விட, நீ நல்லவற்றையே நினைத்து நல்லவற்றையே செய்து நீ நல்லவனாக இருப்பாயாக. நீ உண்மையை பிரதிபலிப்பவனாக இருப்பாயேயானால் அதுவே போதும்.'' என்று மகான் புத்தர் கூறியுள்ளார்.

நல்லவனாக இருக்கவும், நல்லனவற்றை நினைத்து நல்லன வற்றையே செய்து முடிக்கவும். அத்தகைய நற்செயல்கள் யாவும் சுயநலமில்லாமல் இருக்கும் வகையில் நித்தியகர்மாக்களை செய்து முடிப்பதே கர்மயோகம்.

வேண்டியவர் வேண்டாதவர், ஜாதி, இனம், போன்ற பாகு பாடு இல்லாமலும், ஜீவகாருண்ய சிந்தனையுடனும், காரியத்தை செய்து முடித்தால் பயன் அடையப் போகிறவர் யார் என்ற ஆய்வு இல்லாமலும், செய்து முடிக்கும் காரியத்தால் கிடைக்கப் போகும் பொருள் (செல்வங்கள்) யாது? அக்காரியத்தை செய்து முடித்தால் புகழ் கிடைக்குமா? என்றெல்லாம் சிந்திக்காமல் எந்த ஒரு காரியத்தையும் செய்து முடிக்க சங்கற்பம் மேற்கொள்பவர் எவரோ அவரே கர்மயோகி ஆவார்.

கர்மயோகம் பற்றி பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளதைப் படித்து ஆய்ந்து பயன்பெறலாம். சுயநலமற்றச் செயல்களால் (கர்மங்களால்) ஞானம் கைவரப்பெறும் என்று பகவத்கீதையில் கர்மயோகம் பகுதி தெளிவுபடுத்துகிறது. கீதையில் கூறப் பட்டுள்ள 'கர்மயோகம்' பகுதியின் சுலோகங்கள் பின்வருமாறு:

1. ''செயலைக் காட்டிலும் பற்றற்ற நிலை உயர்ந்தது. என்றால், பயங்கரமான (போர்புரிதல் போன்ற) செயல்களைப் புரியும்படி ஏன் வற்புறுத்துகிறீர்கள்?

2. ''புதிர் போன்ற பேச்சினால் தாங்கள் என்னைக் குழப்பு வது போன்று தோன்றுகிறது. ஆகையால், எதைச் செய்ய வேண்டு மென்று மாத்திரம் சந்தேகத்துக்கு இடமின்றி கூறுங்கள்.

3. ''இந்த உலகில் அடையக்கூடிய இரண்டு நிலைகளான ஞானயோகம், கர்மயோகம் இரண்டனையும் உனக்குச் சொல்லி இருக்கிறேன்.

4. ''மனிதன் எந்த ஒரு செயலையும் மேற்கொள்ளாததால் மட்டும் கர்மத்திலிருந்து விடுபட்ட நிலையை அனுபவிப்பதில்லை. செயலை துறப்பதால் மட்டும் அவன் மோட்சத்தை அடைவதும் இல்லை.

5. ''எந்த மனிதனும் எக்காலத்திலும் ஒரு வினாடி கூட யாதொரு செயலிலும் ஈடுபடாமல் இருக்க முடியாது. அவர் அவர் களுக்குரிய குணங்களுக்கேற்ப, எல்லோரும் செயலில் ஈடுபட்டுத் தீரவேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

6. ''கர்மேந்திரியங்களை அடக்கும் ஒருவன் புலன்களுக்கான சாதனங்களை மனத்தில் சிந்தித்த வண்ணம் இருப்பானாயின் அத்தகைய மூடன் ஒரு மோசக்காரன் என்றே கூற வேண்டும் (இச்சுலோகத்துக்கு ஒத்துள்ள குறள்)

நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல். ( குறள் 276,

''மனத்தில் ஆசை விடாதவராய், ஆசையை விட்டவர் போலக் கபடஞ்செய்து வாழ்கின்றவரைக் காட்டிலும் கொடியவர் எவரும் இலர்.''

7. ''எவன் எல்லாப் புலன்களையும் மனத்தினால் அடக்கிப் பற்றின்றி கர்மயோகத்தில் புலன்களை ஈடுபடுத்துகிறானோ அவன்தான் சிறந்தவன்.

8. ''உனக்கு இடப்பட்டுள்ள கடமையை நீ செய்! ஏனெனில்? செயலற்று இருப்பதைக் காட்டிலும் செயல் மேலானது. செயலற்று இருந்தால், வாழ்க்கைக்கு அவசியமான உணவு உண்ணுதல் போன்ற சாதாரண அலுவல்களைச் செய்வது கூட அசாத்தியமாகி விடும்.

9. ''யக்ஞத்திற்காகச் செய்யும் கர்மங்களைத் தவிர மற்ற செயல்கள் யாவும் உலகத்திலுள்ள மனிதர்களை கட்டுண்டு இருக்கும்படி செய்துவிடுகின்றன. ஆகையால், பற்றற்றுச்செயல் புரிவாயாக. ('யக்ஞத்திற்காக செய்யும் கர்மாக்கள்' என்றால் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட தன்னலமற்ற தொண்டு என்று கருத்தில் கொள்ளவும்.)

10. ''ஆதியில் சிருஷ்டி கர்த்தா யக்ஞத்துடன் மனித வர்கத்தைச் சிருஷ்டித்து ''இதனால் நீங்கள் வளர்ச்சி அடைவீர் களாக! இது உங்களுடைய ஆசைகளையெல்லாம் நிறைவேற்று மாக'' என்று கூறினார்.

11. ''மேலும் சிருஷ்டிகர்த்தா கூறினார். ''இந்த யக்ஞத்தின் மூலம் நீங்கள் தேவர்களைப் பராமரியுங்கள். தேவர்கள் உங்களைப் பராமரிப்பார்கள், அவ்விதம் ஒருவரை ஒருவர் பராமரிப்பதன் மூலம் நீங்கள் மகோன்னதமான நன்மையை அடைவீர்கள்,

12. "யக்ஞத்தினால் பராமரிக்கப்பட்ட தேவர்கள் நீங்கள் விரும்பும் வரன்களை அளிப்பார்கள்., "ஆனால் அவர்களால் அளிக்கப்படுவதை, அவர்களுக்குச் சேரவேண்டியதைக் கொடுக்காமல் உண்பவன் உண்மையில் திருடனே ஆவான்.

13. "யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் தருமவான்கள் எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுபடுகின்றனர். ஆனால் தனக்கென்றே சமைப்பவர்கள் பாவத்தை உண்கின்றனர்.

14. "உணவிலிருந்தே எல்லா உயிர்களும் உண்டாகின்றன. மழையிலிருந்து உணவு உண்டாகிறது. யக்ஞத்திலிருந்து மழை பெய்கிறது. செயலின் பயனே யக்ஞம் எனப்படும். (இச்சுலோகத்துக்கு ஒத்ததாக உள்ள குறள் பின்வருமாறு.)

**துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**
**துப்பாய தூஉம் மழை.** (குறள்-12)

"உண்பவர்களுக்கு நல்ல உணவுகளை உண்டாக்கி அவற்றை உண்ணுகிறவர்களுக்குத் தானும் உணவாக அமைவது மழை."

15. "செயல் (கர்மம்) பிரம்மத்திலிருந்து உண்டாகிறது. பிரம்மம் அழியாத பரம்பொருளிலிருந்து உண்டாகிறது. எனவே எங்கும் வியாபித்துள்ள பிரம்மம் எப்போதும் யக்ஞத்தையே உறுதியான அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது.

16. அவ்விதம் சுழன்றுவரும் சக்கரத்தைப் பின்பற்றாமல் இந்த உலகில் யார் பாவம் செய்து கொண்டும் புலன்களைத் திருப்தி செய்து கொண்டும் வாழ்கின்றானோ அவனது வாழ்க்கை வீணாகிறது.

17. "ஆன்மாவினால் இன்புற்று ஆன்மாவினால் மனத் திருப்தியடைந்து, ஆன்மாவிலேயே மகிழ்ந்திருப்பவனுக்குச் செய்ய வேண்டிய காரியம் எதுவுமில்லை, (இந்த சுலோகத்தின் கருத்து சாந்தோக்கிய உபநிஷத்திலும் கூறப்பட்டுள்ளது)" "ஆத்மாவே கீழும் ஆத்மாவே மேலும்; ஆத்மாவே பின்னும், ஆத்மாவே முன்னும், ஆத்மாவே வலது புறத்திலும், ஆத்மாவே இடது புறத்திலும் ஆத்மாவே இவைகள் யாவுமாகவும் இருப்பதாக எவன் இங்ஙனம் காண்கிறானோ, சிந்திக்கிறானோ, அறிகிறானோ, ஆத்மாவிலேயே இன்பமும், ஆத்மாவிலேயே விளையாட்டும் ஆத்மாவிலேயே கூடி மகிழ்தலும், ஆத்மாவிலேயே ஆனந்தமும் உடைய அவன், ஆன்மாவிலேயே எல்லா இன்பங்களையும் அனுபவிக்கும் சுயராஜ்யத்தை (ஸ்வராட்) அடைந்து தன்னைத்தானே ஆள்பவன் ஆகிறான். அவன் எல்லா இடங்களிலும் தன் இச்சைப்படி நடக்கக் கூடியவனாகிறான்.

இதற்குமாறுபட்டுக் காண்பவர் யாவரோ அவர்கள் பிறரால் ஆளப்படுகின்றனர். அவர்களுடைய உலகங்கள் அழியக் கூடியவை. அவர்கள் எவ்வுலகங்களிலும் தம் இச்சைப்படி நடக்கக் கூடியவர்கள் அல்லர்'' சாந்தோக்ய உபநிஷத்—7-25-2.

18. ''எந்த காரியமாயினும் அதைச் செய்வதிலோ அல்லது செய்யாதிருப்பதிலோ அவனுக்கு எவ்வித அக்கறையும் இருப்ப தில்லை. சுயநலனுக்காக அவன் யாரையும் எதையும் சார்ந் திருக்க வேண்டிய அவசியமும் இல்லை.

19. ஆகையால், நீ செய்து தீரவேண்டிய வேலையை எப்போதும் பற்றில்லாமல் செய். பற்றின்றி செயல்புரிபவன் எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை அடைகிறான்.

20. ஜனகர்போன்ற இல்லறத்தாரும் மற்றவர்களும் செயல்களில் ஈடுபட்டதால்தான் சித்தியடைந்தார்கள். மனித வர்க்கத்திற்கு வழிகாட்டியாக இருப்பதற்கும் நீ செயல் புரிய வேண்டியது அவசியமாகும். (இச்சுலோகத்துக்கு ஒத்ததாக இருக்கும் குறள் பின்வருமாறு.)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். (குறள்—50)

''இந்த உலகத்தில் இல்லற வாழ்க்கையை அறநெறி தவறாமல் நடத்துபவன் விண்ணுலகில் தேவர்களிடையே இடம் பெறுவான்''

21. சிறந்த மனிதன் என்ன செய்கிறானோ அதையேதான் மற்றவர்களும் செய்வார்கள். அவர்கள் காட்டும் உதாரணத்தையே உலகம் பின்பற்றுகிறது.

22. மூன்று உலகங்களிலும் நான் செய்ய வேண்டிய கடமை எதுவுமே இல்லை. நான் அடையாத ஒன்றை இனி அடைந்தாக வேண்டும் என்பதும் இல்லை. அப்படி இருந்தும் கூட நான் எப்போதும் செயல்புரிந்த வண்ணம் இருக்கிறேன்.

23. உண்மையில், தூக்கமின்றி நான் எப்போதும் செயலில் ஈடுபடாவிட்டால், மனிதர்கள் ஒவ்வொரு வழியிலும் எனது உதாரணத்தையே பின்பற்றத் தொடங்கி விடுவார்கள்.

24. எனது கடமையை நான் செய்யா விடில் இந்த உலகம் அழிந்து விடும். பின்னர் குழப்பத்திற்கும் மானிட வர்க்கத்தின் முடிவிற்கும் நானே காரணமாக இருக்க நேரிடும்.

25. பாமரன் பற்றுதலுடன் எல்லாச் செயல்களிலும் ஈடுபடுவதைப் போலவே, படிப்பறிவு பெற்றவனும் மானிட

வர்க்கத்தின் நலனில் ஆசை வைத்து பற்றின்றி செயல் புரிய வேண்டும்.

26. கர்மத்தில் பற்றுள்ள பாமரனின் மனத்தை பண்டிதன் குழப்பிவிடக் கூடாது. அதற்கு மாறாக பண்டிதன், பற்றின்றி எல்லாக் கர்மங்களையும் செய்ய வேண்டும். பாமரனையும் அவ்விதமே பற்றின்றி செயல்கள் புரியுமாறு உற்சாகப் படுத்த வேண்டும்.

27. இயற்கையின் குணங்களாலேயே, எல்லாக் கர்மங்களும் செய்யப்படுகின்றன. எனினும் 'நான்' என்ற அகங்காரத்தில் மயங்கியுள்ள மனிதன் ''நான் தான் செய்பவன்'' என்று எண்ணுகிறான்.

28. பல்வேறு குணங்களைப் பற்றிய உண்மையையும், அவற்றில் பல்வேறு நடவடிக்கைகளையும் அறிந்தவன், குணங்களால் குணங்கள் இயங்குகின்றன. என்பதை உணருகிறான். தானே செயல்புரிபவன் என்று கூறிக் கொள்வதில்லை.

29. பிரகிருதியின் குணங்களால் மதிமயக்கம் கொண்டவர்கள். குணங்களில் நடவடிக்கைகளில் பற்றுள்ளவர் ஆகிறார்கள். பொருட்களின் உண்மையை அறிந்தவன், அத்தகைய அறிவு இல்லாத மந்த புத்தி உள்ளவர்களின் மனத்தைக் குழப்பக் கூடாது.

**30.** உள்ளே இருக்கும் ஆன்மாவிடம் மனத்தை நிலை நிறுத்தி உன்னுடைய எல்லாச் செயல்களையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு. பலனைப் பற்றிய சிந்தனையே இல்லாமலும், 'என்னுடையது' என்ற உணர்வின்றியும் மன வேதனையை உதறித் தள்ளிவிட்டு செயலாற்று.

31. இங்கே விதித்துள்ள கோட்பாட்டை அனுசரித்து யார் நம்பிக்கையுடனும், குற்றம் குறை கூறாமலும் நடந்து கொள்கிறார்களோ, அவர்களும் கூட அவர்களுடைய செயல்களின் பந்தத்திலிருந்து விடுதலை அடைகிறார்கள்.

32. ஆனால், அந்த விதியில் குற்றம் குறை கூறிக்கொண்டு அதற்கிணங்க நடக்க மறுப்போர் மூடர்கள் ஆவர். அறிவுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமே இல்லை. அத்தகையோர் நாசமடைவார்கள் என்பதை அறிந்து கொள்.

**33.** ஞானியும் கூட அவனது இயல்புக்கு இணங்கவே செயல்புரிகிறான். எல்லா உயிர்களும் அவற்றின் இயல்பான குணங்களையே பின்பற்றுகின்றன. அப்படியிருக்க, நிரபந்தப் படுத்துவதில் என்ன பயன்?

34. ஒவ்வொரு புலனுக்கும், அதற்கான சாதனங்களிடம் நிர்ணயமான விருப்பு வெறுப்புகள் உண்டு. மனிதன் அவற்றின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு விடக்கூடாது. ஏனெனில் அவை அவனுக்கு கேடு விளைவிப்பவையாகும்.

35. பிறருடைய கடமையைச் சிறந்த முறையில் செய்வதைக் காட்டிலும், தன்னுடைய சொந்தக் கடமையைக் குற்றம் குறைகளுடன் செய்வதே மேலானது. ஒருவன் தன் கடமையைச் செய்வதில் மரணம் ஏற்பட்டால் கூட அதுவே சிறந்தது. பிறருடைய கடமை அபாயத்தை விளைவிப்பதாகும்.

36. அப்படியாயின், தனக்கு விருப்பம் இல்லாவிட்டால்கூட, பலாத்காரமாகத் தூண்டப்பட்டவன் போல் மனிதன் பாவம் செய்யும்படி தூண்டுவது எது?

37. அதுதான் காமம். அதுதான் கோபம். அது இரஜோ குணத்திலிருந்து பிறந்தது. அது எல்லாவற்றையும் கபளீகரம் செய்யக் கூடியது. கொடிய பாவத்திற்குக் காரணமானது. எனவே, இந்த உலகில் அதுதான் மனிதனின் பரம விரோதி என்பதை அறிந்து கொள். (இச்சுலோகத்துக்கு ஒத்ததாக உள்ள குறள்)

**"நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
**பகையும் உளவோ பிற.** (குறள்—304)

முகமலர்ச்சியையும், மகிழ்ச்சியையும் கெடுத்து எழுகின்ற சினத்தைவிட ஒருவனுக்கு வேறு பகை உண்டோ.

38. புகையினால் நெருப்பும், அழுக்கினால் கண்ணாடியும் ஜவ்வினால் (பனிக்குடம்) கருவும் மறைக்கப்பட்டிருப்பதைப் போல் இந்த காமத்தினால் ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

39. விவேகம் உள்ள மனிதனின் ஞானம், காம உருவத்தில் உள்ள இந்த நிரந்தரமான விரோதியால் மறைக்கப்படுகிறது காமம் திருப்தி செய்ய முடியாத தீயாகும்.

40. புலன்கள், மனம், அறிவு ஆகியவையே காமத்திற்கு இருப்பிடம் என்று கூறப்படுகின்றன. அது ஞானத்தை மறைத்து மனிதனை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கிறது.

41. ஆகையால் முதலில் புலன்களைக் கட்டுப்படுத்த வேண்டும். பின்னர் ஞானத்தையும், பகுத்தறிவையும் அழிக்கும் காமம் என்னும் பாவியை ஒழித்துவிடு. (இந்த சுலோகத்துக்கு ஒத்ததாக உள்ள குறள்)

**"உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (குறள்—24)**

"அறிவு என்னும் அங்குசத்தால் ஐம்புலன்களாகிய ஐந்து யானைகளையும் அடக்கி ஆள்பவனே, மேலானதாகிய முத்தியை அடைவதற்கு ஏற்றவனாவான்."

42. புலன்கள் நுட்பமானவை என்று கூறுகிறார்கள். புலன்களைக் காட்டிலும் மனம் அதிக நுட்பமானது. ஆனால், அறிவைக் காட்டிலும் ஆன்மா அதிக நுட்பமானது.

43. அறிவைக் காட்டிலும் மிகவும் நுட்பமான பரம் பொருளை உணர்ந்து, ஆன்மாவினால் இந்திரியங்களை அடக்கி, எதிர்த்து வெற்றி பெறுவதற்கு இடையூறாக இருக்கும் காமம் என்ற இந்த விரோதியை நாசம் செய்து விடு!

'கர்மயோகம்' என்ற பகவத் கீதையின் மூன்றாவது அத்தியாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது.

கர்மத்தில் உறுதி இருக்க வேண்டும் என்ற கருத்தினை திருவள்ளுவர் 'வினைத்திட்பம்' அதிகாரத்திலுள்ள பின்வரும் குறள் மூலம் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

**"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்**
**மற்றைய எல்லாம் பிற. (குறள்—661)**

'செயலைச் செவ்வனே செய்து முடிப்பதற்கு, மன உறுதியே அஸ்திவாரம் ஆகிறது. மற்ற எதுவும் உறுதியாகாது.'

## ஞானயோகம்

சொல்—செயல்—சிந்தனை ஆகியவற்றை தூய்மைபடுத்திக் கொண்டு மும்மலங்களை நீக்கியவர் எவரோ அவரே ஞானியாவார். கர்மயோகம் சிறந்ததா? ஞானயோகம் சிறந்ததா? என்று சர்ச்சை எழுமேயானால், இவை இரண்டுமே சிறந்தது என்றுதான் உறுதிபடக் கூற வேண்டும்.

கர்மத்தில் உறுதி, தானம், தன்னடக்கம், தவம், நேர்மை, கொல்லாமை, சத்தியம், கோபத்தை அடக்குதல், புறங்கூறாமை, ஜீவகாருண்ய ஒழுக்கம், பேராசையின்மை, மன்னிக்கும் குணம், தளராத (மன) உறுதி ஆகிய நற்பண்புகள் பக்தியோகம், கர்மயோகம், ஞானயோகம் ஆகிய அனைத்துக்கும் தேவையான குணச் சிறப்புகளாகும். கர்மயோக சித்தி இல்லையென்றால் ஞானயோக சித்தி கிடைப்பது அரிது. அன்புடனும் பற்றற்ற

நிலையிலும் நித்திய கருமங்களைச் செய்து ஆன்ம விசாரணையில் ஈடுபடுபவரே ஞானயோக நிலையை இயல்பாக அடைய முடியும்.

கீதையின் ஐந்தாவது அத்தியாயமான 'சந்நியாச யோகம்' ஏழாவது சுலோகத்தில் கூறப்படுவதாவது. ''தன்னை தூய்மை யாக்கிக் கொண்டவனும், தன் மனத்தையும் புலன்களையும் வென்றவனும், எல்லா சிருஷ்டிகளுடைய ஆன்மாவும் தானும் ஒன்று என்ற நிலையை அடைந்தவனும், கர்மங்களைச் செய்து வந்தால்கூட அவற்றினால் பாதிக்கப்படுவதில்லை'' என்று கூறப் பட்டுள்ளது.

ஜாதி, மதம், மொழி, நாடு மற்ற ஏனைய காலவர்த்தமானங் களைக் கடந்து தானும் மற்றுமுள்ள எல்லா சிருஷ்டிகளுடைய ஆன்மாவும் ஒன்றே என்று தீர்க்கமாகக் கருதுபவர் எவரோ அவரே ஞானி ஆவார்.

அத்தகையோரே ஆன்ம ஞானம் பெற்று சித்துருவான பெரு வெளியைச் சிந்தை செய்யும் ஞானி ஆவார்.

**நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய்**
**நிராமயமாய் நிறைவாய் நீங்காச்**
**சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த்**
**துரிய நிறைச் சுடராய் எல்லாம்**
**வைத்துஇருந்த தாரகமாய் ஆனந்த**
**மயம்ஆகி மனம்வாக்கு எட்டாச்**
**சித்துஉருவாய் நின்ற ஒன்றைச் சுகாரம்பப்**
**பெருவெளியைச் சிந்தை செய்வாம்.**

என்று அருளாளர் தாயுமான சுவாமிகளும் கூறியுள்ளார்கள்.

தன்னலம் என்ற பாவகாரியத்திலிருந்து விடுபட்டு, மனம், புத்தி, புலன்களின் தூண்டுதல் காரணமாக அனுபவிக்கும் அற்ப மான இன்பத்தை யார் துறந்து விடுகிறார்களோ, அவர்கள் ஆன்ம விசாரணை (ஆன்ம போதம்) மூலம் எல்லையற்ற ஆனந்தமும், ஆறுதலும் அடைகிறார்கள். குணதோஷங்களுக்கு ஆன்மா பொறுப்பல்ல என்ற எண்ணம் மேலோங்கும் போது தான் பற்றற்ற நிலை சித்தியாகும். ஞானம் பெறுவதென்பது கடினமான சோதனைகளுக்குப் பிறகுதான் கைவரப்பெறும். தன்னைத்தானே தூய்மைப்படுத்திக் கொண்டு ஞான நிலைக்கு தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும். அதுவே உண்மையான ஞானமாகும்.

நாம் மேற்கொள்ளும் செயல்களே யக்ஞம் ஆகும். தன்னல ற்றதும், தூய்மையானதும் தியாகமும் தொண்டு உணர்ச்சி 'டன் கூடியதுமான கர்மாக்களும் நம்மை ஆண்டவனுக்கு ுருகில் கொண்டு போய் சேர்க்கும். இவ்வகையிலான முயற்சி ளே (கர்மாக்கள்) பரம்பொருளைப் பற்றி அறிவதற்கான நானத்தை அளிக்கிறது.

எவன் ஒருவன் தன்னை மற்றவரிடத்திலும் கடவுளிடமும் ுன்புடன் ஒப்புநோக்குகிறானோ, அந்நிலையே ''ஆன்ம நானம்;' என்று பூர்வ நூல்களில் கூறப்பட்டுள்ளது.

''ஞானம் என்பது ஒரு சிறந்த படகு என்றும், மகாபாவிகள் ூட பாவ சமுத்திரத்தைக் கடப்பதற்கு ஞானம் என்ற இந்த படகு உதவுகிறது'' என்று கீதை நமக்குப் போதிக்கிறது. பகவத் கீதையின் நான்காம் அத்தியாயத்தில் 'ஞான யோகம்' பற்றி எவ்வாறு விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது என்று கீழ்க்காணும் கீதை சுலோகங்கள் மூலம் நாம் அறிந்து பயன் அடையலாம்.

1. அழிவற்ற இந்த (ஞான) யோகத்தை நான் விவஸ் வானுக்கு (சூரியன்) உபதேசித்தேன். சூரியன் அதைத் தன் மகன் மனுவுக்கும், மனு அதைத் தன் மகன் இட்சுவாகுவிற்கும் உபதேசித்தார்கள்.

2. அவ்வாறு பரம்பரையாக வந்த அந்த யோகத்தைப் பின்னர் ராஜரிஷிகள் கற்றுக் கொண்டனர்; பின்னர் அது இந்த உலகில் நீண்ட காலத்திற்குப் பிறகு மறைந்து போயிற்று.

3. அந்த புராதனமான யோகத்தைத்தான் இன்று நான் உனக்கு உபதேசிக்கிறேன். ஏனெனில், நீ; எனது பக்தனாகவும், எனது நண்பனாகவும் இருக்கிறாய். இந்த யோகம் மிகவும் உத்தமமான ரகசியம்.

4. பகவானே! நீங்கள் விவஸ்வானுக்குப் (சூரியன்) பிறகு தான் பிறந்தீர்கள். முதலில் நீங்கள் சூரியனுக்கு உபதேசித்த தாகக் கூறுகிறீர்கள். இதை நான் எப்படி புரிந்து கொள்வது? (நம்புவது)

5. நீயும் நானும் பல பிறப்புகளைக் கடந்து வந்திருக் கிறோம். அவற்றையெல்லாம் நான் அறிவேன். நீ அறிய மாட்டாய்.

6. நான் பிறப்பற்றவனாகவும், எல்லையற்றவனாகவும் இருந்தும் கூட, என்னுடைய இயல்பைக் கட்டுப்படுத்திக் கொண்டு, நான் என்னுடைய மாயா சக்தியினால் பிறவி எடுக்கிறேன்;

7. ஏனெனில் தருமம் குன்றி அதர்மம் மேலோங்கும் போதெல்லாம், நான் பிறவி எடுக்கிறேன்.

8. தரும மார்க்கத்தில் நடப்பவர்களைக் காப்பதற்காகவும், கொடியவர்களை அழித்து மீண்டும் தருமத்தை ஸ்தாபிப்பதற் காகவும் நான் ஒவ்வொரு யுகத்திலும் பிறக்கிறேன்.

9. என்னுடைய தெய்வீகமான பிறப்பு, செயல் ஆகிய வற்றை யார் அறிகிறானோ, அவன் இந்த உடலை விட்டபின் மீண்டும் பிறப்பதில்லை. அவன் என்னை வந்தடைகிறான். (இச்சுலோகத்துக்கு ஒத்துள்ள குறள்)

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்.** (குறள்-10)

''இறைவனின் பாதங்களில் சரணடைவோர் பிறவிப் பெருங்கடலைக் கடந்து பேரின்பம் பெறுவர். அவன் பாதங்களை நினையாதவர்கள் பிறவிக்கடலைக் கடக்க மாட்டார்!

10. காமம், பயம், கோபம், ஆகியவற்றில் இருந்து விடுதலையடைந்தவர்களும், என்னிடத்தில் லயித்தவர்களும், என்னையே கதியாகக் கொண்டிருப்பவர்களும், ஞானமாகிய அக்னிப் பரீட்சையால் பரிசுத்தமானவர்களுமான பலர், என்னுடன் ஒன்றாகி ஐக்கியம் அடைந்திருக்கிறார்கள்.

11. மனிதர்கள் எந்த வழியில் நாடினாலும் அதே வழியில் அவர்களுக்கு நான் அருள்புரிகிறேன். ஒவ்வொரு விதத்திலும் மனிதர்கள் பின்பற்றும் வழி என்னுடையதேயாகும்.

12. தங்களுடைய கர்மங்களுக்குப் பலன் கிடைக்க வேண்டு மென்று விரும்புவோர், இங்கே தேவதைகளைப் பூஜிக்கின்றனர். ஏனெனில் மனிதர்கள் அடங்கிய இந்த உலகில் கர்மத்தின் பலன் விரைவில் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது.

13. ஒவ்வொரு வருணத்தின் வெவ்வேறு குணங்களுக்கும், கர்மாக்களுக்கும் இணங்க நான்கு வருணங்களை நான் சிருஷ்டித் தேன், நான் அவற்றின் கர்த்தா என்றாலும் மாறுதலற்றவன். ஆதலால் நான் கர்த்தா அல்ல என்பதை அறிந்து கொள்.

(சர்ச்சைக்குரிய இந்த சுலோகத்துக்குப் பலரது விளக்கங் களை எடுத்துரைப்பது தெளிவுரையாக அமையும் என்ற கருத்தில் விரிவாக விளக்கம் எழுதப்பட்டுள்ளது.)

மனித வர்க்கத்தை நான்கு வருணங்களாக பிரிப்பதற்குக் காரணம் என்ன என்பதை ஸ்ரீ சங்கரர் பின்வருமாறு விளக்கம்

அளித்துள்ளார்கள். ''சத்துவகுணம் மேலோங்கி நிற்பவன் பிராமணன். சத்துவகுணத்தை விட இரஜோகுணம் மேலோங்கி நிற்பவன் க்ஷத்திரியன், தமோகுணத்தை விட இரஜோ குணம் மேலோங்கி நிற்பவன் வைசியன். இரஜோ குணத்தைவிட தமோ குணம் மேலோங்கி நிற்பவன் சூத்திரன். இவ்வகையாகப் பார்க்கும் போது ஒரு கேள்வி எழுகிறது. நான்கு வருணங்களையும் படைத்தவர் பகவான் எனில், எல்லாச் செயல்களுக்கும் அவர் கர்த்தா அல்ல என்று ஏன் கூறப்படுகிறது? இதற்குப் பதில் என்னவெனில் மாயை (பிரகிருதி) என்ற முறையில் எல்லாச் செயல்களுக்கும் அவர்தான் கர்த்தா. ஆனால் பிரம்மம் என்ற முறையில் செயல்களுக்கு அவர் கர்த்தா அல்ல. செயல்களால் அவர் (பிரம்மம்) சிறிதும் களங்கப்படாதவர்'' என்று ஸ்ரீ சங்கரர் விளக்கியுள்ளார்.

காந்திஜி அவர்கள் பின்வருமாறு எழுதியுள்ளார்.

''குணத்திற்கும் கர்மத்திற்கும் இணங்க, வருணம் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதாக கீதை கூறுகிறது. ஆனால் குணமும் கர்மமும் பிறப்பினால் பரம்பரையாக வருகின்றன. வருணம் என்ற விதி, பிறப்பை அடிப்படையாகக் கொண்டதல்ல எனில் அதற்கு அர்த்தமே இல்லை. எனினும் இங்கே உயர்வு என்ற அர்த்தத்திற்கு இடமில்லை. உடலுக்கு தலை இறுதி ஸ்தானமாக இருப்பது போலவே, மற்ற வருணங்களுக்குப் பிராமணீயம் இறுதி ஸ்தானமாக இருக்கிறது. உயர்ந்த அந்தஸ்து அல்ல. உயர்ந்த தொண்டு செய்யும் சக்தி என்பதே ஆகும். பிராமணீயம் என்பது உயர்ந்த அந்தஸ்து என்ற இறுமாப்பு ஏற்பட்ட அந்த வினாடியிலேயே அது காலால் மிதித்துத் தள்ளுவதற்கு உரியதாகி விடுகிறது.'' ''யங்இந்தியா''வில் (24-11-1927) காந்திஜி இவ்வாறு எழுதியுள்ளார்.

''நான்கு வருணங்களும் சுயதர்மமும்'' என்ற தலைப்பில் ஸ்ரீமகாதேவ தேசாய் எழுதியுள்ளதாவது.

''இப்போதுள்ள ஜாதி முறைகளுக்கும் குணங்களுக்கும் கர்மத்துக்கும் ஏற்ப நான்கு வருணங்களைப்படைத்தேன்' என்று கீதையில் கூறப்பட்டுள்ள சித்தாந்தத்திற்கு உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை அறிவது அவசியமாகும். பல்லாயிரம் ஆண்டு களுக்கு முன்பு இருந்த அந்த வருணமுறை சிதைந்து இன்று அதன் நிழல் உருவம்தான் இருக்கிறது.

அன்று கூறப்பட்ட வருண முறைகளும், இன்று நமது சமுதாய அமைப்பிலுள்ள சாதி முறைகளும் கேலிக் கூத்தானதே யாகும்.

நாம் எந்த வகுப்பைச் (வருணம்) சார்ந்தவராயினும், எந்த சாதியைச் சேர்ந்தவராயினும் நம் ஒவ்வொருவரின் உள்ளத்தே யுள்ள தெய்வத்தன்மைக்கும் அசுரத்தன்மைக்கும் இடையே நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. எனவே ஒரு மனிதன் மற்றொரு சகோதர மனிதனிடம் குற்றம் குறை காண்பதோ, அல்லது குணங்களை நிர்ணயிக்க முயல்வதோ முடியாத காரியம். ஒருவன் தன்னையே சரியாக நிர்ணயிக்க முடியாத நிலையில் இருக்கும் போது, மற்றொருவனைப் பற்றி அவன் நிர்ணயிக்க முற்படுவது எவ்விதம் சாத்தியமாகும்?

அக்காலத்திலிருந்த சமூகத்தின் தேவைகளை மனத்திற் கொண்டே வருணங்கள் பிரிக்கப்பட்டன.

1. அறிவு, ஆன்மீகம் சம்பந்தமானவை.

2. தற்பாதுகாப்பு.

3. புத்திசாலித்தனமான பொருளாதார பரிவர்த்தனை.

4. தொழிலாளர்களின் உழைப்பினால் செல்வத்தை உற்பத்தி செய்தல்.

சொத்து எதுவும் வைத்துக் கொள்ளாத அம்சத்துடன் ஆன்மீக சக்தியும் தன்னலமற்ற மனமும் பிராமணனது செல்வமாக இருந்தன.

சமூகத்தின் பாதுகாப்புக்கு சேவை புரிபவனாக க்ஷத்திரியனும், சமூகத்தின் நலனுக்காக பொருளாதார வளர்ச்சியில் நாட்டம் கொண்டு வாணிபம் செய்பவனாக வைசியனும், சமூகத்தின் நன்மைக்காக உடல் உழைப்பை அளித்துச் சூத்திரன் செயல்படுவது உரிமையாக இருந்தது.

தூய்மையோ அல்லது தருமமோ யாருக்கும் ஏகபோக உரிமை இல்லை. ஒருவன் ஒழுங்குடனும் தன்னலமின்றியும் தனது கடமையைச் செய்வதின் மூலம் முத்தி (மோட்சம்) அடையலாம்.

கர்மங்கள் அல்லது செயல்களே பல்வேறு சமூகங்களின் இயல்பான குணங்கள் என்று கீதையில் பொதுவாகக் கூறப் பட்டிருக்கிறது.

''வாழ்க்கையில் தருமம் என்பது எல்லோர்க்கும் ஒன்றுதான். அதாவது பிறருடைய மனத்தைப் புண்படுத்தாமல் இருத்தல், சத்தியம், திருடாமை, கோபத்திலிருந்தும் பேராசையிலிருந்தும் விடுதலை, மனித வர்க்கத்திற்கு நன்மை செய்ய வேண்டுமென்ற ஆகிய குணங்கள் தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்கள் ஆகிய

எல்லோர்க்கும் பொதுவான தருமவிதிகள்'' என்று பாகவதப் புராணம் கூறுகிறது.

ஒரு கசாப்புக் கடைக்காரரோ அல்லது ஒருதோட்டியோஅதிக அறிவினால் தங்களுடைய மூளையை நிரப்பிக் கொண்டிராமல், செய்யும் தொழிலே மகேசன் தொண்டு என்ற மனநிறைவோடு கர்மங்களைச் செய்து வருவதால் தெய்வத் திருவருள் அவர் களுக்கு இலகுவில் கிடைத்து விடுகிறது.

ஒரு பிராமணன் மிகுந்த பாண்டித்தியம் காரணமாகத் தன்னுடைய பைசாசத் (பிசாசு) தன்மையை மறைப்பதற்காகப் பயபக்தியுடையவனைப் போலத் தோற்றமளிக்கலாம். பயபக்தி யுடன் தனது கடமையைச் செய்பவன் போல் பாசாங்கு செய்யலாம்.

தெய்வத் திருவருள் பெற்ற அருளாளர்களுள் பலர் பிராமணர்களைக் காட்டிலும் பிராமணர் அல்லாதார்தான் அதிகமாக இருந்திருக்கிறார்கள். கண்ணப்பர் (வேடுவர்) நந்தனார் (ஹரிஜன்) சேனா (நாவிதர்) சஜனா (கசாப்புக் கடைக்காரர்) கோராவும், திருநீலகண்டரும் (குயவர்) ரெய்தாஸ் (சக்கிலியர்) சொக்கமேளா (ஹரிஜன்) துக்காராம் (வேளாளர்) இவ்வாறாக மற்றும் பலபேர் உண்டு.

இவர்களில் ஒருவராவது தங்களது குலத்தொழிலைப் புறக் கணிக்கவில்லை. அதற்கு மாறாக பற்றுதலின்றியும், பயபக்தி யுடனும் தங்களுடைய தொழிலைச் செய்ததன் மூலமே மோட்சத்துக்கு வழி தேடிக் கொண்டார்கள்.

இன்றுள்ள சமுதாய அமைப்பு சின்னா பின்னமாகி விட்டது. வருணங்களிடையேயும், தொழில் முறைகளிலேயும் கலப்பு ஏற்பட்டு விட்டது. நான்கு வருணங்கள் என்றிருந்த நிலை மாறி விட்டது. ஆயிரக்கணக்கான சாதிகளும், வருணங்களும், வகுப்பு களும் ஏற்பட்டு விட்டது.

சாதிபாகுபாடு இன்றி ஒவ்வொருவரும் தருமத்தைக் கடைப் பிடித்து சமுதாய ஒழுக்கத்தையும், கடமைகளையும் செய்து முடிக்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறோம். ''நிர்ணயிக்கப் பட்ட கடமை'' என்பது அனைத்துப் பிரிவினர்களுக்கும் பொது வானதேயாகும்.

நிர்ணயிக்கப்பட்ட கடமைகளை பற்றுதலின்றியும் தன்னலமின்றியும் செய்து முடிப்பது தான் சிறந்த தருமம் ஆகும்.

''நீ உன் முழுபலத்தையும் உபயோகித்து உழைக்க வேண்டுட் ஆனால் பலனைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் உன்னுடை உழைப்பை, பணிவுடன் நீ பூஜை செய்யும் ஒருமலராக எண்ணி கடவுளின் பாதங்களில் அர்ப்பணம் செய்துவிடு. சிறந்த காரிய தன்னல நோக்கத்துடன் செய்யப்படுமேயானால் அதுவெறு சூன்யமான செயலாகி விடும்'' என்பது கீதையின் கருத்தாகும்.

''அப்படியாயின் சுயதருமமும், பரதருமமும் என்று ஏ வற்புறுத்திக் கூற வேண்டும்? இதற்கு கீதை பிறரது கடமை களைச் செய்வது ஆபத்தாகும் என்பதைத் தவிர வேறு எத்தகைய பதிலையும் அளிக்கவில்லையே'' என்றுகேள்வி கேட் தர்க்கவாதம் செய்யலாம்.

அதற்கான பதில் யாதெனில் சுயதருமம் என்றும் பர தருமம் என்றும் வற்புறுத்துவதற்குக் காரணம் என்னவெனில் ஒருவர் தனக்கு இடப்படாத கடமையை நாடிச் செல்வாராயின் அவர் ஒரு படுகுழியில் வீழ்கிறார் என்பதே மகான்களின் அனுபவம் ஆகும். யார் பயபக்தியுடன் காத்திருக் கிறார்களோ அவர்களைக் கடமைகள் நாடி வருகின்றனவே அன்றி கடமைகளை விரட்டிச் செல்வோரிடம் அவை வருவதில்லை.

காந்திஜி எழுதியுள்ள 'அனாசக்தி யோகம்' என்ற நூலுக்கு ஸ்ரீமகா தேவ தேசாய் அவர்கள் எழுதியுள்ள'எனது சமர்ப்பணம் என்ற பகுதியில் மேலே கூறப்பட்ட 'நான்கு வருணங்களும் சுய தர்மமும்' என்று தலைப்பிட்டு எழுதப்பட்டுள்ளது.

**ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்** (குறள்-133)

பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும் ஒழுக்க முடையராக (இருப்பின்) உயர் குலத்தராவராகலின் குடிமை யாமென்றும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத் தில் தவரத் தாழ்ந்த வருணத்தராவராகலின் இழிந்த பிறப்பாய் விடு'மென்றும் கூறினார்.

—பரிமேலழகருரை

**மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்** (குறள்-134)

கற்ற வேதத்தினை மறந்தானாயினும், அவ்வருணங் கெடாது பின்னும் அஃதோதிக் கொள்ளலாம். (கற்றுக்

கொள்ளலாம்) அந்தணனது (பார்ப்பான்) உயர்ந்த வருணம் தன்னொழுக்கம் குன்றக் கெடும். (சிறப்புடை வருணத்திற்கு இக்கருத்து மொழிந்தமையின், இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்.)

—பரிமேலழகருரை

நீரில் தோன்றும் நிறம், சுவை யாவும் நீர் சார்ந்திருக்கும் மண் வளத்தைப் பொறுத்தவைகளாகும். நிறமும் சுவையும் நீருக்குச் சொந்தமல்ல. ஆன்மாவுக்கு ஜாதி, நிறம், இருப்பிடம் (ஆசிரமம்) எதுவும் கிடையாது. இப்பாகுபாடுகள் ஆன்மாவை ஏந்தியுள்ள உடல்களுக்கே உரியவைகளாகின்றன.

ஸ்ரீ சங்கரர்-ஆத்ம போதம்-11-சுலோ

''சாதிவிடாத குணங்கள் நம்மோடு
சலித்திடும் ஆகாதே.''

—திருவாசகம்; திருப்படை ஆட்சி

ஜாதியை விட்டுப் பிரிக்கமுடியாத முக்குணங்களும் அவைகளினின்று உருவெடுத்து வருகிற ஜாதி பேதங்களும் பற்றற்ற நிலையில் (அதீதத்தில்) இடம் பெறுவதில்லை! இது மணிவாசகப் பெருமானின் கருத்து.

ஜாதி உபாதியை ஒழிக்க ஸ்ரீ இராமகிருஷ்ணர் இரவு நேரங்களில் தட்சணேஸ்வர ஆலயத்துக்கு அருகிலிருந்த சேரிக்கு செல்லுவார். தம் தலை முடியால் அவ்விடத்தைத் துடைத்து சுத்தம் செய்வார். ''தாயே! மக்களால் ஒதுக்கப் பட்டவர்களும் உன் குழந்தைகளே. நான் அவர்களை விட உயர்ந்தவன் என்னும் உபாதி (வேதனை) என் உள்ளத்தை விட்டு அறவே அகல வேண்டும்'' என்றும் பிரார்த்தித்து ஜாதி உபாதியை ஒழித்தார்.

பகவான். ஸ்ரீஇராம கிருஷ்ணர்

''கீழ்மக்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்ட வட நாட்டவர்களை கைதூக்கிவைத்தது இஸ்லாமிய படையெடுப்பு. தென்னாட்டில் கீழ்மக்களாக ஒதுக்கி வைக்கப்பட்டவர்களை கைதூக்கி வைத்தது கிறிஸ்தவ படையெடுப்பு.

பிறவியில் கீழோரெனக் கருதப்படுபவர்கள் எல்லாரும் உண்மையில் கீழோரல்லர். பிறவியில் மேலோரெனக் கருதப் படுபவர் எல்லாரும் உண்மையில் மேலோரல்லர். இனி, பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா செய்தொழில்

வேற்றுமையான் என்னும் கோட்பாடு முற்றிலும் உண்மையாகாது. கோயில் பூஜாரி வேலை எவ்வளவு புனிதமானதோ அவ்வளவு புனிதமானது மலம் எடுக்கும் தோட்டி வேலையும். சமுதாய நலம் கோலுபவர் இக்கோட்பாடுகளை அறிந்திருப்பது அவசியம்.

பிராமணீயம் என்பது ஒரு பண்பு. அது ஓர் இனம் அன்று. படிப்பு, பண்பு, பணிவு, ஆகிய இந்த மூன்றும் சேர்ந்து அமையப் பெற்றவன் பிராமணன். பணிவுக்குப் பதிலாகச் செருக்கு அவனுள் புகுந்து விடுமாகில் அழிந்து பட்டுப் போவான். இது வாழ்க்கைத் தத்துவம்.''

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் மக்கள் நிலைகள் பற்றியும், அவர்களது பெயரியல்புகள் பற்றியும் கூறப்பட்டுள்ள சூத்திரங்களில் விவரிக்கப் பட்டுள்ளவைகள் யாதென்று பார்ப்போம்.

**பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே. 22**

ஒவ்வொரு திணையிடத்தும் (இடம், ஒழுக்கம், குடி, குலம்) பொருந்தி வருகின்ற திணைநிலைப் பெயர், குலப்பெயரும். தொழிற் பெயரும் என இரு வகைப்படும்.

**மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே. 31**

தெய்வ வழிபாட்டை நிலை பெறுத்துதற் பொருட்டுப் பிரியும் பிரிவு, அந்தணர்,அரசர்(சத்திரியன்) வணிகர், வேளாளர் என வாழும் நால்வர்க்கும் உரிமையுடையது ஆகும்.

**மன்னர் பாஙகின் பின்னோர் ஆகுப. 32**

மன்னன் (சத்திரியன்) செய்தற்குரிய காவல் தொழிலை (அறங்காவல், நாடுகாவல்) அவனுக்கு உறுதுணையாக நின்று அவனது ஏவல் வழி வரும் வணிகரும் வேளாளரும் செய்வதற்கு உரிமை உடையவராவர்.

**வேந்துவினை இயற்கை வேந்தன் ஒரீஇய**
**ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைத்தே. 34**

வேந்தனுக்குரிய தூது போதல் தொழில், வேந்தனை ஒழிந்த வணிகர், வேளாளர் ஆகிய இருவர்க்கும், மன்னனால் அதற்கு அவரும் உரியராக்கப்படின் உரித்தாம்; உரியராக்கப்படல்— அவர் அமைச்சர்? ஆக்கப்படல்.

**உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான்,** 36

அந்தணர்கள் பொருள் காரணமாகப் பிரியுமிடத்துத், தமது ஒழுக்கத்தில் வழுவாது அதனையே பற்றுக் கோடாகக் கொண்டு பிரிவர். ஆசாரமும், கல்வியுமே அவர் தேடும் பொருட்டுக் காரணமாம் என்பது கருத்து.

வருணமும் சுயதருமமும் என்ற பொருளில் திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் 'எல்லாமுடையானுக்கு விண்ணப்பம்' என்ற தலைப்பில் எழுதியுள்ளதாவது— ''எல்லாமுடைய அருட்பெருஞ்ஜோதி அற்புதக் கடவுளே! இதுதொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடையாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பனவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம், ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்தில் பற்றாத வண்ணம் அருள் செய்தல் வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித் தருளல் வேண்டும். எல்லாமாகிய தனிப் பெருந்தலைமை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தேவரீர் திருவருட் பெருங்கருணைக்கு வந்தனம், வந்தனம்.'' என்று விண்ணப்பித்துள்ளார்கள்.

கீதையின் 'ஞான

பின்வருமாறு.

14. செயல்கள் என்னைப ப

களிலும் எனக்குப் பற்றில்லை

அறிகின்றாரோ? அவர் செயல்

15. பண்டைய காலத்தில் இருந்தவர்கள மோட்சத்தில் ஆசை கொண்டு தருமத்தைச் செய்தனர். எனவே பண்டைய காலத்தில் முன்னோர்கள் செய்ததைப் போலவே நீயும் செய்!

16. ''எது கர்மம் எது அகர்மம் என்பதை அறிவாளிகள் கூட நிர்ணயிக்க முடியாமல் குழப்பம் அடைகிறார்கள். எனவே, அகர்மம் என்றால் என்ன என்பதை உனக்கு நான் விளக்கிக் கூறுகிறேன். அதை அறிந்து கொண்டால், நீ தீய வினையினின்றும் பாதுகாக்கப்படுவாய்.

17. ''கர்மம், விகர்மம், அகர்மம் ஆகியவற்றின் அர்த்தத்தை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். கர்மத்தின் ரகசியம் ஊடுருவிப் பார்க்க முடியாதது.

(**கர்மம்** என்றால் செயல். அச்செயல் பற்றுதலின்றி செய்ய கூடியது. ஆனால், அவ்விதம் செய்யாததால் அது மனிதனை கட்டுப்படுத்துகிறது. சுயநலத்திற்கு காரணமான செயலின்மை அல்லது சோம்பேறித் தனமும் இதில் அடங்கும். இவ்வகையான செயல்கள் மனிதனைக் கட்டுப்படுத்தி பந்த பாசத்துக் உள்ளாக்குகிறது. **விகர்மம்** என்பது செய்யக் கூடாத அறிவுக்கு பொருந்தாத (கருமம்) செயல்கள், பற்றுதலின்றி இதை செய்வது இயல்பாகவே முடியாத காரியம். கொலை, பொ சொல்லுதல், விபசாரம் போன்ற செய்யக் கூடாத செயல்கே விகர்மம். **அகர்மம்** என்பது மனம் அல்லது உடல் சம்பந்தப்பட்ட செயல். இது பற்றுதலின்றி செய்யப்படுகிறது. எனவே இ கட்டுப்படுத்துவதில்லை. இந்த பதினேழாவது சுலோகத்துக் ஸ்ரீசங்கரர் கூறும் விளக்கம் பின்வருமாறு:'சாஸ்திரங்களா விதிக்கப்பட்ட கடமைகளையும், செய்யக் கூடாது என் விலக்கப்பட்ட கடமைகளையும் அறிந்து கொள்ள வேண்டும் இவற்றிற்கும், சோம்பேறித்தனத்தினால் எத்தகைய செயலிலு ஈடுபடாமல் இருப்பதற்கும் வேற்றுமை உண்டு. கர்மம்,விகர்மம் அகர்மம் ஆகிய இம்மூன்று கர்மாக்களை நன்கு அறிந்து கொள்வதே ஆன்மிக ஞானமாகும்.'' ஸ்ரீசங்கரர்.)

18. ''செயலில் செயலின்மையையும், செயலின்மையி செயலையும் யார் காண்கிறானோ, அவனே மனிதருள் ஞானி அவனே யோகி. அவசியமாகச் செய்ய வேண்டியவற்றை யெல்லாம் அவன் செய்து முடித்தவன் ஆகிறான்.

19. ''யாருடைய ஒவ்வொரு கருமமும் ஆசையிலிருந்துப் சுயநல நோக்கத்திலிருந்தும் விடுபட்டிருக்கிறதோ, யார், த கர்மாக்கள் யாவையும் ஞானமாகிய தீயில் எரித்து விட்டானோ அத்தகைய ஒருவனைத் தான் பண்டிதன் என்று விவேகிகள் கூ கின்றனர்.

20. ''கர்ம பலனில் ஆசையைத் துறந்தவனும், எப்போது மனத்திருப்தியுடன் இருப்பவனும், எதையும் சார்ந்திராம சுதந்திரமாக இருப்பவன் எவனோ அவன் கர்மத்திலே ஆழ்ந்திருந்தால் கூட, அவன் செயல் புரியாதவனே.

21. ''எதையும் எதிர்பாராமல் மனத்தையும், உடலையு கட்டுப்படுத்திக் கொண்டு, எல்லா உடைமைகளையும் உதறி தள்ளிவிட்டு, உடலினால் மாத்திரமே கர்மத்தைச் செய்பவ பாவத்திற்கு ஆளாவதில்லை.

22. ''தற்செயலாகத் தனக்கு கிடைத்ததைக் கொண் திருப்தி அடைபவனும், சுகம் - துக்கம், விருப்பு - வெறுப்

போன்ற இருமைகளைக் கடந்தவனும், துவேஷமற்றவனும், வெற்றியிலும் தோல்வியிலும் ஒரே விதமாக இருப்பவனும், செயல் புரிந்தாலும் அவன் பந்தத்திற்கு ஆளாவதில்லை.

23. ''எவன் எல்லாப் பற்றுகளையும் விட்டு விட்டு சுதந்திர ஆன்மாவாகத் திகழ்கிறானோ, எவனுடைய மனம் ஞானத்தை உறுதியான அடிப்படையாகக் கொண்டிருக்கிறதோ எவன் வேள்விக்காக மட்டும் செயல் புரிகிறானோ, அவனது கர்மங்கள் யாவும் அழிக்கப்பட்டு விடுகின்றன.

24. ''யக்ஞமாகிய காணிக்கை பிரம்மமே. ஹோமத்தில் உபயோகிக்கும் சாதனம் பிரம்மமே. ஹோம அக்னியும் பிரம்மமே. ஹோமம் செய்பவனும் பிரம்மமே, இவ்வித பிரம்மத் திற்காக அர்ப்பணம் செய்யப்படும் கர்மங்களில் யாருடைய மனம் உறுதியாக நிலைத்திருக்கிறதோ, அவன் நிச்சயமாக பிரம்மத்தையே அடைகிறான்.

25. ''தெய்வங்களை வழிபடுவதன் மூலம் யோகிகள் யக்ஞம் செய்கிறார்கள். மற்றவர்கள் பிரம்மமாகிய அக்னியில் யக்ஞத் தினாலேயே யக்ஞம் செய்கிறார்கள்.

(யக்ஞம் என்ற சொல்லுக்கு ஸ்ரீசங்கரர் 'எல்லைக்கு உட்பட்ட ஆன்மா எல்லையற்ற ஆன்மாவுடன் தனக்குள்ள ஐக்கியத்தன்மையை உணருவதே யக்ஞம்.' என்று கூறியுள்ள தோடு, இந்த யக்ஞம் என்ற சொல்லுக்கு மேலும் விரிவாக ஸ்ரீசங்கரர் சொல்லியிருப்பதாவது 'யாத்திரை ஸ்தலங்களில் கொடுக்கப்படும் தானங்கள் திரவியயஞ்கம், துறவிகள் செய்யும் தவம் 'தவயக்ஞம்' பிராணாயாமம் முதலிய சாதனை கள் 'யோகயக்ஞம்' வேதங்களைப் படித்தல் 'ஸ்வாத்யாய யக்ஞம், சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து அவற்றை அனுசரித்து நடப்பது 'ஞானயக்ஞம்' என்று ஸ்ரீ சங்கரர் விளக்கம் கூறியுள்ளார்கள்.)

26. 'கட்டுப்படுத்துதல் என்ற அக்னிகளில் சிலர் செவிப் புலனையும். மற்றப் புலன்களையும் ஹோமம் செய்கிறார்கள். மற்றவர்கள் புலன்களாகிற அக்னியில் சப்தம் முதலிய இந்திரியங் களை ஹோமம் செய்கிறார்கள். (புலன்களைக் கட்டுப்படுத்துதல் போன்ற பல்வேறு சாதனைகளை 'அக்னிகள்' என்று பன்மை யாகக் கூறப்பட்டுள்ளது.)

27. மேலும் மற்றவர்கள், புலன்களின் எல்லா நடவடிக்கை களையும், ஜீவசக்தியின் எல்லா நடவடிக்கைகளையும், ஞானத்

தினால் மூடப்பட்ட தன்னடக்கம் என்கிற யோக அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள்.

28. சிலர் ஸ்தூலமான காணிக்கைகளாலும், சிலர் தவங்களாலும். சிலர் யோகத்தினாலும். சிலர் ஞானத்தைப் பெறுவதாலும், சிலர் ஞானத்தை உபதேசிப்பதாலும் யக்ஞம் செய்கின்றனர். இவைகள் எல்லாம் கடுமையான விரதங்களும் தீவிர சாதனை ஈடுபாடுகள் அடங்கியதுமான யக்ஞங்கள் ஆகும்.

29. மூலாதாரமான மூச்சுக்காற்றைக் கட்டுப்படுத்தும் பயிற்சிகளில ஈடுபட்டுள்ள மற்றவர்கள் உள்ளே இழுக்கும் காற்றில் (பிராணவாயு) வெளியே விடும் காற்றையும் (அபானன்), வெளியே விடும் காற்றில் உள்ளே இழுக்கும் காற்றையும் ஹோமம் செய்கின்றனர். அல்லது பிராணன், அபானன் ஆகிய இரண்டு வாயுக்களையும் அடக்கிக் கொள் கின்றனர்.

(பிராணாயாமப் பயிற்சிக்குரிய பூரகம். ரேசகம், கும்பகம், ஆகிய பயிற்சி முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளது.)

30. மற்றும் சிலர் குறைந்த உணவை உட்கொண்டு பிராண வாயுவை மற்றொரு வாயுவில் ஹோமம் செய்கின்றனர். யக்ஞம் என்றால் என்ன என்பதை இவர்கள் எல்லோரும் அறிந்து யக்ஞத்தின் மூலம் எல்லா அசுத்தங்களையும் (பாவங்களையும்) நீக்கியவர்களாகின்றார்கள்.

31. யக்ஞத்தில் மிஞ்சியது அமிர்தம் எனப்படுகிறது. அதையார் அறிகிறார்களோ அவர்கள் என்றும் அழியாத பிரம்மத்தை அடைகின்றனர். யக்ஞம் செய்யாதவர்களுக்கு இவ்வுலகிலும் பரவுலகிலும் இடம் இல்லை.

32. அதுபோலவே வேதங்களில் பல்வேறு விதமான யக்ஞங் கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது, அவைகள் யாவும் கருமத்திலி ருந்து உண்டானவை. இதை நீ அறிந்து கொண்டு மோட்சம் அடைவாயாக.

33. பொருளைக் கொண்டு யக்ஞம் செய்வதைக் காட்டி லும் ஞானயக்ஞம் சிறந்தது, கட்டுப்படுத்தாத எல்லாக் கர்மங்களும் ஞானத்திலேயே வந்து முடிகின்றன.

34. மெய்ப்பொருளைக் கண்ட ஞானசிரேஷ்டர்கள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள். பணிவான பக்தியினா லும், தொண்டினாலும் திரும்பத்திரும்ப கேள்விகள் கேட்டு சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதாலும் நீ அதைக் கற்றுக்கொள்!

35. இந்த ஞானத்தை நீ அடையும் போது, மீண்டும் அத்தகைய தவறை நீ செய்யமாட்டாய். அந்த ஞானத்தை அடைவதன் பயனாக, நீ யாதொரு விதிவிலக்குமின்றி எல்லா உயிர்களையும் உன்னிடத்தில் காண்பாய். அவ்விதமே என்னிடத்திலும் காண்பாய்.

36. பாவிகளுக்கெல்லாம் மிகக் கொடுமையான பாவியாக நீ இருந்தாலும் கூட, ஞானமாகிற படகினால் நீ பாவமாகிற சமுத்திரத்தைக் கடந்து விடுவாய்.

37. ஜ்வாலை விட்டு எரிகின்ற தீ எவ்விதம் விறகைச் சாம்பலாகச் செய்து விடுகிறதோ, அவ்விதமே ஞானமாகிற தீ எல்லாக் கர்மங்களையும் சாம்பலாகச் செய்து விடுகிறது.

38. ஞானத்தைப் போல் பரிசுத்தம் செய்யும் பொருள் இந்த உலகில் வேறு எதுவும் இல்லை. குற்றம் குறையின்றி பூரணமாக யோகத்தைப் பயிற்சி செய்து பக்குவம் அடைந்தவர்கள் நாளடைவில் ஞானத்தைத் தன்னிடத்தில் தானே காண்கிறார்கள்.

39. நம்பிக்கையும சிரத்தையும் உள்ளவன்தான் அத்தகைய ஞானத்தை அடைகிறான். ஞானத்தை அடைய வேண்டும் என்பதில் தன் கவனத்தை லயிக்கச்செய்தவனும், தன் புலன்களை அடக்கி ஆளும் சக்தியைப் பெற்றவனும், ஞானத்தை அடைந்ததும் மகோன்னதமான சாந்தியை அடைகிறான்.

40. ஞானமும், நம்பிக்கையும் இல்லாத சந்தேகப் பேர்வழி நாசம் அடைகிறான். சந்தேக புத்தியுள்ளவனுக்கு இந்த உலகமும் இல்லை, மேல் உலகமும் இல்லை, சுகமும் இல்லை.

41. யோகத்தினால் கர்மங்களை யெல்லாம் துறந்தவனும், ஞானத்தினால் சகல சந்தேகங்களை நீக்கிக் கொண்டவனும் ஆன்ம ஞானத்தில் ஒன்றி விடுகிறான். அவனை கர்மங்கள் கட்டுப்படுத்தாது.

42. ஞானமாகிற வாளால் சந்தேகங்களை வெட்டி வீழ்த்தி விடு. அறியாமை காரணமாகத்தான் சந்தேகம் உள்ளத்தில் புகுந்து விடுகிறது. யோகத்தை மேற்கொண்டு எழுந்திரு.

பகவத்கீதையின் நான்காவது அத்தியாயமான 'ஞானகர்ம சந்நியாசயோகம்' இவ்வாறாக முடிவுறுகின்றது.

# பிரம்ம ஞானம்

ஆதியந்தமில்லாத பரம்பொருள் (பிரம்மம்) அருவமாகவும், காட்சிக்கு அப்பாற்பட்டதாகவும் கட்டுதிட்டங்களுக்கோ, எல்லைக்கோ உட்படாத நிலையிலுள்ளது. அப்பரம்பொருளின் (பிரம்மம்) நிலைக் கூற்றின் (அம்சத்தில்) ஒரு பகுதிவெளியாகும் போது 'பிரகிருதி' (மாயாசக்தி) எனப்படுகிறது. அந்தப் பிரகிருதியே அத்யாத்மம் என்றும், பின்னார் பிரகிருதி செயலில் (உழைப்பு) ஈடுபடும் போது அதுவே கர்மா என்று பெயர் பெறுகிறது. பிரகிருதியின் அவ்வகையிலான இயக்கத்தின் (உழைப்பு) காரணமாக சிருஷ்டிக்கப்படும் எண்ணற்ற ஜீவராசிகளை அதிபூதம் என்றும், அவ்வாருக சிருஷ்டிக்கப்பட்ட உலக ஜீவராசிகளின் உயிராற்றலில் பரம்பொருள் வியாபித்து 'தான்' என்ற எண்ணத்தை (குணத்தை) உண்டாக்கும் நிலையே அதிதைவதம் என்றும் பூர்வநூல்களில் கூறப்பட்டுள்ளது.

"உருவமுள்ளதும் உருவமற்றதும் இறுதியானவை அல்ல. உருவமில்லாததற்கும் (அருவம்) மேலே பிரம்மம் இருக்கிறது. அதுதான் எல்லாவற்றுக்கும் சிறந்தது. உறுதியானது. நிர்ந்தரமானது அழிவற்றது. மற்றவையாவும் அழியக்கூடியது. கீர்த்தி மிக்க பிரம்மத்திடம் எல்லா உயிர்களும் இருக்கின்றன. எல்லா உயிர்களிடத்தும் பிரம்மம் இருக்கிறது. அதுவே மிக உயர்ந்த நிலையாகும். அதை அடைந்தவர்கள் மீண்டும் திரும்பி வரமாட்டார்கள். பிரம்மமாகிய பரம்பொருளிடம் தூய்மையாகவும் உறுதியுடனும் பக்தி கொள்வதின் மூலமே அதை (பிரம்மம்) அடைவதற்குரிய வழியாகும்" என்பது கீதையின் கருத்தாகும்.

பரம்பொருளின் கீர்த்தியைப்பற்றி, கீதையின் எட்டாவது பகுதியில் 'பிரம்மஞானம்' தலைப்பில் கூறப்பட்டுள்ள சுலோகங்கள் பின் வருமாறு—

1. பிரம்மம், என்றால் என்ன? அத்யாத்மம் என்றால் என்ன? கர்மம் எது? அதிபூதம் எது? அதிதைவதம் எது?

2. இங்கே இந்த உலகில் அதியக்ஞன் யார்? அவன் எப்படி அதியக்ஞன் ஆகிறான்? புலன்களை வென்றவன் இறக்கும் போது தங்களை எப்படி அறிகிறான்?

3. எல்லாவற்றிற்கும் மேலானதும் அழிவு அற்றதுமே பிரம்மம். அது ஒவ்வொரு உடலிலும் வியாபித்து இருக்கிறது. அதுவே அத்யாத்மம் எனப்படுகிறது. எல்லா உயிர்களும் சிருஷ்டிக்கப்படும் உற்பத்தி நிலை இயக்கமே (செயல்) கர்மம் என்று கூறப்படுகிறது.

4. அழியும் உருவமே அதிபூதம். அந்தந்த உருவத்தில் இருக்கும் ஜீவான்மாவே அதிதைவதம். யக்ஞத்தினால் தூய்மை யாக்கப்பட்டு இந்த உடலில் இருக்கும் நானே அதியக்ஞன்.

5. இறுதி நேரத்தில் யார் என்னையே நினைத்த வண்ணம் இந்த உடலை விட்டு செல்கிறானோ, அவன் என்னுள் பிரவேசித்து விடுகிறான். இதில் சந்தேகம் இல்லை.

6. ஒருவன் எப்போதும் எந்த உருவத்தை இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அதையே அவன் இறக்கும் நேரத்தில் நினைக்கிறான். எனவே அந்த உருவத்தையே அடைகிறான்.

7. எனவே, எப்போதும் என்னையே நினைத்துக்கொண்டு போர்புரிந்து உன்னுடைய மனத்தையும் அறிவையும் நீ என்னிடமே நிலை நிறுத்துவதால், நிச்சயமாக நீ என்னையே அடைவாய்.

8. இவ்வகையிலான இடைவிடாத பயிற்சியினால் வேறு எங்கும் அலையாமல், உறுதியுடன் நிலைத்திருக்கும் சித்தத்துடன் ஒளிமயமான பரம்பொருளை யார் தியானிக்கிறானோ அவன் அவரையே அடைகிறான்,

9. ஆதியான பரம்பொருளை, எல்லாவற்றையும் ஆளுபவனை, அணுவுக்கும் சிறிய அணுப் போன்றவனை, எல்லாவற்றையும் தாங்குபவனை, கற்பனைக்கு எட்டாதவனை, சூரியனைப்போன்று கீர்த்திமிக்கவனை, இருளைக் கடந்தவனை,

10. யார் இறக்கும் தறுவாயில் நிலைத்த மனத்துடனும், பக்தியுடனும், யோக சக்தியால் இருபுருவங்களுக்கு இடையே மூச்சை நிலைநிறுத்தி தியானம் செய்கிறானோ அவன் ஜோதிமயமான அந்த பரம்பொருளை அடைகிறான்.

11. வேதங்களை அறிந்தவர்கள் எதை அழியாதப் பொருள் என்று கூறுகிறார்களோ, காமம், கோபம் போன்றவற்றிலிருந்து விடுதலையடைந்த முனிவர்கள் எதில் பிரவேசிக்கிறார்களோ, எதை விரும்பி அவர்கள் பிரம்மச்சரியத்தை மேற் கொள்கிறார் களோ, அந்த லட்சியத்தைக் கூறுவேன்.

12. எல்லா இந்திரியங்களின் வாயில்களையும் அடைத்து விட்டு, மனத்தை வேறு எங்கும் செல்ல முடியாதவாறு இருதயத்தில் கட்டுப்படுத்தி, தலைக்குள் மூச்சை நிலைநிறுத்தி முற்றிலும் யோகதியானத்தில் ஈடுபட்டவனாக இருந்து கொண்டு,

13. "ஒரே வார்த்தையில் பிரம்மத்தைக்க குறிக்கும் 'ஓம்' என்ற மந்திரத்தை உச்சரித்துக் கொண்டும், என்னையே இடைவிடாது சிந்தித்த வண்ணமும் யார் உடலை விடுகின்றானோ, அவன் எல்லாவற்றுக்கும் மேலான நிலையை அடைகிறான்.

14. "யார் எப்போதும் என்னிடம் பக்தியுடன் மனத்தை வேறு எதிலும் செலுத்தாமல் இடைவிடாது என்னையே நினைக்கின்றானோ, அந்த யோகி எளிதில் என்னை அடைவதில் வெற்றி பெறுகிறான்.

15. "என்னை அடைந்த மகான்கள், எதற்குமேல் உயர்ந்த நிலை இல்லையோ, அந்த அப்பழுக்கற்ற நிறைவான நிலையை (ஜீவ பிரம்ம ஐக்கியம்) அடைகின்றனர். நிலையற்ற துன்பத்திற்கு இருப்பிடமான மறுபிறப்பை அவர்கள் அடைவதில்லை.

16. "பிரம்மாவின் உலகத்திலிருந்து கீழே எல்லா உலகங்களையும் சேர்ந்தவர்கள் மீண்டும் பிறந்துதான் ஆக வேண்டும். ஆனால், என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பு இல்லை.

17. "ஆயிரம் யுகங்கள் சேர்ந்ததே பிரம்மாவின் ஒரு பகல் பொழுது என்பதையும், ஆயிரம் யுகங்கள் சேர்ந்ததே பிரம்மாவின் ஒரு இரவு என்பதையும் யார் அறிகிறார்களோ அவர்களே பகல் என்றால் என்ன என்பதையும் இரவு என்றால் என்ன என்பதையும் அறிந்தவர்கள் ஆகின்றனர்.

வேதங்கள் உணர்த்தும் தேவ உலகத்தின் கால அளவுகள் பின் வருமாறு விளக்கப்பட்டுள்ளது:

ஆறு ஆறு மாதங்களை உள்ளடக்கிய உத்தராயணம் தட்சிணாயனம் ஆகிய இரண்டும் தெய்வங்களுக்கு ஒரு பகலும் ஒரு இரவும் ஆகும்.

கிருதயுகம் 4000 வருடங்களும், திரேதாயுகம் 3000 வருடங்களும், துவாபரயுகம் 2000 வருடங்களும், கலியுகத்தில் ஆயிரம் வருடங்களும் அடங்கியுள்ளன. இந்த நான்கு யுகங்களுக்கு இடையே 2000 வருடங்கள் இடைக்காலமாக இருக்கின்றன. எனவே நான்கு யுகங்கள் முடிய 12000 ஆண்டுகள் ஆகின்றன. மனிதனின் 360 ஆண்டுகள் தெய்வங்களுக்கு ஒரு வருடம் ஆகின்றன; நான்கு யுகங்களுக்கான 12000 ஆண்டுகளை மனித வருடங்களாக கணக்கிட்டால் $12000 \times 360 = 43,20,000$ வருடங்கள் ஆகின்றன. இவையே தெய்வங்களுக்கு ஒருயுகமாகும்.

இப்படியாக ஆயிரம் யுகங்கள் சேர்ந்தால் பிரம்மாவுக்கு ஒரு நாள் ஆகிறது. அதாவது பிரம்மாவுக்கு ஒருநாள் என்பது (4, 32, 00, 00, 000.) 432 கோடி மனித வருடங்களாகும். இது தான் ஒரு கல்பம் என்று கூறப்படுகிறது.

78. "பகல் வரும் போது கண்களுக்கு தோன்றாத நிலையிலிருந்தவை யாவும் தோன்றும் நிலையை அடைகின்றன. இரவு வரும் போது அவைகள் தோன்றாத நிலையுடையவைகளாக மாறி விடுகின்றன.

19. "இந்த ஜீவராசிகளின் கூட்டம் மீண்டும் மீண்டும் பிறக்கின்றன. அவைகள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் இரவு வரும் போது அவைகள் மறைந்து விடுகின்றன. பகல் வரும் போது மீண்டும் பிறக்கின்றன.

20. "தோன்றாத நிலையிலுள்ள அதைக் காட்டிலும் மேலான தோன்றாத நிலையிலுள்ள பரம் பொருள் இருக்கிறது. அது நிரந்தரமானது. எல்லா ஜீவராசிகளும் அழியும் போது கூட அது அழிவதில்லை.

21. அழிவற்ற கண்ணுக்குத் தெரியாத இந்த பரம் பொருளை அடைவதே எல்லாவற்றிற்கும் மேலான லட்சியமாகும். அந்த லட்சியத்தை அடைந்தவர்கள் திரும்பி வருவதில்லை. அதுதான் என்னுடைய மகோன்னதமான இருப்பிடம் (பரமபதம்) ஆகும்.

22. "எல்லாவற்றிற்கும் மேலான இந்த பரம் பொருளை சஞ்சலமற்ற ஆழ்ந்த பக்தியினால் அடையலாம். அதில் தான் எல்லா உயிர்களும் வாழ்கின்றன. அதனால் தான் எல்லாம் வியாபிக்கப் பட்டிருக்கின்றன.

23. "யோகிகள் இந்த உலகத்திலிருந்து சென்ற பின் சென்றவர்கள் எப்போதும் திரும்பி வருவதில்லை என்பதையும்' சென்றவர்கள் எப்போது மீண்டும் வந்து பிறக்கிறார்கள் என்பதையும் இப்போது உனக்கு நான் கூறுகிறேன்.

24, "பிரம்மத்தை அறிந்த யோகிகள் அக்னி, ஒளி, பகல், சுச்லபட்சம், உத்தராயணம் ஆகியவற்றில் மரணம் அடைந்து பிரம்மத்தை அடைகிறார்கள்.

25. "புகை, இரவு, கிருஷ்ணபட்சம், தட்சிணாயனம் ஆகியவற்றில் மரணம் அடையும் யோகி சந்திரனுடைய ஒளியை அடைந்து, மீண்டும் உலகில் வந்து பிறக்கிறான்.

26. ''ஒளிமார்க்கம் இருள் மார்க்கம் என்ற இந்த இரண்டு வழிகளும் உலகத்தில் நிரந்தர மார்க்கங்களாக இருந்து வருகின்றன: ஒளிமார்க்கம் என்ற ஒன்றின் (ஞானமார்க்கம்) வழியாகச் செல்பவன் திரும்பி வருவதில்லை. இருள் மார்க்கம் (அறியாமை) என்ற ஒன்றின் வழியாகச் செல்பவன் மீண்டும் வந்து பிறக்கிறான்.

27. ''இந்த இரண்டு வழிகளையும் அறிந்த யோகி மதிமயக்கத்தில் ஆழ்ந்து விடமாட்டான். ஆகவே எப்போதும் யோகத்தில் உறுதியுள்ளவனாக இரு.

28. ''வேதங்களை பாராயணம் செய்தல், யக்ஞங்கள், தவங்கள், தானங்கள் ஆகிய நற்செய்கைகளால் ஏற்படக் கூடிய பலன்களை எல்லாம் யோகி கடந்தவனாக இருக்கிறான். இதையெல்லாம் அறிந்தயோகி பரம் பொருளை அடைகிறான்.

'அட்சர பிரம்ம யோகம்' என்ற பகவத்கீதையின் எட்டாவது அத்தியாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது.

## பிரணவத்தின் பெருமை

எல்லா வேதங்களிலும், உநிபஷத்துக்களிலும் ஆகமங்களிலும் கீதையிலும் 'ஓம்' என்னும் பிரணவத்தின் பெருமை மிகவும் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

திருமந்திரத்திலும் பிரணவத்தில் ஒடுக்கம் (சமாதி) என்ற பகுதியில், ஓங்காரத்தின் கீர்த்தி ஒன்பதாவது தந்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

**''தூலப் பிரணவஞ் சொரூபானந் தப்பேர்**
**பாலித்த சூக்கும மேலைச் சொரூபப் பெண்**
**ஆலித்த முத்திரை யாங்கதிற் காரணம்**
**மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே** திருமூலர்

அ-உ-ம என்ற மூன்று எழுத்துகளோடு ஓம் என்னும் தூலப் பிரணவமானது பரு உடலுக்கு இன்பத்தை தரும் மொழியாகும். வேதங்களால் பாதுகாக்கப் பெற்ற விந்து நாதமாகிய சூக்குமப் பிரணவம் பராசக்தியின் வடிவமாகும். சந்தோஷத்தைத் தருகின்ற இரு விழிகளையும் நெறித்து ஒளியை உண்டாக்கும் கிரியை (ஆலித்த முத்திரை) மூலம் சூக்குமப் பிரணவத்தை அறிவதே வேதாந்த வழிமுறையாகும். (வேதாந்த வீதியாகும்)

**ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி**
**ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு**
**ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்**
**ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே** திருமூலர்

''ஓம் என்னும் ஓங்காரத்துள்ளே உபதேசத்துக்குரிய ஒரு மொழி உதிக்கும். அது உருவம் அருவம் ஆகியவற்றைத் தன்னுள் கொண்டு பல பேதங்களுடன் விளங்கும். அவ்வகையில் 'ஓம்' என்னும் பிரணவத்தை அறிவதன் மூலம் மேன்மை மிக்க முத்தியும் சித்தியும் பொருந்தும்.''

**ஓங்காரத்துள்ளே யுதித்தஐம் பூதங்கள்**
**ஓங்காரத்துள்ளே யுதித்த சராசரம்**
**ஓங்கார தீதத்துயிர் மூன்றும் உற்றன**
**ஓங்கார சீவ பரசிவ ரூபமே** திருமூலர்

''பிரணவத்துள்ளே ஐந்து வகை பூதங்கள் (மண், நீர், தீ, காற்று, ஆகாயம்) தோன்றியது. இப்பஞ்சபூத விவகாரத்தால் அசைவனவாகிய (சரம்) மனிதன், விலங்கு, ஊர்வன, பறப்பன தேவர்கள், அசுரர்கள் முதலானோரும், அசையாதவைகளான (அசரம்) மலை, மரம், செடி, கொடி, முதலியன தோன்றின. பிரணவத்தைக் கடந்த ஆதீதத்தில் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் (மும்மலம், இருமலம், ஒருமல முடையோர்) ஆகிய மூவகை உயிர் வகை இனங்களும் உள்ளனவாகையால், ஜீவர்களுக்கும் தனித்து இயங்கும் ஆன்மாவுக்கும், அனைத்து ஜீவராசிகளுடைய உள்ளத்திலும் பரவி, நிரவி சூட்சும ரூபமாக விளங்கும் சிவத்துக்கும் பிரணவம் உரிய நிலையாகும்.

**வருக்கஞ் சுகமாம் பிரம்மமு மாகும்**
**அருக்கஞ் சராசர மாகும் உலகில்**
**தருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி**
**சுருக்கமின் ஞானந் தொகுத்துணர்ந் தோரே** திருமூலர்

''அ-உ-ம என்ற மூன்று எழுத்துக்களோடு கூடிய ஓங்காரத்தின் இறுதியிலுள்ள நாதபிரம்மம் சுகவடிவானதும் வியாபித்துள்ளதும் ஆகும்.

அதனுடைய சுருங்கிய நிலையே சரமாகவும் (அசைவன) அசரமாகவும் (அசையாதவையாகவும்) இருக்கின்றன. ஆகவே பெரிதாகக் கருதப்பெறும் உலகமெல்லாம் நாத பிரம்மத்தின் வடிவமாகும். இந்த உண்மையை அறிந்தோர் விரிந்த (சுருக்கமில்) ஞானம் அடைந்தோர் ஆவர்.

மலையு மனோபவ மருள்வன வாவன
நிலையிற் றரிசனம் தீப நெறியாங்
தலமுங் குலமுங் தவஞ்சித்த மாகும்
நலமுஞ்சன் மார்க்கத் துபதேசங் தானே. —திருமூலர்

"மயக்கத்தை (மலைவு) யுடைய மனமானது பிராணன் (பவன்) இயக்கத்தால் அலைபாய்கிறது. அவ்வகையிலான மன மயக்கம் தெளிந்த நிலையில், ஞான குருவருளால் உணர்த்தப் படுவதே தீப நெறியாகும். இந்நிலை கிட்டுவதற்கு சத்சங்கச் சார்பும், மனமும், தியானப் பயிற்சிகளும் (தவம்) தூய்மையாக இருப்பதோடு, மனத்தை அடக்கியும் (நலம்) சன்மார்க்க உபதேசங்களைப் பெறுவதாலும் நன்மை உண்டாகும். பிரணவ உபதேசத்தால் ஞானநெறி (சன்மார்க்க நெறி) மிகுந்து மனம் இறை நிலையில் புகுந்து பிராணன் அடங்கும்.

சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்
காடிய ஈரா றின் அந்தமும் ஈரேழிற்
கூடிய அந்தமுங் கோதண்ட முங்கடங்
தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. —திருமூலர்

"சோடச மார்க்கம் எனப்படுவது சரியை,கிரியை, முதலான பதினாறு நெறிகளாகும். அந்நெறிகள் சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனப்படும். ஒவ்வொன்றிலும் நான்கு பிரிவுகளுடன் பதினாறு நெறிகளாக (கலைகள் என்று) உணர்த்தப்பட்டுள்ளது. அவற்றுள்பன்னிரண்டாவது நெறி,செறிவில் அறிவு எனப்படுவது யோகத்தில் ஞானநிலையாகும். பதினான்காவது நெறி அறிவில் நோன்பு எனப்படுவது ஞானத்தில் கிரியை நிலையாகும். இந்நெறிகளுக்கும் மேலாக கோதண்டம் எனப்படும் (ஓம்) ஞானத்தில் யோகநிலையை மேற்கொண்டு, பதினாறாவது நெறி யாகிய அறிவின் அறிவு எனப்படுவது ஞானத்தில் ஞானம் (ஞேயாந்தம்) கைவரப் பெற்று இறைவனின் திருவடிப் பேறு அடையலாம்.

பதினாறு நெறிகளுக்கான (கலைகள்) விளக்கம் பின் வருமாறு :

1. சீலத்தில் சீலம். 2. சீலத்தில் நோன்பு. 3. சீலத்தில் செறிவு 4. சீலத்தில் அறிவு என்றுள்ளதைப் போன்று நோன்பு, செறிவு அறிவு ஆகிய மூன்றும் தனித்தனியே நான்கு பிரிவுகளைக் கொண்டுள்ளதாக உணர்த்தப்பட்டுள்ளது.

''வேதங்கள் எல்லாம் எதை அடிக்கடி கோஷிக்கின்றனவோ' எல்லா தவங்களும் எதைப்பற்றி குறிப்பிடுகின்றனவோ, எதில் ஆசை வைத்து மனிதர்கள் பிரம்மச் சரியத்தை அனுசரிக்கிறார் களோ, அந்த லட்சியத்தை உனக்கு சுருக்கமாகக் கூறுகிறேன். அதுதான் ''ஓம்'' என்பதாகும்'' கடோபநிஷத் 2-15

இந்த ''ஓம்'' என்ற அட்சரமே பிரம்மம். இந்த அட்சரமே பரப்பிரம்மம். இந்த அட்சரத்தை அறிந்தால் ஒருவன் எதை விரும்புகிறானோ அது அவனுடையதாகிறது''

(கடோநிஷத் 2-16)

''ஓம் என்ற அட்சரத்தால் எவன் பரம் பொருளை தியானிக் கிறானோ அவன் சூரிய ஒளியில் ஒன்றுபடுகிறான். இறந்தபின் இவ்வுலகிற்கு திரும்பி வருவதில்லை. கிரம முக்தி எய்துகிறான். எங்ஙனம் பாம்பு தன் சட்டையினின்று விடுபடுகிறதோ அங்ஙனம் அவன் பாவத்திலிருந்து விடுபட்டவனாகிறான். சாமங்களால் அவன் பிரம்மலோகத்துக்கு அழைத்துச் செல்லப்படுகிறான். சமஷ்டி ஜீவவடிவினனான இந்த இரண்ய கர்பனுக்கும் (பிரம்மாவுக்கும்) அப்பாலுள்ள பரமபுருஷனை, உடல்கள் அனைத்திலும் உறைபவனைக் காண்கிறான்.''

பிரச்னோப நிஷத்—5-5

''ஓங்காரமே பிரம்மம், ஓங்காரமே இது எல்லாம் ''ஓம்'' என்ற இதுவே 'ஆகட்டும்' என்பதற்கும் 'ஓ; கேள்' என்று கூவிச் சொன்னால் 'கேட்கிறேன்' என்பதற்கும். அறிகுறியாக உள்ளது பிரசித்தம். ஓம் என்று தொடங்கி ஸாமகானம் செய்கின்றனர். 'ஓம் சோம்' என்று தொடங்கியே ருக்வேத 'சஸ்திர, மந்திரங்களைச் சொல்லுகிறார்கள் தெரிவிக்கிறார்கள் 'ஓம்'என்றே பிரம்மா அனுமதியைத் தெரிவிக்கிறார். 'ஓம்'என்றே அக்னி ஹோத்திரத்திற்கு அனுமதி கொடுக்கிறார். பிரம்மத்தை அடைய வேண்டும் மென்றும், வேதம் பயில வேண்டுமென்றும் வரும் சிஷ்யனுக்கும் அத்தியயனம் தொடங்கும் போதும் ''ஓம்' என்றே கூறி குருபாடத்தை ஆரம்பிக்கிறார். சிஷ்யனும் ஞானம் பெறுகிறான்''

தைத்ரீய உபநிஷத் 1-8-1

''ஓம் என்ற அட்சரமே இது எல்லாம் அதன் விளக்கம் சென்றது—நிகழ்வது—வரப்போவது என்ற எல்லாம் ஓங்காரமே. எது முக்காலத்துக்கும் அப்பாலுள்ளதோ அதுவும் ஓங்காரமே''

மாண்டுக்ய உபநிஷத்—1

''அ-உ-ம என்ற மூன்று மாத்திரைகளை உள்ளடக்கிய ''ஓம்'' என்னும் ஓங்காரத்திலுள்ள முதல் மாத்திரையான

'அ' ஜாக்கிரம் (விழிப்பு) நிலையையும் ஸ்தூல தேகத்தையும், "உ" என்ற மாத்திரை ஸ்வப்ன (கனவு) நிலையையும் சூட்சும தேகத்தையும், 'ம' என்ற மாத்திரை சுஷுப்தி (உறக்கம்) நிலையான காரண தேகத்தையும் குறிப்பவையாகும். பிரணவத்தின் மூன்று மாத்திரைகளையும் சேர்த்து 'ஓம்' என்று உபாசித்தால் முப்புரங்களையும் (திரிபுரம்) எரித்து முக்தி எய்தலாம்"

பிரச்னோப நிஷத் 5-6

முப்புரம் என்பது மும்மலக்குற்றங்கள். ஆணவம், மாயை, கன்மம் என்பதாகும்.

**அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்**
**முப்புர மெரித்தனன் என்பர் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மல காரியம்**
**அப்புர மெரித்தமை யாரறிவாரே** —திருமூலர்

"ருக்வேத ரூபமான அகார உபாசனையால் ஒன்றாகிா ஓங்காரத்திலிருந்து மூன்று மாத்திரைகள் தோன்றின. இவைகளே மூன்று நிலைகளும், முக்காலங்களும், மூவுலகங்களும் மற்றெல்லாமும் ஆகும். முதல் மாத்திரையாகிய 'அ' வில் இருந்து 'பூ' என்னும் வியாஹ்ருதியும், 'தத்ஸவிதுர் வரேண்யம்' என்னும் காயத்ரியின் முதல் பாகமும் ருக்வேதமும் உண்டாயின. இரண்டாவது மாத்திரையாகிய 'உ' விலிருந்து 'புவ' என்னும் வியாஹ்ருதியும் 'பர்கோ தேவஸ்ய தீமஹி' என்னும் காயத்ரியின் இரண்டாவது பாதமும் யஜுர் வேதமும் உண்டாயின. மூன்றாவது மாத்திரையாகிய 'ம' வில் இருந்து 'ஸுவ' என்னும் வியாஹ்ருதியும் 'தியோயோந பிரசோதயாத்' என்னும் காயத்ரியின் மூன்றாவது பாதமும் ஸாம வேதமும் உண்டாயின.

"பரம் பொருளின் புகழ் பாடுவது (ஸ்துதிபாரா) ருக்வேதம், பரம் பொருளின் ஆராதனை மற்றும் பூஜாக்கிரமங்களை (கிரியா பரா) விளக்குவது யஜுர்வேதம். பரம்பொருளைப் பற்றிய ஞானத்தைப் புகட்டுவது (ஞானபரா) ஸாமவேதம். இவ்வாறாக ஓங்காரத்தின் மூன்று மாத்திரைகளையும் சொல் செயல் சிந்தனையால் (உள்ளத்தில்) 'ஓம்' என்னும் மந்திரத்தை உபாசித்து வந்தால் பரிபூரண நிலையை அடைய முடியும்.

பிரச்னோபநிஷத் 5-5. 6, 7,

"இரண்டற்றதாகவும், சிவமாயும், பிரபஞ்சம் லயிக்கும் இடமாயும், விவரிக்க முடியாததாயும் உள்ள நாலாவது மாத்திரை இல்லாதது 'ஓம்' என்னும் ஓங்காரமே ஆத்மா.

எவனெவன் இங்ஙனம் (ஆன்மாவை) அறிகிறானோ அவனவன் தன்னால் தானாகிய ஆத்மாவை அடைகிறான்.

மாண்டூக்ய உபநிஷத் 1 - 12

இவ்வாறாக "ஓம்" எனும் ஓங்காரத்தின் சிறப்பு குறித்து வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் கூறப்பட்டுள்ளது.

## அத்வைதம்

அத்வைதம் என்ற சொல்லுக்கு இரண்டற்றது என்பது பொருளாகும். ஜீவனும் பிரம்மமும் ஒன்றேயாகும் என்ற கருத்தில் "உண்மை ஒன்றுதான் அது பலவாகப் பேசப் படுகிறது." (ஏகம் சத் விப்ர பகுதா வதந்தி) என்று சுருதி கூறுகிறது.

'சுருதி' என்றால் வேதங்களைப் பிறர் ஓத அந்த வேதாந்த கருத்துக்களை காதால் கேட்டு கேள்வி ஞானம் பெறுவது சுருதி எனப்படும். அவ்வாறாகக் கேட்டு அறிந்த கேள்வி ஞானத்தை (சுருதியை) ஞாபகத்தில் வைத்துக் கொள்வது 'ஸ்ம்ருதி' எனப் படும்.

கருத்துக்கு ஒவ்வாத பல வேதாந்த விஷயங்களிலுள்ள திரிபு களை (பேதம்) ஸ்ரீசங்கரர் ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஏற்புடைய (அபேதக்) கருத்துக்களை தத்துவார்த்தமாகப் பேசியும், விவாதித்தும் அத்வைதக் கொள்கையை மக்களிடையே போதித்தார்.

அத்வைதக் கொள்கைக்கு மையக்கருவாக மாண்டூக்கியோப நிஷத்திலுள்ள பன்னிரண்டு மந்திரங்கள் அமைந்துள்ளன. ஸ்ரீசங்கரரின் பரமகுருவான ஸ்ரீகௌட பாதாச்சாரியார் மாண்டூக்ய உபநிஷத்திலுள்ள பன்னிரண்டு மந்திரங்களை நான்கு பிரிவுகளாக்கி காரிகை என்ற பெயருடன் வியாக்யானம் எழுதி, யுள்ளார்.

ஸ்ரீசங்கரர் மேற்படி நான்கு காரிகைகளையும், மாண்டூக் கியோபநிஷத் மந்திரங்களையும் ஆய்ந்து அத்வைதத் தத்து வத்தைத் தோற்றுவித்தார்கள்.

"உண்மை ஒன்றுதான். அது இரண்டாவது இல்லாததாக ஒன்றாகவே இருக்கிறது." என்று பிரம்மத்தைப் பற்றி பேசும் கொள்கைக்கு அத்வைதம் என்று பெயர்.

"பிரத்யட்சம், அனுமானம் ஆகமம் ஆகிய மூன்று பிரமாணங்கள்படி நிரூபணமாகும் பிரம்மமே உண்மை,

நிருபணம் செய்ய முடியாத பிரபஞ்சம் மாயை" என்பதும் அத்வைதத் தத்துவமேயாகும்.

''ஜீவனும் பிரம்மமும் வேறானதேயாகும். பிரம்மம் வியக்க தக்க ஆற்றல் படைத்தது. பிரம்மம் பிரபஞ்சமாக மாறித் தோன்ற முடியும். ஆகவே, உலகம் மெய்யானது. பொய்யல்ல'' என்பது விசிஷ்டாத்வைதக் கொள்கையாகும். இதன் ஸ்தாபகர் ஸ்ரீராமானுஜர்.

''பிரம்மமே கடவுள். ஜீவனும், ஜடப்பொருளும் பிரம்மத்தின் படைப்பேயாகும். இவ்வாறாக பிரம்மம் ஒன்றாகவும் பலவாகவும் இரண்டாகவும் தோன்றுகிறது'' என்பது துவைதக் கொள்கையாகும். இதன் ஸ்தாபகர் ஸ்ரீமத்வர்.

தூய ஜீவனுக்கும் சைதன்யத்துக்கும்(ஆன்மா சுத்த பிரம்மத்துக்கும் உள்ள ஐக்யத்தை உணர்த்துவதே தத்தத்வமஸி என்ற வாக்கியத்தின் உட்பொருளாகும்.

விசிஷ்டாத்வைதம், துவைதம் இரண்டும் அத்வைதத் தத்துவத்தைச் சார்ந்து வியாக்யானம் செய்யப்பட்டுள்ளது என்பது தெளிவு.

''பிரம்மம் சத்தியம். உலகம் மாயை எல்லாம் கற்பனை, ஞானமே உண்மை'' என்பதற்கேற்ப 'நிலையாமை' அதிகாரத்தில் திருவள்ளுவர் கூறியுள்ள சில குறட்பாக்களை இங்கு நினைவு கூர்வது பொருத்தமாக இருக்கும்.

**நில்லாத வற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறி வாண்மை கடை.**

குறள் 331

''நிலையில்லாதவற்றை நிலைத்தன்மையுடையன என்று நினைக்கின்ற அற்ப அறிவு (மாயை) கீழ்பட்ட தன்மையாகும்.'

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு.**

குறள் 336

''ஒருவன் 'நேற்று உயிரோடு இருந்தான்; இன்று மறைந்தான் என்றுசொல்லும் நிலையற்ற தன்மையையுடையது இவ்வுலகம்.''

**குடம்பை தனித்துஒழியப்புள் பறந் தற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு.**

குறள் 338

"உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவு தான் வளர்ந்த கூடு தனித்து கிடக்க (முட்டையின் ஓட்டுக்குள்ளிருந்து) அதை விட்டு வேறிடத்துக்கு பறவை பறந்து போனாற் போன்றது.

இவ்வாறாக உடலுக்கும் உயிர்க்கும் உள்ள நிலையில்லாத தொடர்பினைப் போன்று உலகப் பொருள்களும் நிலையில்லாதவை என்றும், அழியக் கூடியதே என்றும் புத்திக்குப் புலப்படாத வரை "அது வேறு இது வேறு" (கடவுள் (பிரம்மம்) வேறு உலகம் வேறு) என்ற மாயையில் (அறியாமை இருளில்) ஜீவன் சிக்கிச் சுழல்கிறது.

பிரம்மத்தின் சத்தியப் பொருளை உணரும் உண்மை அறிவு (ஞானம்) மிகும் போது நிலையாமையாகிய உலகியல் பொருள்கள் ஜீவனுக்கு புலப்படாது. உலகியல் பொருள்கள் நிலையாமையே என்ற நினைப்பு (மன அறிவு) மிகாத போது பேதமுள்ள உலகப் பொருள்கள் பிரம்ம ஞானத்தை மறைத்து விடுகிறது.

மாயா ரூபமான உலகியல் படைப்புகள் காட்சிப் பொருள்களாக மட்டுமே இருக்கின்றன. ஆனால், படைப்பு இல்லாத போது ஜீவன் பிரம்மம் என்பது வெவ்வேறாக இருப்பதில்லை. உலகமும் உலகப் பொருள்களும் இல்லாமல் போய்விடுகிறது. உண்மைப் பொருளான பிரம்மம் ஜீவனாகவும் பிரம்மமாகவும் தோன்றுகிறது.

இவ்வகையிலான தோற்றமே மாயை எனப்படுகிறது. இது தான் இருப்பதாகத் தோன்றுவதும் பின்னர் இல்லாதவையாக மறைவதும் ஆகும். காட்சிப் பொருள்களாக சிறிது நேரம் தோன்றி விடுவதால் உள்ளது போன்ற பிரமை ஏற்படுகிறது. உண்மையில் மாயப் பொருள்களுக்கு இருப்பு (நிலைத்தல்) இல்லாமல் போய் விடுகிறது.

இக்கருத்தை உணர்த்துவதற்காகத்தான் 'காணுறு கயிற்றில் அரவும், கட்டையில்கள்வனும், கானலிடை நீரும், கிளிஞ்சலிடை வெள்ளியும் போன்று தோற்றமளிக்கும் உலகியல் பொருள்கள் யாவும் இருப்பு (நிலைத்தல்) இல்லாத மாயை என்று கூறப் பட்டுள்ளது.

சூரிய வெப்பத்தால் நீர் நிலைகளிலிருந்து கிளம்பும் நீராவி மேகத்திரையானதும், தன்னை உற்பத்தி செய்த சூரியனையே மேகங்கள் சில வினாடிகள் மறைத்து விடுவதே போன்று, பிரம்மத்தின் அசைவினால் அதன் ஒரு சிறு பகுதி பிரகிருதியாகி அதன் செயல்பாட்டினால் கர்மாவாக இயங்கத் தொடங்கும்

போது இருப்பாகக் காட்சியளிக்கும். மாயா ரூபப் பொருட்களே பிரம்மத்தை மறைத்து விடுகிறது.

நெருப்பினால் ஏற்படும் புகையானது, புகைக்கு ஆதாரமான நெருப்பையே புகை சூழ்ந்து மறைத்து விடுவதே போன்று, உலகியல் பொருள்களின் ஈர்ப்பு சக்தி பிரம்ம ஞானத்தை மறைத்து விடுகிறது.

இவ்வாறாக அடிப்படை உண்மைப் பொருளான சூரியனை மேகமும், நெருப்பை புகையும் மறைப்பது போலுள்ள நிலையானது ஆவர்ண சக்தி எனப்படுகிறது.

ஆவர்ண சக்தியைப் போன்று மற்றுமோர் சக்தியும் உண்டு. அது விசேபசக்தி எனப்படும். விஷேபம் (விசேபம்) என்றால் மாறுதலுடையது என்று பொருளாகும்.

தண்ணீர் பிரத்யட்சம்; தண்ணீரில் தோன்றும் நீர்க்குமிழி விசேபமாகும் (மாறுதலுடையது). தங்கம் பிரத்யட்சம், தங்கத்தினால் செய்யப்படும் மோதிரம், வளையல், சங்கிலி போன்ற ஆபரணங்கள் விசேபம். பருத்தியிலிருந்து திரிக்கப்பட்ட நூல் பிரத்யட்சம், அந்த நூலினால் நெய்யப்பட்ட வேட்டி, சேலைகள் போன்ற ஆடைகள் விசேபம். களிமண் பிரத்யட்சம், களிமண்ணால் செய்யப்பட்ட குடம் விசேபம். வெல்லம் அல்லது சக்கரை பிரத்யட்சம். இவற்றால் செய்யப்பட்ட பலவகையான பெயர்களுடைய தின்பண்டங்கள் விசேபம்.

தண்ணீரிலிருந்து மாறுபட்டுத் (விசேபம்) தோன்றும் குமிழி, நீர்க்குமிழி என்று பெயருடையதாக மாறும் போது தண்ணீர் என்ற பொருளின் உண்மைப் பெயர் மறைந்து விடுகிறது.

மோதிரம், வளையல், சங்கிலி என்று ஆபரணங்களைப் பெயரிட்டுச் சொல்லும்போது பிரத்யட்சமான தங்கத்தின் உண்மைப் பெயர் மறைந்து விடுகிறது.

வேட்டி, சேலை என்று ஆடை வகைகளைப் பெயரிட்டுச் சொல்லும் போது, பருத்தி நூல்கள் என்ற உண்மைப் பெயர் மறைந்து விடுகிறது.

அப்பம், அதிரசம், லட்டு, ஜிலேபி என்று கூறும்போது அவற்றுக்கு ருசி யூட்டும் இனிப்புக்கு காரணமான வெல்லம்—சக்கரை என்ற பிரத்யட்சப் பொருளின் பெயர் விசேபமாகி விடுகிறது, மாறுதல் அடைந்து விடுகிறது.

இந்த விசேப சக்தியைப் பற்றி திருமூலர் திருமந்திரத்தில் எட்டாம் தந்திரத்தில் பின்வரும் பாடல்கள் மூலம் மிகவும் அழகாகத் தெளிவு படுத்தியுள்ளார்.

**பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்**
**பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்**
**தன்னை மறைத்தது தன்கரணங் களாம்**
**தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.** திருமூலர்

"மோதிரம், வளையல், சங்கிலி என்ற ஆபரணங்களை நகை என்னும் எண்ணத்துடன் பார்க்கும்போது தங்கம் என்ற மூலப் பொருள் மறைக்கப் படுகிறது. தங்கம் என்ற நோக்கத்துடன் பார்க்கும்போது எத்தனை சவரன் மோதிரம், வளையல், சங்கிலி என்று தங்கத்தின் மதிப்பு நிறுத்தல் அளவு மூலம் கணிக்கப் படுகிறது. அதுபோல், ஆன்மாதான் கருவி கரணங்கள் என்று எண்ணினால், ஆத்ம சொரூபம் மறைக்கப்பட்டு விடும். ஆன்மா தான் வேறு அன்று என்று பார்க்கும் போது கருவி கரணங்களும் அதன் செயல்பாடுகளும் மறைந்து விடும்.

**மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தின் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்**
**பரத்தின் மறைந்தது பார்முதற் பூவே.** —திருமூலர்.

"மரத்தினால் செய்யப்பட்ட அழகிய யானை உருவத்தைப் பார்க்கும்போது மரம் மறைந்து விடுகிறது. யானையின் உருவ அமைப்பின் சிறப்பு அம்சமான கலை நுட்பம் பேசப்படுகிறது. யானை உருவ அமைப்பை மறந்து விட்டு பார்க்கும்போது, மரத்தின் தன்மையும் சிறப்பும் மற்றும் அந்த யானை உருவைச் செய்த கைவினைக் கலைஞனின் மேன்மையும் புலப்படுகிறது. அதேபோல் உலகப் பொருட்களைப் பார்க்கும் போது அவற்றைப் படைத்த பிரும்மத்தின் ஒருசிறு பகுதியான பிரகிருதியின் கர்மா மறைந்து விடுகிறது. உலகப் பொருட்களின் படைப்புக்கு மூலமான பிரம்மத்தின் நினைவு மிகுந்து மேலோங்கும் போது உலகப் பொருட்களின் மாயை மறைந்து விடுகிறது.

ஒன்றேயாகிய பிரம்மம் இருநிலையற்றது என்று எண்ணும் போது உலகமாகவும், உலகப் பொருட்களாகவும் காட்சியளிக் கிறது. பிரம்மத்தால் படைக்கப்பட்ட உலகமும் உலகப் பொருட்களுமே பிரம்மத்தை மறைத்து விடுகிறது.

இக்கருத்தை தெளிவு படுத்தும் திருக்குறள் பின்வருமாறு—

**எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** (குறள் 355)

உண்மையின் (முழு) நிலை மறக்கப்பட்ட பின் ஜீவனுக்குள்ள அவஸ்தைகளான தூக்கம், கனவு, விழிப்பு நிலைகள் ஏற்படு கின்றன.

தூக்கத்தில் இந்திரியங்களின் செயல்பாடு மிகும்போது பல வகையான கற்பனை நிகழ்ச்சிகள் கனவில் தோன்றுகின்றன. கனவில் இந்திரியங்கள் மட்டுமே கற்பனை விஷயங்களை நுகர் கின்றன. மனம் கனவில் தனிமையில் லயிப்பதில்லை. விழிப்பு நிலையில் மனம் இயங்கும்போது பலவித கற்பனை நிகழ்ச்சிகள் மனத்தில் நிழலாடுகின்றன. ஆகவே, தூக்கத்தில் காணும் கனவு களும், விழிப்பில் தோன்றும் சிந்தனை ஓட்டங்களும் கற்பனை யாகவே இருக்கிறது.

விழிப்பு நிலையில் புலன்கள் மட்டும் விருத்திகளைத் தோற்று விப்பதால், ஜீவன் விழிப்பு நிலையில் இருக்கும் போது 'வைஸ்வாநரன்' என்று அழைக்கப்படுகிறான். உலகிலுள்ள அனைத்து ஜீவராசிகளின் உடல்களாக இருப்பவன் 'விராட்' எனப்படுகிறான்.

கனவு நிலையில் ஜீவன் இந்திரியங்களினால் சுகானுபவங் களைக் கற்பனையாகக் (கனவு) காணும் போது ஜீவன் 'தைஜஸன்' என்று அழைக்கப்படுகிறான். ஒட்டு மொத்தமாக அனைத்து ஜீவர்களின் கனவு நிலையாகக் காணும் சூத்ராத்மா 'ஹிரன்யகர்பர்' எனப்படுகிறார். தூக்கத்தில் ஒன்றும் அறியா மல் உறங்கும் ஜீவன் 'பிராக்ஞன்' எனப்படுகிறான்.

உலக காட்சிப் பொருள்கள் அனைத்துமான அசையும் மற்றும் அசையாத பிரபஞ்ச உயிர்களை வெளிப்படாமல் அடக்கிப் பிறகு காட்சிக் குறியதாக்குபவர் ஈஸ்வரன் எனப் படுகிறார்.

இவ்வாறாகப் பிரம்மம் விசேப சக்தியால் பல நிலைகளில் பல வகையான பெயர்களுடன் அழைக்கப்படுகிறார்.

உலகை பொய் என்று கூறுவது அத்வைதக் கொள்கையல்ல என்றும் கூறுவர். எந்த ஒரு பொருளையும் உண்மை என்று நிரூபிக்கப்பட வேண்டும். அந்த உண்மைப் பொருளே 'சத்' எனப்படும் என்பர். அவ்வாறாகக் காணப்படும் 'சத்' ஆன உண்மைப் பொருட்களை அத்வைதம் மூவகைப் படுத்துகிறது.

அவைகள் பிராதிபாசிகம், விவகாரிகம், பரமார்த்திகம்எனக் கூறப்பட்டுள்ளது. பிராதிபாசிகசத் எனப்படுவது- "பிரம்மம் தவிர்த்து உலகக் காட்சிப் பொருள்கள் அனைத்திலும் உள்ள மாயா தோற்றம் நீங்கிய பிறகு உண்மை அறிவுக்குப் புலப்படும் பொருள்கள் (விஷயங்கள்) யாவும் 'பிராதிபாசிகசத்' எனப்படும்.

'கானலிடை நீரும், கட்டையில் கள்வனும், காணுறு கயிற்றில் அரவும், கிளிஞ்சளிடை வெள்ளியும், செந்நிற மலரின் சார்பினால் வெள்ளைநிற ஸ்படிக (கண்ணாடி) மணிகள் செம்பவள நிற மணிகளாகத் தோன்றுவது எல்லாம் மாயையே என்று புத்திக்கு உண்மை புலப்பட்டதும், உண்மைப் பொருளில் இல்லாத ஒன்றை கற்பித்துக் கொண்ட மயக்க நிலை (அறியாமை) நீங்கும்போது, புலனாகும் உண்மைப் பொருள்கள் யாவும் 'பிராதிபாசிக சத்' எனப்படும்.

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய ஐம்பூதங்களில் பிரம்ம சொரூபம் மறைந்து விடுவதற்கு காரணம் அறியாமையாகும். அவ்வகையிலான அஞ்ஞானம் நீங்கி, பஞ்ச பூதங்களினூடே பிரம்ம சொரூபம் காட்சியளிப்பதாக அனுபவ ஞானம் (அனுபூதி) ஏற்படுகிறது. தத்துவ (படிப்பு) அறிவினால் அறியப்படாத விஷயங்கள் அனுபவ ஞானத்தினால் அறியப் படுவதும் உண்டு. இதுவே 'விவகாரிகசத்' எனப்படும்.

முக்காலத்தும், முடிவில்லாமலும், நிலையானதுமானதும், நாம ருப குண தோஷமில்லாததுமாகிய பரம்பொருள், பிரம்மம் 'பரமார்திகசத்' எனப்படும். இதுவே நிர்க்குணப் பிரம்மம் ஆகும்.

மாயையிலுள்ள ஞானம், சக்தி, கருணை, பக்தி, வீரம் முதலான குணங்களுடன் ஜீவர்களால் பூஜிக்கப்படும் இறை நிலைக்குச் சகுணப் பிரம்மம் என்றும் பூர்வ நூல்களில் கூறப் பட்டுள்ளது.

ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்ற பொருளுடன் கூடிய தத்த்வம் அஸி என்ற சாம வேதத்தின் மகா வாக்கியத்தின் பொருள் யாதெனில், 'தத்' என்கிற சொல்லுக்கு சத்சித் ஆனந்த மாகவும், இரண்டு படாததுமானது எதுவோ அதுவே பிரம்மம் என்பது பொருளாகும். 'த்வம்' என்ற சொல்லுக்கு ஜீவாத்மா விவேகத்தாலும், ஞானத்தாலும் தூய்மை படுத்தப்பட்ட ஆத்ம ரூபம் என்பதே ''த்வம்'' என்ற சொல்லின் அர்த்தமாகும்.

ஜீவனிடத்திலுள்ள அஞ்ஞானத் தொடர்புகள் நீங்கி ஞானம் கைவரப் பெற்றதும் மிஞ்சுவது சுத்த சைதன்யமேயாகும். இந் நிலையை அடைந்த தூய ஜீவசைதன்யத்துக்கும், தூய பிரம்ம சைதன்யத்துக்கும் உள்ள ஐக்கிய தத்துவமே தத்த்வம் அஸி என்ற மகா வாக்கியத்தின் பொருளாகும். இதுவே அத்வைதத் தத்துவமாகும்.

# 4. இராஜயோகம்

சித்தவிருத்திகளை கட்டுக்குள் கொண்டு வந்து ஒரு முகமான மனோநிலையுடன் இணைதல் யோகப் பயிற்சியாகும்.

வாய், கை, பாதம், குதம் (மலவாய்) குய்யம் (ஜனனேந்திரிய உறுப்பு) ஆகிய கன்மேந்திரியங்களின் செயலாக்கத்துக்குக் கண், காது, மூக்கு, மெய், நாக்கு ஆகிய ஞானேந்திரியங்களின் ஒத்துழைப்பு வேண்டும். இவ்வகையிலான இந்திரியங்களின் செயல்பாடுகளே சித்த விருத்திகள் எனப்படும்.

பருவுடலின் நோய்க்கு வைத்தியம் பார்த்து மருந்து சாப்பிட்டு குணமடையலாம், சூட்சும உடம்புக்கு கன்மேந்திரியம் மற்றும் ஞானேந்திரியங்களால் ஏற்படக் கூடிய பாதிப்புகளுக்கு யோகப் பயிற்சி மட்டுமே மருந்தாகிறது.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி எனப்படும் எண்வகை அங்கங்களைச் செவ்வனே பயின்று, யோகசித்தி கைவரப் பெற்று தன்னைத் தானே தூய்மைப்படுத்திக் கொண்டும் மனத்தை ஒருமுகப் படுத்திக் கொள்ளும் பயிற்சியே அஷ்டாங்கயோகம் எனப்படும் இராஜ யோகமாகும்,

மனத்தின் இயல்புகள் ஐவகைகளாகும் என்று கூறப் பட்டுள்ளது. தொடர்பற்ற மனோநிலை (ஹிப்தம்) எண்ணங் களற்ற மனோநிலை (முக்தம்) குழப்பமான மனோநிலை (விசிப்தம்) ஒருமுகப்படுத்தப்பட்ட திடமான மனோநிலை (ஏகாக்ரம்) சமாதிநிலை (நிருத்தம்).

யோக சாதகனுக்கு ஒன்பது விதமான தடைகள் ஏற்படு கின்றன. அவைகள் முறையே நோய், உண்மையில் நிலையாமை, சந்தேகம், நினைவு தடுமாற்றம், சோம்பல், புலன்விவகாரங் களில் பற்றுதல், எதிர்மறைப்பொருள் உணர்வு, தியானப் பயிற்சியில் தளர்வு, தூய சித்த விருத்திகளைத் தொடராமை ஆகிய இந்த ஒன்பது நிலைகளும் யோக சாதகனுக்கு தடைகளாக அமையும் வாய்ப்புகள் உண்டு,

இவ்வாறானத் தடைகளைப் போக்குவதற்கு தியானப் பயிற்சியில் தளர்வு இல்லாமல் அப்பியாசம் செய்ய வேண்டும். மன அமைதிக்குப் பிராணாயாமப் பயிற்சி அஸ்திவாரமாகிறது.

பிராணாயாமப் பயிற்சி என்பது சுவாசப் பயிற்சியாகும். பிராணாயாமப் பயிற்சிக்குரிய நிலைகள் மூவகைப்படும். அவைகள் முறையே ரேசகம், பூரகம், கும்பகம் எனப்படும். சுவாசத்தை வெளியிடுதல் ரேசகம் சுவாசத்தை உள்ளுக்கு இழுத்தல் பூரகம். உள்ளுக்கு இழுக்கப்படும் சுவாசத்தை சுவாசப்பைகளில் உள்முகமாக நிறுத்துவது கும்பகம் எனப்படும்.

இராஜயோகத்துக்குரிய எண்வகைத் தொகுப்புகளான இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி எனப்படும் இந்த எட்டு நிலைகளின் தன்மை யாதென்று அறிவோம்.

## இயமம்

இயமம் என்பது தீயனவற்றைச் செய்யாது ஒழுக்கமுடன் இருத்தலாகும்.

**கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காமம்**
**இல்லான் இயமத் திடைநின் றானே.** திருமூலர்

எந்த உயிரையும் கொல்லாதவனும், பொய்பேசாதவனும் திருடாதவனும், எப்பொருளையும் ஆய்ந்துணரும் அறிவாற்றல் உடையவனும், நல்ல குணங்களையுடையவனும், பணிவு (அடக்கம்) உடையவனும், நீதிவழுவாதவனும், தான் உண்பதை. மற்றவர்க்கும் பகிர்ந்து அளித்து உண்பவனும், எந்தவித குற்றமுமில்லாத குணங்களையுடையவனும் கள், காமம் ஆகியவற்றை நீக்கிய தூய ஒழுக்கமும் உடையவரே இயமநெறிநிற்போர் ஆவர்.

## நியமம்

நியமம் என்பது நல்லதையே நினைத்து நல்லனவற்றைச் செய்து ஒழுகுதல் ஆகும்.

**தூய்மை அருள்ஊண் சுருக்கம் பொறை செவ்வை**
**வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை**
**காமம் களவு கொலையெனக் காண்பவை**
**நேமியீ ரைந்து நியமத்த னாமே.** திருமூலர்

தூய்மை, கருணை, அளவான (சுருங்கிய) உணவு, பொறுமை,

நேர்மை, வாய்மை, உறுதியான மனநிலை. காமம், கள
கொலையாகிய தீய குணங்களைத் தவிர்த்து நல்ல குணங்களை
மேற்கொண்டு ஒழுகுவது நியம நெறிகளாகும்.

## ஆசனம்

ஆசனம் என்பது இருக்கை என்பதாகும். யோகட பயில்வோர் எவ்வாறு அமர்ந்து பயிற்சியை மேற்கொள்ள வேண்டும் என்பதற்கான விளக்கம்.

ஓரணை அப்பதம் ஊருவின் மேலேறிட்டு
ஆர வலித்து [அ]தன் மேல் வைத்(து) அழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென(ல்) ஆகுமே திருமூலர்

ஒருபக்கம் அணைந்த காலைத் தொடையின் மேல் ஏறும்படி செய்து, மிக இழுத்து வலது பக்கத்து தொடையின் மேல் இடது காலையும் இடது பக்கத்து தொடையின் மேல் வலக்காலையும் வைத்து, அழகாகக் கைகளை மலர்த்தி தொடையின் மேல் வைத்து உலகம் புகழும் பத்மாசனத்தில் யோகசாதகன் அமர்ந்து யோகப்பயிற்சி மேற்கொள்ளலாம்.

இவ்வகையில் பத்மாசனமிட்டு உட்கார வேண்டிய இருக்கை தரையிலிருந்து அதிக உயரம் இல்லாமல் இருக்க வேண்டும். தரைமட்டத்திலிருந்து இரண்டு அல்லது நான்கு அங்குலம் உயரத்துக்கு மேல் இல்லாமல், சமமான பலகையினாலான இருக்கையின் மேல் தர்ப்பைப் பாய் விரித்து அதன் மேல் பருத்தி துணியை மடித்து விரித்துப் போட்டு உட்காருவதற்கு வசதியாக இருக்கையை (ஆசனம்) அமைத்துக் கொள்ள வேண்டும்.

யோகப் பயிற்சிக்குரிய இடம் சுத்தமாகவும் சத்தமில்லாத இடமாகவும் புழுக்கம் இல்லாததும் அதிகக் காற்று வீசாத இடமாகவும், வெய்யில் படாத இடமாகவும் உலர்ந்த சருகுகள் மற்றும் எறும்பு, பாம்பு புற்றுகள் இல்லாத இடமாகவும் பார்த்து யோகப் பயிற்சிக்குரிய இடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும்.

பத்மாசனத்தில் அமர்ந்து சாதகன் யோகப் பயிற்சியை ஆரம்பிக்குமுன் மன ஒருமைப்பாட்டுடன் மார்பு, தோள்களை நிமிர்த்தி முதுகு வளையாத நிலையில் தலையை நிமிர்த்திய வண்ணம் மூக்கு நுனியில் பார்வையை அசைவு இன்றி நிறுத்தி யோகப் பயிற்சியை ஆரம்பிக்க வேண்டும்.

## பிராணாயாமம்

பிராணா என்றால் சுவாசம், யாமம் என்றால் தீர்க்கமான

கால அளவுடன் கூடிய சுவாசப் பயிற்சியாகும். சுவாசத்தை உள்ளுக்கு இழுத்தல் (பூரகம்) சுவாசத்தை உள்ளுக்குள்ளாக நிறுத்துதல் (கும்பகம்) சுவாசத்தைவெளியிடுதல் (ரேசகம்) ஆகிய பயிற்சியாகும்.

**ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்**
**ஆறுதல் கும்பம் அறுபத்து நாலதில்**
**ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்**
**மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே.**

திருமூலர்

பதினாறு மாத்திரை கால அளவு இடதுபக்க நாசிதுவாரத்தில் காற்றை உள்ளுக்கிழுக்க வேண்டும் இதுவே பூரகமாம். அவ்வாறாக உள்ளுக்குக்கிழுத்த சுவாசத்தை அறுபத்தினான்கு மாத்திரை காலஅளவுக்கு உள்ளுக்குள் நிறுத்துவது கும்பகமாகும். அவ்வாறாக கும்பித்த சுவாசத்தை முப்பத்திரண்டு மாத்திரை கால அளவுக்கு வலதுபக்க நாசி துவாரத்தில் வெளியே விடுதல் ரேசகமாகும்.

ஒரு மாத்திரை என்பதின் கால அளவு கண்ணிமைப் பொழுது அல்லது ஒரு கைநொடிப்பொழுது என்று கணக்கில் கொள்ளவும்.

பிராணாயாமப் பயிற்சிகள் பலவகைப்படும். ஆகவே, பிராணாயாமம் பற்றி மேலும் சில விவரங்களை அறிவது நன்மை பயக்கும். பிராணாயாமம் என்பது விஞ்ஞான பூர்வமான சுவாசப் பயிற்சியாகும். உள்ளே இழுக்கும் உயிர் காற்றான பிராணவாயு எனப்படும் சுவாசத்தை உள்ளுக்கு நிறுத்துதல், வெளிவிடுதல் ஆகிய காற்று (சுவாச) நடமாட்டத்தை ஒரு குறிப்பிட்ட கால அளவுக்கு, ஒழுங்கு முறைப் படுத்தும் பயிற்சியே பிராணாயாமம் ஆகும்.

சுவாசத்தை உள்ளுக்கு இழுத்தல் பூரகம் என்றும். வெளியிடும் சுவாசத்தை ரேசகம் என்றும், உள்ளுக்கு நிறுத்தி வைக்கப் படும் சுவாசம் கும்பகம் என்றும் கூறப்பட்டுள்ளது.

பிராணாயாமம் பழகும் போது வயிறு காலியாக இருக்க வேண்டும். இடது நாசிதுவார சுவாசத்துக்கு இடகலை (சந்திரநாடி)என்றும், வலது நாசிதுவார சுவாசத்துக்கு பிங்கலை (சூரியநாடி) என்றும் கூறுவர். உள்ளுக்கு சுவாசத்தை நிறுத்தி (கும்பகம்) செய்யும் சமயம் நினைவினை இருகண் புருவமத்தியில் மூக்குத் தண்டின் உச்சியில் நிலைநிறுத்தும் போது அதற்குச் சுழு முனை நாடி (அக்கினிநாடி) பெயராகும்.

தெய்வ சிந்தனையுடன் குருவை வணங்கிய பிறகுதான் யோகப்பயிற்சியை ஆரம்பிக்க வேண்டும்.

உடல் முழுவதையும் இயக்குவிக்கும் ஆற்றலுடைய பிராண வாயுவை கட்டுக்குள் கொண்டுவரும் பயிற்சியே பிராணாயாம மாகும். நாம் இயற்கையாக சுவாசிக்கும் காற்று முதலில் சுவாசப்பைகளில் தங்கி இயங்குகிறது. சுவாசப்பைக்கும் இருதயத்துக்கும் உள்ள தொடர்பு மூலம் இதயம் இரத்த ஓட்டத்தை இயக்குகிறது. இரத்த ஓட்டத்தால் மூளை இயங்கு கிறது.

மூளையுடன் தொடர்புடைய பல நாடிகளில் இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்ற மூன்று நாடிகள் யோகப்பயிற்சிக்கு மிக நெருங்கிய தொடர்புடைய நாடிகளாகும். சுழுமுனை, நாடியின் இயக்கம் எல்லோரையும் விட யோகசாதகனுக்கு மிகச் சிறப்பாக செயல்படுகிறது.

இடைகலை என்னும் நாடி வலதுகால் பெருவிரலிலிருந்து இடது நாசிதுவாரத்தைப் பற்றி நின்று முதுகுத்தண்டின் இடது பக்க துவாரத்தில் சஞ்சாரம் செய்யும்.

பிங்கலை என்னும்நாடி இடதுகால் பெருவிரலிலிருந்து வலது நாசி துவாரத்தைப் பற்றி நின்று முதுகுத்தண்டின் வலதுபக்க துவாரத்தில் சஞ்சாரம் செய்யும்.

சுழுமுனை என்னும் நாடியானது மூலாதாரத்திலிருந்து ஆரம்பித்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாக இருக்கும் முதுகுத்தண்டின் நடுதுவாரத்தில் உட்புறமாக சஞ்சாரம் செய்து மேல் நோக்கிச் சென்று இருபுருவ மத்தியிலுள்ள ஆக்ஞா பகுதியைப் பற்றி நிற்கும்.

நாம் சுவாசிக்கும் பிராணவாயு இடதுநாசி வழியாகச் செல்லும்போது இடைகலை (சந்திரநாடி) என்றும், வலதுநாசி வழியாகச் செல்லும் பிராண ஓட்டத்துக்கு பிங்கலை (சூரியநாடி) என்றும் பெயரிடப்பட்டுள்ளது. இடைகலை, பிங்கலை எனப் படும் இவ்விரு நாடிகளின் இயக்கங்களை அடக்கிப் பழகுவதன் மூலம் அலைபாயும் மனத்தை அடக்கிக் கட்டுக்குள் கொண்டுவர முடியும்.

இறைஉணர்வை நமது மனத்தில் பரிணமிக்கச் செய்யும் தாரகமந்திரமாக வேதங்கள் நமக்கு போதித்துள்ள இறை ஒலியே ''ஓம்'' என்னும் பிரணவமாகும். ''ஓம்'' என்னும் அம்மந்திரத்தின் பொருளுணர்ந்து, இறைநிலை தத்துவத்தை முழுமையாக மனத்திலிருத்திக் கொள்ள வேண்டும்.

''ஓம்''என்னும் மந்திரத்தை முதலில் பலமுறை மனத்தளவில் உயிர் ஆற்றலுடன் உச்சரித்துக் கொள்ள வேண்டும். அதன் பின்னர் பிராணாயாமப் பயிற்சியை அப்பியாசிக்க வேண்டும்.

பெருவிரலால் வலதுநாசியை அடைத்துக் கொண்டு நான்கு முறை 'ஓம்' என்னும் மந்திரத்தை மனத்தால் உச்சரிக்கும் கால அளவுக்கு (நான்கு வினாடி காலத்துக்கு) மெதுவாக இடது நாசி வழியாக பிராணனை (மூச்சை) உள்ளுக்கு இழுக்க (பூரகம்) வேண்டும்.

நான்கு வினாடி கால அளவுக்கு மூச்சை இடதுநாசி மூலம் உள்ளுக்கு இழுத்தவுடன் ஆட்காட்டி விரலை இடதுநாசி துவாரத்தின் மீதுவைத்து இருநாசி துவாரங்களையும் அடைத்துக் கொள்ள வேண்டும். ''ஓம்'' என்று பதினாறுமுறை மனத்தால் உச்சரிக்கும். கால அளவுக்கு (பதினாறு வினாடிகள்) மூச்சை உள்ளுக்கு நிறுத்தி (கும்பகம்) வைக்க வேண்டும்.

பிறகு வலது பக்க நாசியை அழுத்திக் கொண்டிருக்கும் பெரு விரலை எடுத்து விட்டு ''ஓம்'' என்று எட்டுமுறை மனத்தால் உச்சரிக்கும் கால அளவுக்கு(எட்டு வினாடிகள்)மிகவும் மெதுவாக உள்பக்கம் நிறுத்தி வைத்திருந்த மூச்சை வெளியே (ரேசகம்) விட வேண்டும்.

கும்பிக்கப்படும் சுவாசம் வெளியேற்றப்படும் (ரேசகம்) போது உஷ்ணம் மிகுந்திருக்கும். ஆகவே வெளியேற்றப்படும் (ரேசகம்) சுவாசத்தை உள்ளுக்கிழுக்கும் கால அளவுக்கு இரட்டிப்பு கால அளவினூடே வெளியேற்றுவது அவசியமாகும். கும்பிக்கப்பட்ட சுவாசம் உஷ்ண மிகுதியுடன் இருக்குமாதலால், சுவாசத்தை வெளியேற்றும் போது, சில நேரங்களில் மூளை நரம்புகள் பாதிக்கப்படலாம். ஆக்வே, ரேசக காலஅளவினை பூரக கால அளவுக்கு இருமடங்கு உயர்த்திப் பழகுவது சாலச் சிறந்தது.

உள்ளே நிறுத்தி (கும்பகம்) வைத்திருந்த சுவாசத்தை முழுவதுமாக வெளிப்படுத்தும் போது அடிவயிற்றை வலுவில் உள்ளுக்கு இழுத்து மூச்சை வெளியே விட்டால், சுவாசப் பையிலுள்ள காற்று முழுவதும் வெளிப்பட்டு விடும்.

இவ்வாறாக ஒருமுறை வலது நாசி வழியாக மூச்சை உள்ளுக்கு இழுத்து உள்ளே நிறுத்தி வைத்து, பிறகு இடது நாசி வழியாக வெளியே விட்டும், மறுமுறை இடது நாசி வழியாக

மூச்சை உள்ளுக்கு இழுத்து உள்ளே நிறுத்திப் பின்னர் வலது நாசி வழியாக வெளிவிடுதல் வேண்டும். இதுவே ஒரு சுற்று பிராணாயாமம் ஆகும்.

முதலில் ஒவ்வொரு நாசிக்கும் இரண்டுவீதம் பிராணாயாமங்கள் செய்து பழகவேண்டும். முதலில் அப்பியாசிக்கத் தொடங்கும் நான்கு பிராணாயாமங்கயைப் படிப்படியாக உயர்த்தி எட்டு முதல் பன்னிரண்டு பிராணாயாமங்கள் வரை உயர்த்திக் கொண்டு பழகலாம்.

பிராணாயாமப் பயிற்சிக்குரிய நேரங்கள் விடியற்காலை, நண்பகல், மாலை, இரவு ஆகிய நேரங்களில் அப்பியாசம் மேற்கொள்ளலாம்,

## பிரத்தியாகாரம்

புறத்தே செல்லும் மனத்தை உள்முகமாக நிறுத்திப் பழகுதலே பிரத்தியாகாரம் எனப்படும்.

**ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்**
**பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்**
**கரைத்துணர் வுன்னல் கரைதல்உள் நோக்கல்**
**பிரத்தியா காரப் பெருமைய தாமே.** திருமூலர்

சுழுமுனையில் மலத்தின் காரியமாகிய இருளால் உண்டாகும் அவஸ்தையை புருவ நடுவில் விளங்கும் ஜோதியினின்றும் பிரிந்துள்ள நிலைவேறுபாட்டினையும் ஒழித்து. உணர்வு மயமான ஒளியை நினைத்து உருகி மனத்தை ஒருமைப்படுத்திக் கொள்ளுதல் பிரத்தியாகாரப் பெருமையாகும்.

பிராணாயாமப் பயிற்சியிலிருந்து பிரத்தியாகாரப் படிக்கு உயரும்போது ஒரு பொருளைச் சார்ந்து நினைவு கூர்ந்து பூரக, ரேசகம் இல்லாமல் கும்பகம் செய்வித்தலும் ஒருவகைப் பிராணாயாமப் பயிற்சியே யாகும். இவ்வகையிலானப் பயிற்சியினால் சத்துவகுணம் மேலோங்கி பிரகாச வடிவமாகிறது.

அலைபாயும் மனத்தை ஒருமுகப்படுத்தி மனத்தை யோக சாதனைகளின், மேல் நிலைக்கு உயர்த்திக் கொள்வதே பிரத்தியாகாரமாகிறது

கும்பக நிலையில் மூச்சை உள்ளுக்கு நிறுத்தி சுழுமுனையில் தாரணை உணர்வினை (நிலைபாட்டினை) பயிற்சிக்குக் கொண்டு வருவதே பிரத்தியாகாரம்.

## தாரணை

தாரணை என்றால் நிலைபெறச் செய்தல் என்று
ாருளாகும். பிரத்யாகாரப் பயிற்சியால் கைவரப்பெறும்
னா திடத்தை நிலைபெறச் செய்து கொள்ளும் (முயற்சி
பிற்சி) தாரணையாகும்.

**அரித்த உடலைஐம் பூதத்தில் வைத்து**
**பொருத்தஐம் பூதஞ்கத் தாதியிற் போந்து**
**தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்**
**தரித்தது தாரணை தற்பரத் தோடே.** திருமூலர்

ஐம்பொறிகளால் அவதியுறும் உடலை, ஐம்பூதங்களில்
தஸ்பரிச ரூப ரச கந்தம் ஆகிய தன்மாத்திரைகளில் போகும்
யாக ஆய்ந்துணர்ந்த மனம் முதலிய அந்தகரணங்கள்
தத்தில் ஒடுங்க, (தத்துவங்கள் ஒடுங்கிய நிலையில்) ஆன்மா
றநிலையுடன் ஒன்றிணைந்த நிலையே தாரணையாகும்.

விரல்களைக் கொண்டு நாசியை அடைத்து பூரித்து கும்பகம்
ய்து ரேசிக்கும் பிராணாயாமப் பயிற்சிகளுக்கு மாறுபடும்.
ரணை, தியானம், சமாதி என்றநிலைகளுக்குரிய பயிற்சி
றகளை திடசித்தத்துடன் மேற்கொள்ள வேண்டும்.

'ஓம்' என்னும் மந்திரத்தை அடிவயிற்றை உள்ளுக்கிழுத்த
று ''ஹோ'' என்ற ஓசையை எழுப்பி சுவாசப்பை நிறைய
ற்றினை நிரப்பிக் கொண்டு,''ஹம்:' என்று அழுத்தமாகச்
ால்லி முடித்ததும் உடனடியாக உள்ளுக்கிழுத்த அடிவயிற்றை
லுக்கு விட்டு விடவேண்டும். அது சமயம் இருபக்கத்து
ாசப்பைகளிலும் காற்று முழுமையாகத்தேங்கி (கும்பக மாகி)
றுவிடும்.

அவ்வாறாக சுவாசப்பைகள் நிறைய காற்றினை இழுத்து
-க்கி கும்பிக்கச் செய்து கொண்டு மனத்தை ஒருமுகப்படுத்தி
த்தும் பயிற்சி தாரணையாகும்.

பன்னிரண்டு வினாடிகள் கால அளவுக்கு சுவாசத்தைக்
பிக்கப் பழகிக் கொள்ளும் பயிற்சி ஒரு தாரணை என்று
ாக்கிடப் படுகிறது. இதுவே ஒரு தாரணை எனப்படும்.

தாரணைப் பயிற்சியை இடைவெளி விட்டு விட்டு பழகிக்
ள்ளலாம். அதில் தவறேதும் இல்லை.

## தியானம்

இடைவெளி இல்லாது கும்பக நிலையில் பயிற்சியில்
படுவது தியானம் எனப்படும்.

நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்
(டு) உயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது சாயம் பயமில்லை தானே. —திருமூலர்

இரண்டுகண் பார்வையையும் நாசிகாக்கிரம் எனப்படும் இடகலை பிங்கலை சுழுமுனையாகிய அக்கினி, சூரியன், சந்திர நாடிகளின் இணைப்பு மையமான "மூன்று மண்டலத்தின் முட்டியதூண்" எனப்படும் மூக்குத்தண்டின் மேல் பகுதியான இரு கண்களுக் குமத்தியிலுள்ள புருவ நடுவில் (இருகண் பார்வையை) நிலை நிறுத்தி பிராணனை உள் முகமாக அடக்கி துன்பத்தைத் தரும்மன விருத்திகளை அடக்கி, யோக நித்திரைஎ னப்படும் தியான நிலையைப்பழகும் யோக சாதகருக்கு இவ்வுடல் எடுத்த தின் நற்பயன் கிடைக்கும். தியான சாதகர்களுக்கு பிரபஞ்சப் பிணைப்பினால் யாதொரு பயமும் (தீங்கும்) ஏற்படாது.

இடைவெளி இல்லாது மூச்சை அடக்கி தூங்காமல் தூங்கும் தூய நிலையே தியானம் ஆகும். ஒருமுகப் படுத்தப் பட்ட மனோ நிலைப் பயிற்சியான தாரணைப் பயிற்சிக்கு மேல்நிலையே தியானம் எனப்படும்.

ஒரு தாரணைப் பயிற்சிக்குரிய கால அளவான பன்னிரண்டு வினாடிகால அளவினைப் போல், பன்னிரு முறைக் கூட்டிக் கணக்கிட்டு நூற்றிநாற்பத்து நான்கு வினாடி கால அளவுக்கு (இரண்டரை நிமிடங்கள்) பிராணனை கும்பிக்கப் பழகிக் கொள்ள வேண்டும். இரண்டரைநிமிட தியானப் பயிற்சியே ஒரு தியானம் ஆகும். தொடர்ந்த தியானப் பயிற்சியில் ஈடுபடும் சாதகர் சமாதி நிலைப் பயிற்சிக்கு உயர் வடைய முடியும்.

தியானப் பயிற்சியாளர்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந் திரியங்கள், மனம் ஆகியவற்றைக் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும். புலன்களை வசியமாக்கி, புலன்களைத் தனது கட்டுக்குள் அடக்கிப் பழகிக் கொள்ளும் யோக சாதகருக்கு நல்ல எண்ணங்களும், தெய்வத்திருவருளும் கைக்கூடிவரும். அது சமயம் காமம் என்ற உடலியல் ஆற்றலை யோகப் பயிற்சிக்கு ஒரு துணையாக இருத்திக் கொண்டு விந்து விரய மாகாமல் சேமிக்கப்படும் போது, அது 'ஓஜஸ்' ஆக மாறிவிடுகிறது.

யோக சாதகரை தெய்வீகப் பிறவியாக்கி சித்தபுருஷனாக்கு வதும் இப்பேராற்றல் மிக்க 'ஓஜஸ்' சக்தியேயாகும். புலனடக்

கத்தால் கிடைக்கும் காம சக்தியின் (சேமிப்பின்) வளர்ச்சியே 'ஓஜஸ்' என்னும் பேராற்றலாகப் பரிணமிக்கிறது.

'ஓஜஸ்' என்னும் பேராற்றலைப் பெறும் யோக சாதகரான ஆணோ பெண்ணோ ஈர்ப்பு சக்தியுள்ள ஞான (சித்த) புருஷர்களாகி விடுகின்றனர். இந்நிலைக்கு உயர்ந்து விட்ட மகான்களின் சொல்லுக்கும், கண் அசைவுக்கும் நாடும் சமுதாயமும் கட்டுப் பட்டு நிற்கும்.

## சமாதி

சமாதிநிலை என்பது ஆன்ம (உயிர்) இயல், வித்து (அறிவு) இயல், சித்து (அரூப) இயல் ஆகிய மூன்று இயக்க நிலைகளிலும் ஒன்றி நிற்றலாகும். இந்நிலையை ஜீவபிரம்ம ஐக்கியம் என்றும் கூறலாம்.

**சமாதிய மாதியில் தான்சொல்லக் கேட்கிற**
**சமாதிய மாதியில் தான்எட்டுச் சித்தி**
**சமாதிய மாதியில் தங்கினோர்க்(கு) அன்றே**
**சமாதிய மாதி தலைப்படும் தானே** —திருமூலர்

இயமம், நியமம் முதலியவைகளைக் கடைப்பிடித்து சமாதி நிலை வரை செல்லும் முறையைச் சொல்லக் கேட்டால், இமயம் முதல் சமாதி வரையிலான அங்கங்களைத் தவறாது கை பிடித்தால், எட்டாவது நிலையான சமாதி நிலை கைகூடும். இவ்வெட்டுப் படிகளையும் நியதியாகச் செய்து வருபவர்களுக்கு அட்டாங்க யோகத்தின் எட்டாவது அங்கமான சமாதி நிலை கைகூடும்.

மனத்தை ஒருமுகப்படுத்தி தியானத்தில் லயித்து உயர்ந்து விட்ட சாதகர், தியான நிலைக்குரிய பயிற்சி காலமான இரண்டரை நிமிடங்களைப் போன்று பன்னிரண்டு முறைக்குரிய கால அளவான முப்பது நிமிடங்கள் பிராணனைக் கும்பிக்கச் செய்து பழகுவதே ஒரு சமாதி நிலை எனப்படும். இதையே ஆழ் நிலைத் தியானம் என்றும் கூறுவர். இதனை யோக சாதனையின் முடிந்த நிலை என்றும் கூறலாம்.

இடைவிடாத பயிற்சியின் காரணமாக ஒரு சமாதி நிலைக் குரிய முப்பது நிமிடகால அளவினை, மேலும் நீட்டித்துக் கும்பக நேரத்தை அதிகப்படுத்திக் கொள்ளலாம். இதுவே சமாதி நிலையின் விரிந்த நிலையாகும்.

சமாதி நிலையை யோக சூத்திரங்கள் அந்தரங்க யோகம் என்றும் கூறுகிறது. ஸ்தூல உடலின் விருத்திகளை ஒடுக்கி யோக

சாதனையின் மேல்படிபான சமாதி நிலைக்கு உயர்ந்து விட்ட வர்கள், சூட்சும உடலின் ஏழுநிலைகளான ஞானபூமிகளைப் பற்றித் தெளிந்தறிய முடிகிறது.

மெய் அறிவினால் அறியப்படும் மெய்யிலுள்ள ஏழுவகை யான ஞானபூமிகள் யாவை என்று யோக சூத்திரங்களில் கூறப் பட்டுள்ளது. அவைகள் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞா, சகஸ்ராரம் ஆகிய உடலின் அந்தர்முக நிலைகளே ஏழுவகையான ஞான பூமிகளாகும்.

முதுகெலும்புக்கு அடிப்பகுதியில் குதத்துக்கும் மூத்திரக் குழாய்க்கும் அருகேயுள்ள பகுதி மூலாதாரம எனப்படுகிறது மூலாதாரத்தில் முடங்கிக் கிடக்கும் குண்டலினி எனப்படு. ஆதாரசக்தியின் மீதுகும்பகம் செய்துள்ள காற்றின் அழுத்தத்தை பலம் கொண்டு வேகமாக கீழ் நோக்கி செலுத்தி குண்டலினி மீது மோதச் செய்ய வேண்டும்.

இவ்வாறாக உயிர்ப்பித்து எழுப்பப்படும் குண்டலினி சக்தி முதுகெலும்பின் நடுத்துவாரத்தின் மூலம் சுழுமுனை நாடியின் துணையுடன் மூலாதாரத்திலிருந்து மேல்நிலைக்கு எழுப்பி விட முடியும் என்ற திடமான நம்பிக்கையுடன் உழைக்க வேண்டும்.

மனவலிமையினால் கும்பிக்கப்படும் பிராணனை, பிரணவ ஓசை;லயத்துடன் 'ஹோ'— 'ஹம்' என்ற நினைப்புடன் கூடிய மூச்சு அழுத்தத்துடன் கீழ் நோக்கி உதைத்து குண்டலினி மீது நிகழ்த்தப்படும் தாக்குதலினால் குண்டலினியைக் காலால் (காற்று அழுத்தத்தினால்) எழுப்பும் உத்தியை அறிந்து பயில வேண்டும்.

தனது அப்பியாசத்தால் குண்டலினி சக்தி மேல் நோக்கிக் கிளப்பும், கிளம்புகிறது என்ற திடமான நம்பிக்கையுடன் ஒருங்கிணைந்த மனவலிமையைச் சாதகர் பிரயோகிக்க வேண்டும்.

கும்பகம் செய்யும் காற்றின் உந்துதல் சக்தியின் வலிமை யினால் மூலாதாரத்திலிருந்து எழும்பும் குண்டலினி சக்தி ஆக்ஞாவரையிலான அனைத்து நிலைகளிலும் சஞ்சாரம் செய்கிறது.

குதம் (மலவாய்) மூத்திரக்காய் இவற்றுக்கிடையே மூலாதாரத்தில் சுணங்கிச் சுருண்டிருக்கும் குண்டலினி என்ற ஆதாரசக்தி, அங்கிருந்து எழும்பியதும், அடுத்து மேலேயுள்ள

சுவாதிஷ்டானப் பகுதிக்குச் செல்கிறது. சுவாதிஷ்டானத்தின் இருப்பிடம் சிறுநீர்ப்பையின் அடியில் பிறப்புருப்பு (குய்யம்) துவங்கும் பகுதியை மையமாகக் கொண்டுள்ளது. குண்டலினி சக்தி சுவாதிஷ்டானத்தை எட்டும் போது காம இச்சைகள் அளவுக்கு அதிகமாகத் தலை தூக்கும். இத்தருணத்தில் இந்திரியக் கட்டுப்பாடு மிகவும் அவசியமாகிறது.

காற்றழுத்தப் பயிற்சி மூலம் மேலெழும் குண்டலினி சக்தி மீண்டும் (சில நேரங்களில்) கீழே இறங்கவும் செய்யும். அது சமயம் மனம் தளர்ச்சியுறாமல் கீழே இறங்கும் குண்டலினி சக்தியை மேலுக்கு எழுப்பும் முயற்சியில் சாதகர் தீவிரமாக ஈடுபட வேண்டும்.

சுவாச அழுத்தத்தால் (கும்பக வலிமையினால்) மேலே, எழும் குண்டலினி சக்தி ஆறாதாரங்களையும் கடந்து ஆக்ஞா பகுதியைப் போய்ச் சேரும் வரை மிகவும் விழிப்புடன் பல ஆண்டுகள் கடினமாக உழைக்க வேண்டும்.

சுவாதிஷ்டான நிலையிலிருந்து மேலெழும் குண்டலினி சக்தி மணிபூரக நிலையை அடைகிறது. மணிபூரக மையத்தின் இருப்பிடம் தொப்புள் பகுதியாகும். குண்டலினி சக்தி மணி பூரகத்தை அடையும் போது சாதகருக்கு புலன்களுக்கு அப்பாற் பட்ட உயிரியல் ஞானம் தெளிவுபடும்.

மணிபூரகத்திலிருந்து மேலெழும் குண்டலினி சக்தி அனாக தம் நிலையை அடைகிறது. அனாகதம் நிலையின் இருப்பிடம் இருதயப் பகுதியாகும், குண்டலினி சக்தி அனாகத நிலையை அடையும் போது, சாதகருக்கு மனத்தைப் பற்றிய ஞானம் கிட்டுகிறது. ஒருங்கிணைந்த திடமான மனநிலையும், எண் வகை ராக தோஷங்கள் (காமம், குரோதம். உலோபம், மோகம், மதம்), மாச்சரியம், கோபம், அகங்காரம்) நீங்கிய மனத் தெளிவுடனும், எண்ணங்கள் இல்லாத மனோய நிலையையும் சாதகர் பெறுகிறார்.

அனாகத நிலையிலிருந்து மேலெழும் குண்டலினி சக்தி விசுத்தி நிலையை அடைகிறது. விசுத்தியின் இருப்பிடம் நெஞ்சுக் குழியை (கண்டம்) மையமாகக் கொண்டுள்ளது. குண்டலினி சக்தி விசுத்தி நிலையை அடையும் சமயம், உடல் வலிமை குறையாத அளவுக்குப் பசிதாகம் நீங்குகிறது.

விசுத்தியிலிருந்து மேலெழும் குண்டலினி சக்தி ஆக்ஞா நிலையை அடைகிறது, ஆக்ஞாவின் இருப்பிடம் இரண்டு கண் புருவங்களின் மையப் (லலாடம்) பகுதியாகும். ஆக்ஞா

நிலையில் குண்டலினி சக்தி வந்தடையும் போது நெற்றிப் பொட்டில் தீப்பிரகாசம் போல் பிரகாசிக்கச் செய்யும். இந்நிலையில் ஜோதி ஸ்வரூபம் தோன்றுகிறது. சித்தபுருஷர் களின் காட்சி தென்படுகிறது.

ஆக்ஞா நிலைக்கு வந்து சேரும் குண்டலினி சக்தி சுழு முனையிலுள்ள 'பெனியல் கிளேன்ட்ஸ்' என்ற ஒரு துடிப்பு நாடியின் துணையுடன் ஆகஞாவிலிருந்து அதன் மேல் படியான கபாலத்தின் உச்சியில் (ஆகாயப் பெருவெளி)ஆயிரம் இதழ்களை யுடைய சகஸ்ராரக்கமலத்தில் குண்டலினி சக்தி ஐக்கியமாகிறது.

இவ்வகையில் சகஸ்ராரச் சித்திபெறும் யோகிக்கு சுயம்பிர காசமான புருஷார்த்தம் தன்னில் பிரதிபலிக்கிறது. அனைத்தி லும் தன்னை ஞான ஒளியில் ஆட்படுத்திக் கொண்டு, முக்காலத்தையும் கடந்த துரியாதீதம் எனப்படும் முக்தி நிலையான சமாதி நிலை கைவல்யமாகிறது.

விந்துவும் நாதமும் மேருவிம் ஓங்கிடில்
சந்தியிலான சமாதியிற் கூடிடும்
அந்தமி லாத அறிவின் அரும் பொருள்
சுந்தரச் சோதியும் தோன்றிடுந் தானே —திருமூலர்

விந்து எனப்படும் ஒளியும், நாதம் எனப்படும் ஒலியும் சிரசின் மேல் சகஸ்ரதளத்தில் மிகுந்து விளங்கும் போது அதாவது யோக சமாதியில் ஜீவன் நிலைத்திருக்கும் போது, இறுதியில் ஞான சொருபமாக சுந்தர (அழகிய) ஜோதி தரிசனமாகும். இந்நிலையே சமாதி நிலையின் இறுதி நிலையாகும்.

அஷ்டாங்க யோகம் எனப்படும் இராஜயோக சாரம் முடிவுற்றது.

# 5. பதஞ்சலி யோக சூத்திரம்

மெய்ஞான (உண்மை) அறிவு பெறுவதற்கு தர்க்கவாத அறிவினைக் கடந்து செல்ல வேண்டும். மெய் ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் அஞ்ஞானத்தையும் பகுத்துணர்ந்து ஆயந்து மேம்பாடு அடைவதே ஞானமார்க்கமாகும்.

மெய் ஞானிகள் மோன நிலையில்தான் ஆனந்தம் காண்பர். அறிவுக்குப் பொருந்தாத பேச்சு மற்றும் கர்மாக்களை பரமானந்த நிலையை அடைந்த ஞானிகளும் யோகிகளும் தவிர்த்து விடுவார்கள்.

'நான் குண்டலினி ஒளியைக் கண்டவன்' என்று தம்பட்டம் அடித்துக் கொள்ளும், போலியான யோக சாதகனின் பேச்சு களை நாம் புறக்கணித்து விடவேண்டும்.

''உணவு, இளைப்பாறுதல், எல்லாக் காரியங்களிலும் விடா முயற்சி, தூக்கம், விழிப்பு ஆகிய எல்லா விஷயங்களிலும் கட்டு திட்டங்களுடன் இருந்து தனது எண்ணங்களை பூரணமாகக் கட்டுப்படுத்தி ஆன்மாவைப் பற்றிய சிந்தனையில் நிலைபெற்றுப் பொருட்களின் மீதுள்ள ஆசையிலிருந்து விடுபட்டவன் எவனோ, அவனே யோக சாதனைக்கு ஏற்றவனாவான்'' என்று கீதையிலும் (அத் 6-சு-17 ,18) கூறப்பட்டுள்ளது.

யோக சாதகனுக்கு பயிற்சி நூலாகவும் யோக சாஸ்திரம் பற்றி அறிந்துகொள்ள வழிகாட்டியாகவும் உற்ற துணையாகவும் அமைந்துள்ளது பதஞ்சலி யோக சூத்திரம்.

மனம்—வாக்கு—காயம் ஆகிய மனிதனின் முப்பரிமாண வளர்ச்சிக்கேற்ப அரிய மூன்று நூல்களை பதஞ்சலி முனிவர் நமக்கு அளித்துள்ளார்கள்.

மனம்—அலைபாயும் மனத்தை ஒருமுகப்படுத்தும் யோகப் பயிற்சிக்குரிய சூத்திரங்களைக் கொண்டது பதஞ்சலி யோக சாஸ்திரம் என்ற நூலாகும்.

வாக்கு—மொழி இலக்கணமாக ''மகாபாஷ்யம்'' என்ற இலக்கண நூலையும் எழுதியுள்ளார்கள்.

காயம்—உடல் சம்பந்தப்பட்ட நோய்களுக்கு ஆயுர்வேத வைத்திய முறைகள் அடங்கிய 'சரகம்' எனப்படும் "ஆத்ரேய சம்ஹிதை" என்ற நூலையும் பதஞ்சலி முனிவர் நமக்கு வழங்கி யுள்ளார்கள்.

பதஞ்சலி முனிவரது யோக தத்துவங்கள் கபில முனிவரது சாங்கிய தத்துவத்தை ஆதாரமாகக் கொண்டது. ஆனால், சாங்கியத்தில் கடவுள் மறுப்பு உண்டு. மற்ற யோக நூல்களும் பதஞ்சலி யோக சாஸ்திரமும் கடவுள் உண்டு என்ற தத்து வத்தை ஒப்புக்கொள்கின்றன.

கபிலர் என்ற பெயரில் வடபுலத்தில் பல முனிவர்கள் வாழ்ந் துள்ளார்கள். தமிழ்ச் சங்க இலக்கியங்களில் வரும் கபிலருக்கும் சாங்கிய மார்க்கியான கபிலருக்கும் சம்பந்தமில்லை.

பதஞ்சலி யோக சூத்திரங்கள் நூற்றுத் தொன்னூற்று ஆறு ஆகும். இவைகள் நான்கு பாதங்(பாகம்)களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. அவைகள் முறையே சமாதிபாதம் (51) சாதனை (கிரியா) பாதம் (55) விபூதிபாதம் (56) கைவல்ய பாதம் (34) என்பவைகளாகும்.

## 1. சமாதிபாதம்

சுலோகம் 1. இனியோகம் என்பது பற்றி விளக்கப்படும்.

விளக்கம் - யோக சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள விவரங்கள் விளக்கப்படுகிறது.

2. சித்த விருத்திகளை ஒடுக்குவதே யோகம்.

(வி-ம்) அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை தேகத்தில் வியாபித்துக் கொண்டு, ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும் செயலாதிக்கம் செய்யும் புலனாகாத உட்கருவிகளாகும்.

மனம்—இதுவாயு (காற்று) அம்சமான படியால் மனம் தனது குணமாகிய நினைப்பு, மறப்பு என்னும் சங்கல்பவிகப்பங்களைச் செய்து கொண்டு காற்று போல் மனம் அலைந்து திரியும்.

புத்தி—இது அக்னியின் (நெருப்பு) அம்சமானது. இது ஒரு பொருளின் ரூபத்தை நிச்சயிக்கும். காரண காரியங்களையும், நல்லது கெட்டது என்பதையும் நிச்சயித்து உணர்ந்து அறியும்.

சித்தம்—இது அப்புவின் (நீர்) அம்சம். இது பஞ்சேந்திரியங் களுக்குச் சலனத்தை உண்டாக்கி சுகானுபவ உணர்வுகளை உண்டாக்கும். சித்தமும் மனமும் ஒரேவிதமான செயல்பாடுடை யவைகளேயாகும்.

அகங்காரம்—இது பிருத்வி (மண்) அம்சம். மாமிசப் பிண்டமாகிய ஸ்தூல உடலை 'நான்' 'எனது' என்று அபிமானிக்கும். இந்நான்கில் சித்தமும். மனமும் ஞானேந்திரியம் கர்மேந்திரியம் ஆகியவற்றின் துணையுடன் மனிதனை இன்ப சுகானுபவங்களில் ஈடுபடுத்தி விடுகிறது. அவ்வகையிலான சித்த விருத்திகளை ஒடுக்குவதே யோக சாதனைக்கு ஏற்றது. சித்தமும் மனமும் ஒன்றே என்பதால் இவைகள் அறிவுக்கும் புத்திக்கும் சில சமயங்களில் கட்டுப்படாமல் போய் விடுகிறது.

சித்தம் எனப்படும் மனோநிலைகளை ஐந்து வகைகளாகப் பூர்வ நூல்கள் வலியுறுத்தி கூறியுள்ளன. அவைகள் முறையே தொடர்பற்ற மனோநிலை (ஹிப்தம்) எண்ணங்கள் அற்ற மனோநிலை (முக்தம்) குழப்பமான மனோநிலை (விஷிப்தம்) ஒருங்கிணைந்த திடமான மனோநிலை (ஏகாக்ரம்) விருத்திகள் அற்ற சமாதிநிலை (நிருத்தம்) என்பவையாகும். இவ்வகையிலான சித்த (மன) விருத்திகளை ஒடுக்கிப் பழகுவது யோக சாதகனுக்கு அவசியமாகிறது.

3. (சித்த) விருத்திகளை அடக்கியவன் இருநிலைகளற்ற தூய புருஷனாக (மாசில்லாதவராக) இருக்கிறார்.

(வி-ம்) அலைபாயும் மனத்தை கட்டுக்குள் கொண்டு வந்து விட்டால், அவன் அவனாகவே (தூயவனாக) இருக்கிறான்.

4. (சித்த) விருத்திகளை விட்டொழிக்காதவன் சித்த விருத்திகளுடன் இணைந்து விடுகிறான்.

(வி-ம்) சித்த விருத்திகளை அடக்கி ஆளாதவன் கோபதாபங்களுடன் 'நான் துக்கப்படுகிறேன்' என்றும் நான் 'சந்தோஷமாக இருக்கிறேன்' என்று கூறும் குணதோஷங்களுடன் அமைதியற்றவனாகிறான்.

5. ஐந்து வகையான மன விருத்திகளில் சில துன்பம் தரக்கதக்கதாகவும் (கிலிஷ்டா) சில துன்பம் தராதவைகளாகவும் (அகிலிஷ்டா) இருக்கின்றன.

(வி-ம்) உலக இன்பங்களின் நுகர்ச்சிகளை நீக்கிவிட்டு நல்ல எண்ணங்களைக் கொண்டு தீய எண்ணங்களை ஒடுக்குவதற்குத் தூய எண்ணங்களை மேற்கொள்ள வேண்டும்.

6. (ஐவகை — மனவிருத்திகளாவன) உண்மை அறிவு (பிரமாணம்) பொய்அறிவு (விபர்யயம்) கற்பனை அறிவு (விகல்பம்) ஆழ்ந்த தூக்கம் (நித்திரை), ஞாபகம் (ஸ்மிருதி) என்பனவாகும்.

7. பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்பவை பிரமாணங்கள் (உண்மை அறிவு) எனப்படும்.

(வி-ம்) ஒன்றுக்கொன்று முரண்பாடுகள் (வேற்றுமைகள்) இல்லாத பொருளும் காட்சிகளும் பிரத்தியட்சம் எனப்படுகிறது.

ஒரு பொருளையோ காட்சியையோ ஒரு குறியீட்டின் (அடையாளத்தின்) அடிப்படையில் 'இன்னது இது' என்று இனம் கண்டு ஒருமித்த முடிவுக்கு வருவதும், 'அதைப் போலவே இதுவும் இருக்கிறது' என்று உணரப்படுவதும் அனுமானம் ஆகும்.

அனுபவரீதியாக ஆன்றோர் கண்டறிந்த உண்மைக் கூற்றினை வாய்மொழியாக எடுத்துரைத்து உணர்த்துவது ஆகமம் எனப்படும். இதனை ஆப்த வாக்கியம் என்றும் கூறுவர்.

8. விபரீத அறிவு உண்மை நிலைக்குப் பொருந்தாத பொய் அறிவு (விபர்யம்) ஆகும்.

(வி-ம்) தவறானகணிப்புடன் ஒரு பொருளை, மற்றொரு பொருளாகக் காணும் அறிவு 'விபர்யயம்' எனப்படுகிறது. 'காணுறு கயிற்றில்' அரவும், கட்டையில் கள்வனும், கிளிஞ் சலிடை வெள்ளியும் தோன்றுவது 'விபர்யயம்' எனப்படும் பொய் அறிவு ஆகும்.

9. பொருள் குற்றமுடையதும் சொற் குற்றமுடையதும் விகல்பமாகும் (கற்பனை அறிவு)

வி-ம் தரித்திரனைப் பார்த்து குபேரன் என்று கூறும் போது விளக்கமாகும். பொருளற்ற சொல் மயக்கம், விகல்பம் (கற்பனை அறிவு) ஆகிறது.

10. இல்லாமை என்னும் உணர்வைத் தரும் விருத்தியே தூக்கம் எனப்படும்.

வி-ம். விழிப்பில் கனவு காண முடியாது. தூக்கத்தின் விருத்தியே கனவு ஆகிறது. தூக்கம் கலைந்து எழுந்தபோது. 'தூங்கினோம்' என்ற நினைவு வருகிறது. இவ்வகையில் தூக்கத் தின் விருத்தி விழிப்பு (நினைவு) ஆகிறது.

11. அனுபவித்த விஷயங்களின் கோர்வை சித்தத்தில் பதிவாகி, மீண்டும் உணர்வுக்கு புலப்படுத்தும் அறிவு, நினைவு, ஞாபகம் (ஸ்மிருதி) ஆகும்.

வி-ம். நாம் செய்து முடித்த பல விஷயங்களும் பேசிய பல பேச்சுகளிலிருந்து ஒருசில விஷயங்களும், பேச்சுகளும் பசுமையாக

நினைவில் நிற்பதுண்டு. இதற்கு முன்னர் விளக்கப்பட்டுள்ள பிரமாணம், விபர்யயம், விகல்பம், தூக்கம் யாவும் நினைவுகளினால் (ஞாபகத்துக்கு) கொண்டு வரப்படுகிறது. இது உறக்கத்தில் விழிப்பு என்ற உத்தியுடன் கூடிய கனவு போன்றதேயாகும்.

12. பயிற்சியினாலும், பற்றற்ற மனோநிலையினாலும் அவற்றை (சித்த விருத்திகளை) ஒடுக்கலாம்.

வி-ம் சித்த விருத்திகளை ஒடுக்குவதற்கு சித்தத்தையே (மனம்) ஊன்றுகோளாக்கிக் கொள்ளவேண்டும். மனத்தின் (சித்தம்) பதிவுகள் நல்லவைகளாக மிகும்போது தீயபழக்க வழக்கங்கள் குறைந்துவிடும். பழக்கம் பண்புள்ளதாக இருப்பின் அவன் நல்லதையே நினைத்து நல்லதையே செய்பவனாக ஆகிறான். ஆகவே சித்தத்தின் விருத்தியான மனப்பதிவுகள் தூய்மையாக இருக்க வேண்டுமானால் அதற்குரிய வைராக்கிய பயிற்சியும் பற்றற்ற நிலையும் இருத்தல் வேண்டும்.

13. (சித்தவிருத்திகளை) அடக்கி வைக்கவேண்டுமென்ற முயற்சியே, பயிற்சி (அப்பியாசம்) எனப்படுகிறது.

வி-ம்- மனத்தை அலைபாய விடாமல் ஒருங்கிணைந்த திடமான மனோநிலையை(ஏகாக்ரம்) அடைவதற்கான பயிற்சியே முயற்சியாகும்.

14. நீண்ட காலத்துக்குச் சிரத்தையுடன் மேற்கொள்ளப்படும் முயற்சியினாலேயே பயிற்சி திடமாக நிலைபெறும்.

வி-ம்- உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து. குறள்596

உயர்வானவற்றையே எப்பொழுதும் நினைத்து முயலுதல் வேண்டும். அவை தவறிப் போனாலும் அந்த எண்ணத்தை கைவிடக்கூடாது.

15. பார்த்ததும் படிக்கக் கேட்டதுமான விஷயக் கவர்ச்சிகளிலுள்ள புலனுணர்ச்சிப் பற்றுதலை விட்டு விடுவதே வைராக்கிய சிந்தனை (பற்றற்றநிலை) எனப்படும்.

வி-ம்- சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். குறள்359

ஒருவன் எல்லா பொருட்களுக்கும் சார்பாகிய மெய்ப் பொருளை உணர்ந்து, பற்று அற நடக்க வல்லவனானால், அவளைச் சாரக் கூடிய துன்பங்கள்அவனது உணர்வைக் கெடுத்து அவனை வந்து அடையமாட்டா.

16. நான் புருஷன் என்ற உண்மை இயல்பை ஞானத்தால் அறிந்து குணங்களிலும் பற்றுதல் இல்லாதிருக்க வேண்டும்.

வி-ம்- பிரகிருதியால் உணர்த்தப்படும் சத்வம், ரஜோ, தாமசம் ஆகிய மூவகை குணதோஷங்களினாலேயே உலகியலில் மூவகைப் பற்றுகளும்(பொருள்பற்று,புத்திரப்பற்று,உலகப்பற்று) தோன்றுகின்றன. இவ்வகையான பற்றுதல்களினால் ஞானம் (ஆன்மஅறிவு) மறைக்கப்படுகிறது. ஆகவே, பற்றின்மை ஒன்றினால் மட்டுமே ஆன்மஅறிவு பெற்று உலகியல் பற்றுதல் களில் இருந்து விலகி தூயபுருஷன் என்ற ஞானம் மேலோங்கு கிறது. யோகசாதகனின் குறிக்கோளான சமாதிநிலையை அடைவதே அவனதுஇலட்சியமாகும் என்று அடுத்த சூத்திரத்தில் உணர்த்தப்படுகிறது.

17. விதர்க்கம்(ஆய்வு) விசாரம்(தெளிவு) ஆனந்தம்(இன்பம்) சத்துவகுண (நிர்குண) அகங்காரம்(அஸ்மிதா) ஆகிய நான்கு நிலைகளுடன் கூடியது சம்பிரஞ்ஞாத சமாதி.

வி-ம்-யோகியின் லட்சியம் சமாதிநிலை அடைவதே யாகும். சமாதி நிலைகள் சம்பிரஞ்ஞாத சமாதி, அசம்பிரஞ்ஞாத சமாதி என்று இருவகைப் படுத்தப்பட்டுள்ளது. ஒரு பொருளைச் சார்பாகக் கொண்ட உணர்வோடு கூடியது சம்பிரஞ்ஞாத சமாதி. இதில் நான்கு நிலைகள் உள்ளன.

ஒரு ஜடப்பொருளை மையமாக நிலை நிறுத்தி அதனையே தியானப் பொருளாகப் பாவித்து தியானிப்பது ஆய்வுநிலை (சவித்ர்க்கம்) சமாதி எனப்படும்.

எந்த ஒரு பொருளையும் நினைவில் நிறுத்தாது மனத்தளவில் ஒரு கற்பனையை உருவகப்படுத்திக் கொண்டு அதனையே தியானப் பொருளாக பாவித்துத் தியானிப்பது தெளிவுநிலை (சவிசாரம்) சமாதி எனப்படும்.

ஜடப்பொருள் நினைவோ அல்லது கற்பனை நினைவுகளோ இல்லாது தியானநிலையை உருவகப்(மையம்)படுத்திக் கொண்டு இன்பநிலையுடன் தியானிப்பது ஆனந்தசமாதி எனப்படும்.

ஆத்மாவுடன் ஐக்கியமாகி தியானிக்கும் உயர்நிலை தியானம் அஸ்மிதா (சத்துவ(நிர்)குண) சமாதியாகும்.

18. அனைத்துச் சித்த விருத்திகளையும் திட வைராக்கியத்துடன் நீக்கிவிட்டு,மனப்பதிவுகள் (சமஸ்காரம்) எதுவுமில்லாமல் திட சித்தத்துடன் கூடி நிற்பது அசம்பிரஞ்ஞாத சமாதி.

வி-ம்-பூரண முக்தியை அளிக்க வல்லது இந்த அசம்பிரஞ்ஞாத சமாதி நிலையேயாகும். சித்த விருத்திகள் எதுவும் இல்லாமல், தனக்கும் சித்த விருத்திகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்ற தூயநினைவுடன், மேலே அடையத்தக்கது எதுவும் இல்லை என்ற முக்திநிலையை அடைவதே அசம்பிரஞ்ஞாதசமாதியாகும்.

19. விதேஹர்களுக்கும், பிரகிருதிலயர்களுக்கும் அஞ்ஞானமாகிய (அவித்தை) உலக விஷயமே கிட்டுகிறது.

வி-ம்- அசம்பிரஞ்ஞாத சமாதிநிலை அடைய முடியாத விதேகஹர்களும், பிரகிருதிலயர்களும் அஞ்ஞானமாகிய உலக விஷயங்களையே அனுபவிக்கிறவர்களாக ஆகிறார்கள். விதேஹர்கள் என்றால் ஸ்தூலதிரேகம் இல்லாதவர்களான தேவர்கள் என்பதாகும். பிரகிருதியிலிருந்து தம்மை தனிமைப் படுத்திக்கொள்ளாது பிரகிருதியோடு இணைந்து இருப்பவர்கள் பிரகிருதிலயர் எனப்படுவார்கள்.

20. நம்பிக்கை, முயற்சி, நினைவுஆற்றல், மன ஒழுக்கம் விவேகம் இவற்றின் மூலமாகவும் வேறு சில சமாதிநிலைகளைப் பயின்று யோக சித்தி அடைகிறார்கள்.

21. தீவிர வைராக்கியத்துடன் சமாதி நிலையை அடைய முயல்வோர்க்குச் சமாதிநிலை கைவல்யமாகிறது.

22. மெதுவாகவும், நடுத்தரமாகவும், தீவிரமாகவும் யோக சாதனை செய்வதில் கிட்டும் சமாதி நிலைகளில் சில வேறுபாடு கள் உள.

23. தெய்வ சிந்தனையுடன் ஈசுவரனைச் சரணாகதி அடைவதனாலும் சமாதிநிலை விரைவில் கைகூடும்.

24. ஆசை, கவலை, கர்மபலன்கள் ஆகியவற்றால் பாதிக்கப் படாத மேன்மையானவரே ஈசுவரன்.

25. உயிரினங்களுக்கெல்லாம் வித்து (பீஜம்) போன்று அறிவின் எல்லையாக் இருப்பவன், எல்லாம் வல்ல இறைவனே! (ஈசுவரன்)

26. காலங்களையும் எல்லைகளையும் கடந்து எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளான இறைவனே குருவின் குருவாக இருக்கிறார்.

வி-ம்-உயிர்(ஆன்ம)இயலை மேன்மைப்படுத்த அறிவு(வித்து) இயல் தேவைப்படுகிறது. ஞானமும் அஞ்ஞானமும் ஜீவர் களிடத்தில் ஒன்றுசேர இருக்கிறது. அஞ்ஞானத்தை ஞான மாக்கிக் கொள்ள ஒருவனுக்கு ஒரு குரு தேவைப்படுகிறார். அந்த குருவுக்கு ஞானகுருவாக இருந்தவர்யார்? இவ்வாறாக குருவைப் பற்றி ஆய்வு செய்யும் போது குருவுக்கு குருவாக இருந்தவர், எல்லைகளுக்கும். காலத்துக்கும் அப்பாற்பட்ட பரம்பொருளாய் இருக்கும ஈசுவரனே யோகிகளின் பரம்பரைக்கு குருவின் குருவாக விளங்குகிறார்.

27. ''ஓம்'' என்பதே இறைவனின் ஒலிக்குறிப்பு. அதுவே பிரணவம். (தஸ்ய வாசக பிரணவ.)

வி-ம்-இறை உணர்வை நமது மனத்தில் பரிணமிக்கச் செய்யும் தாரக மந்திரமாக வேதங்கள் நமக்கு போதித்துள்ள இறை, ஒலியே ''ஓம்'' என்ற பிரணவமாகும்.

28. ''ஓம்'' என்ற பிரணவத்தை பலமுறைச் சொல்வதும் தியானமேயாகும்.

வி-ம்-துரியத்தில் நாதவடிவில் பிரணவத்தை தியானிப்பது நுண்ணோசை(சூக்குமை) ஆகும். வயிற்றை ஒடுக்கி சுழுத்தியில் பொருத்தி பிரணவத்தைதியானிப்பது நினைவோசை(பைசந்தி). பிரணவ ஒலியை வாய் மூலம் வெளிப்படுத்தாமல் கண்டத்தில் இருத்தி தியானிப்பது மிடற்றோசை (மத்திமை)யாகும். உதடு உண்ணாக்கு அசைவுகள் மூலம் பிரணவ ஒலியை வெளிப் படுத்துவது செவியோசை (வைகரி)யாகும்,

29. ஓங்காரத்தை ஜபிக்கும் போது தோன்றும் அதிர்வு களால் மனத்திடம் ஏற்படுவதோடு உடல் பாதிப்புகளும் நீங்கும்.

30. நோய், உண்மையில் நிலையாமை, சந்தேகம், நினைவு தடுமாற்றம், சோம்பல் புலன்விவகாரங்களில் பற்றுதல், எதிர் மறைப்பொருள் உணர்வு, (மதிமயக்கம்) தியானப்பயிற்சியில் தளர்வு, தூய சித்த விருத்திகளைத் தொடராமை ஆகிய ஒன்பதும் யோகத் தடைகளாகும்.

31. ஒருமுகப் படுத்தப்படாத மனத்தால் தூக்கம், மனக் குழப்பம், உடல் நடுக்கம், சீர்(ஒழுங்கு) இல்லாத சுவாசம் ஏற்படுகிறது.

வி-ம்-ஒருங்கிணைந்த மனமும், ஒழுங்கான சுவாசமும் இல்லை யென்றால் மனக்குழப்பம், துக்கம் உண்டாகிறது. மனஅமைதி கெடுகிறது.

32, (மேலே கூறிய) குறைகளுக்குப் பரிகாரம், ஒரே பொருளின் மீது (தத்துவத்தில்) மனத்தைப் பதிய வைத்து (தியானப்) பயிற்சி செய்யவேண்டும்.

வி-ம்-தியானப் பொருளையும், தத்துவத்தையும் மாற்றிக் கொண்டே இருந்தால், யோக சாதகன் மனத்தை ஒருமுகப் படுத்தி யோகப் பயிற்சியில் ஈடுபடமுடியாது.

33. சுகம், துக்கம், புண்யம், பாவம் செய்கிறவர்களிடம் முறையே நட்பு, கருணை, மகிழ்ச்சி, உதாசீனம் கொள்வதால் மனம் அமைதி அடைகிறது.

வி—ம் சுகமாக (இன்பமாக) இருப்பவனைப் பார்த்து அழுக்காறு (பொறாமை) கொள்ளாமல் நட்புடனும். துக்கத்தில் இருப்பவனிடம் கருணையுடனும், புண்ணியம் செய்பவனைப் பார்த்து மன மகிழ்ச்சி அடைந்தும், பாவம் செய்பவனை உதாசீனம் (அலட்சியம்) செய்து விட வேண்டும்.

34. உயிர்க் காற்றாகிய பிராணனை வெளிவிடுவதாலும், அடக்குவதாலும் (மனம் அமைதியடையும்)

வி-ம. பிராணயாமாப் பயிற்சியான பூரக (உள்ளுக்கு சுவாசத்தை இழுத்தல்) ரேரக (சுவாசத்தை வெளியே விடுதல்) கும்பகப் (சுவாசத்தை உள்ளுக்கு நிறுத்தி வைத்தல்) பயிற்சி யினால் மனம் அமைதி அடையும்.

35. தியானத்தின் போது உணரப்படும் அனுபவ விஷயங் களால் மனம் உறுதியாக நிலை நிறுத்தப் படுகிறது.

வி-ம். தாரணைப் பயிற்சியின் போதே இவ்வகையிலான புலன் உணர்ச்சிகள் கிரகிக்கப் படுகிறது. மூக்கின் நுனியில் மனத்தை நிறுத்திப் பழகினால் பலவித நறுமணங்களும், நாக்கின் அடியில் மனத்தை லயப்படுத்தினால் சில ஒலிகளைக் கேட்க முடியும். நாக்கின் நுனியில் மனத்தை நிறுத்தினால் அரிய பல ருசிகளை உணர முடியும், நாக்கின் நடுவில் மனதைக் குவித்தால் அவன் புறத்தில் ஒரு பொருளைத் தொடுவது போன்ற உணர்வும். மேல் அண்ணாக்கில் மனத்தைக் குவித்தால் அற்புதமான பொருள்களை சாதகன் காண ஆரம்பிப்பான் என்றும் யோக நூல்களில் கூறப்பட்டுள்ளது. அனுபவரீதியாக

இவ்வகையிலான புலன் உணர்ச்சிகளை யோக சாதகன் அனுபவிக்க நேர்வதை அடுத்து, தீவிரமாக யோகப் பயிற்சியில் ஆர்வம் கொள்வார்கள்.

36. துயரங்கள் எதுவுமில்லாத ஒளி மயமானப் (ஜோதியை) பொருளை தியானிப்பதாலும் இதனை அடையலாம்.

வி-ம். இதயத் தாமரையை (அனாகத சக்கரத்தை) சுழு முனை நாடி தொடுவது போன்ற நினைப்புடன் தியானிக்கும் போது உள் முகமாக இதயத்தாமரை விரிந்து ஜோதிஸ்வரூபமான ஒளி தோன்றுவதாகப் பாவித்து தியானத்தில் ஈடுபடலாம்.

37. பற்றுகள் இல்லாத சித்தத்தினால் (மனத்தால்) தியானம் செய்வதாலும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு குறள் 350

பற்றுகளை விட்டொழித்த சித்த புருஷர்களை (மகான்கள்) மனத்தில் நினைத்து நிலை பெறச் செய்தவண்ணம் தியானிப்ப தாலும் மனம் அமைதியடையும்.

38. ஆழ்ந்த நித்திரையில் காண நேரிடும் ஞானிகள், தேவர்கள் மற்றும் செவிமடுக்கப்படும் (கேட்டறியும்) ஞான வாக்கியங்களை மனத்தில் நிலை நிறுத்தி, தியானப் பொருள் களாகப் பாவித்தும் யோகப் பயிற்சி செய்யலாம்.

39. எது உகந்தது என்று சாதகன் தீர்மானிக்கிறானோ அந்த விதத்திலேயே தியானத்தைத் தொடரலாம்.

40. (இவ்வாறாக) தியானிக்கும் சாதகனுக்கு அணுமுதல் மிகப் பெரிய வஸ்து வரையிலான அனைத்தையும் தியானித்து வசப்படுத்த முடியும்.

41. சித்த விருத்திகள் அடக்கப்பட்டுள்ள நிலையில் தியானிக்கும் சாதகன் அறிவோன், அறியும் தன்மை, அறியப் படும் பொருள் (மனம், ஆன்மா, பார்வைக்குரிய (புறப்) பொருள்) ஆகியவற்றில் யாதேனும் ஒரு பொருளைத் தியானித்து ஆழ்நிலை தியானத்தைப் (சமாதி நிலை) பெறுகிறான்.

வி-ம். சித்தவிருத்திகள் என்பது பளிங்கு போன்ற மனம் எந்த பொருளின் மீது நாட்டம் கொள்கிறதோ அப்பொருளின் ஈாப்புச் சக்தியில் மனம் லயித்து விடுகிறது.

கண்ணாடியைச் சிகப்புநிற மலர் முன் வைத்தால் கண்ணாடி சிவப்பு நிறமாகவும், நீலமலர்முன் கண்ணாடியை வைத்தால் கண்ணாடி நீலநிறமாகவும் தோன்றுவது போல, மனம் (அறிவோன்) ஸ்தூலமாக உள்ளப் பொருளில், அறியப் படும் தன்மையால் அறியப்படும் பொருளின் சூட்சும நிலையை அறிய முற்படுகிறது. சூட்சும நிலைககும் மேலே அதி சூட்சும நிலை ஒன்று உள்ளது, என்ற உயர் நிலையை சாதகனுக்கு (அறிவோனுக்கு) அறியும் தன்மையை அளிக்கும் (ஆன்மா) அறியப்படும் பொருளின் உண்மை நிலையை உணர்த்திவிடும். அது சமயம் சாதகன் தியானிக்கப்படும் பொருளுடன் ஐக்கிய மாகி விடுகிறான். பளிங்கு போன்ற நிர்மலமான மனத்தையும் உண்மைப் பேரறிவையும் பெறுகிறான்.

ரோஜா மலரின் வாசனையில் மனம் லயிக்கும் போது மலரின் மணம் மகிழ்ச்சியளிக்கிறது. ரோஜா மலரைப் பார்க்கும் போது மலரின் ஸ்தூல வடிவம் தோன்றுகிறது. ரோஜா மலரின் சூட்சும அம்சமான வாசனை நினைவுக்கு வரும் போது மலரின் ஸ்தூல வடிவம் மறந்து விடுகிறது. புறப்பொருளின் உண்மை நிலை, அதன் ஸ்தூல வடிவம். அதன் சூட்சும வடிவமான வாசனை ஆகியவற்றில் யாதேனும் ஒன்றைத் தியானப் பொருளாக எடுத்துக் கொள்ளலாம்,

42. சொல், பொருள், அறிவு இம் மூன்றும் கலந்துள்ள நிலை கேள்விக்குரியது எனப்படும் (சவிதர்க்க) சமாதி.

வி-ம். ஒரு பொருளைப் பற்றிய பெயர். அப்பெயர் கொண்ட பொருளின் தன்மை, அந்தப் பொருளின் பெயரையும் அந்தப் பொருளின் தன்மையையும் அறியும் அறிவு இம்மூன்று நிலைப்படிகளே (சவி தர்க்கம் தர்க்க) வாதமாக (விடையறியும் வினாவாக) கருதப்படுகிறது.

43. நினைவு (மனம்) தூய்மையாகும் போது, தியானப் பொருளின் ஸ்தூல சூட்சும நிலைகளுக்கு மேலான அதி சூட்சும நிலை புத்திக்குப் புலனாகும் நிலையே நிர்விதர்க்க சமாதி ஆகும்.

வி-ம். குணபேதங்கள் அற்றதும், விருத்திகள் அற்றதுமான நினைவு (மனம்) தூய்மையாக விளங்கும் போது தியானப் பொருளின் அதிசூட்சுமமான நிலை மனத்தில் பதிவாகிறது: அது சமயம் தர்க்கவாதங்கள் இல்லாத தியான நிலை கை கூடுகிறது, இதுவே நிர்விதர்க்க சமாதி,

44. நுட்பமான (சூட்சும) பொருட்களைப் பற்றி ஆய்வு நிலைகளுடன் கூடிய, (சவிச்சார) சமாதி ஆய்வு நிலைகள் அற்ற (நிர்விச்சார) சமாதி பற்றி விளக்கப் படுகிறது.

45. நுண்பொருட்கள் (சூட்சுமப் பொருட்கள்) என்பது மூலப் பிரகிருதி வரையிலானது.

வி-ம். பரமாணுக்கள், ஐம்பூதங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய தூலப் பொருட்கள், சுவை, ஒளி, உணர்வு, ஓசை, வாசனையாகிய ஐம்புலன்களின் தன்மாத்திரைகள், அந்தக் கரணங்கள், முக்குணங்கள், மூலப்பிரகிருதி ஆகியவைகளே நுண் (சூட்சும) பொருட்களாகும்.

46. இவைகள் வித்துக்களுடன் (ஸபீஜ) கூடிய சமாதி நிலைகள்.

வி-ம். பழைய கர்மாக்களின் வித்துக்களை நீக்க இயலாத இவ்வகையிலான சமாதி நிலைகளினால், முக்திகள் கிடைக்காது. ஆகவே வித்துக்களையுடைய சமாதி எனக் கூறப்பட்டுள்ளது.

47. நிர்விச்சார சமாதி கைகூடும் போது மனம் (சித்தம்) தெளிந்து ஒருமுகப்பட்டு திடமாகிறது.

வி-ம். ஆய்வுகள் அற்ற (நிர்விசசாரம்) சமாதி நிலையில் சித்தம் தெளிந்து ஆழ்நிலை தியானமாகிய சமாதி நிலை உறுதிபடுகிறது.

48. அறிவு அறிவின் துணைக் கொண்டு உண்மைப் பேரறிவு பெறுகிறது.

வி-ம் உண்மைப் பேரறிவு ஆகிய ஞானநிலையே 'ருதம்பரா' எனப்படுகிறது. இந்நிலையே 'பிரக்ஞாபூர்வக சமாதி'

49. சுருதி (காதால் கேள்விப்பட்டது) மற்றும் அனுமானத் தினால் அறியப் படுவதற்கும் மேலாக உயர்ந்த பொருள் (ஞானநிலை) உள்ளது.

வி-ம் புலன் பொறிகளால் உலக விஷயங்களைப் பார்த்து அறிந்து கொள்வதைப் போன்று உண்மைப் பொருள்களைப் பற்றிய தெளிவும், ஞானமும் பெறுவவற்கு தியானம் மற்றும் யோக சாதனைகளே ஆற்றலைத் தருகிறது.

50. இந்த சமாதி நிலை கைவரப் பெற்றதும் மற்ற சமஸ் (காரங்களைத் மனப்பதிவுகள், எண்ண அலைகள் தடுத்துவிடும்.)

வி-ம் ஒருமுகப்படுத்தப்பட்ட (ஏகாக்ரம்) மனநிலை கைவல்யமானால், சித்த விருத்திகள் யாவும் ஒடுங்கிவிடும்,

எவ்வித சமஸ்காரமும் (மனப்பதிவுகள், எண்ண அலைகள்) தடையாக இராது.

51. மற்ற எல்லா சமஸ்காரங்களும் ஒடுக்கப் படுவதால், வித்துக்கள் இல்லாத (நிர்பீஜ) சமாதி நிலை கைவல்யமாகிறது.

வி-ம் சித்தவிருத்திகள் இருக்கும் வரை ஆன்மஞானம் கிடைக்காது. வறுக்கப்பட்ட விதைகளிலிருந்து தாவரங்கள் எப்படி முளைப்பதில்லையோ அதே போன்று மனத்தையும், மனத்தின் பதிவுகளையும் (சமஸ்காரம்) அறவே நீக்கி சித்த விருத்திகளை ஒடுக்கி விட்ட பிறகு, விவேகத்தால் அறியப்படும் ஆன்ம அறிவின் துணை கொண்டு, பிறப்பும் இறப்புமில்லாத என்றும் எப்பொழுதும் உள்ளதும், அழிக்கப்பட முடியாததுமான ஆன்ம ஞானம் ஏற்படுகிறது. அந்நிலைக்குப் பிறகுதான் யோக சாதனுக்கு நிர்பீஜ சமாதி கைவல்யமாகிறது.

பதஞ்சலியோக சூத்திரம் சமாதிபாத சூத்திரங்கள் முடிவுற்றது.

## 2. சாதனைபாதம்

1. தவம், கல்வி, ஞானம், கர்ம (செயல்) பலன் ஆகிய வற்றை இறைவனுக்கு அர்ப்பணித்தல் கிரியா (கர்ம) யோகம் எனப்படும்.

2. சமாதிநிலை அடைவதற்கும் மனக் கிலேசங்கள் (துன்பங்கள்) நீங்குவதற்கும் கிரியா (கர்ம) யோகம் எனப்படும்.

3. அறியாமை (அவித்யா) அகங்காரம் (அஸ்மிதை) ராகம் (பற்றுகள்) வெறுப்பு (துவேஷம்) உயிர்பற்று (அபினிவேஷா) ஆகிய இவ்வைந்து துன்பங்கள் வாழ்வியல் தடைகளாகும்.

4. சித்த விருத்திகளால் தோன்றும் மனப்பதிவுகள் (பரஸுப்தம்)r யோகப் பயிற்சியால் ஒதுக்கப்பட்ட மனப் பதிவுகள் (தனு,) துக்கத்திலிருப்பவனிடம் பரிவு காட்டாமல் பரிகசிப்பது (விச்சின்னம்), போலியாகப் புகழ்ந்து பேசி பின்னால் ஒருவரைப் புறங்கூறுதல் (உதாரம்), ஆகிய பண்பற்ற செயல்கள் அறியாமை (அவித்தை) யாகும்.

5. நிலையில்லாதனவற்றை நிலையானவை எனவும் அசுத்தத்தை சுத்தம் எனவும், துக்கத்தை இன்பம் எனவும், ஆத்மாவல்லாததை ஆன்மா எனவும் எண்ணுவது அறியாமை (அவித்தை) ஆகும்.

6. பார்ப்போனும் (ஆன்மா) பார்க்க உதவும் கருவிகளா 'நானே பார்க்கிறேன், என்று அனுமானிக்கும் அந்தக்கரண களும் ஒன்றே எனக் கருதுவது அகங்காரம் (அஸ்மிதை) யாகும்

7. சுகத்தை அனுபவித்தலுக்கு ஏதுவான பொருள்மீ ஏற்படும் பிரியம் ஆசையாகும்,

8. துன்பம் தரத்தக்க பொருளின் மீதுள்ள வெறுப்பு துவேஷம்.

9. வாழ்வா? சாவா? என்ற நிலையில் வாழ்வுவேண்டு மென்பது (உயிர்பற்று) அபினிவேஷா எனப்படுகிறது.

10. சூட்சுமமான மனப்பதிவுகளையும் எண்ணஅலை களையும், அதற்கான காரணம் யாதென்று அறிந்து காரண நிலையிலேயே ஒடுக்கிவிடலாம்.

11. தியானத்தினால் கிலேசங்களின் (துன்பம்) ஸ்தூல வடிவங்களை அடக்க வேண்டும்.

12. கிலேசங்களின் (அச்சம், கவலை) மூலம் நிகழும் செயல்களை (கர்மவினைகளை) இப்பிறவியிலோ அடுத்த பிறவியிலோ அனுபவித்தே ஆகவேண்டும்.

13. கர்மவினைகளுக்கேற்ப வாழ்க்கை நிலை(பிறவி) ஆயுள், இன்ப நுகர்ச்சிகள் அமைகின்றன.

14. (இவைகள்) பாவபுண்ணியங்களைக் கொண்டு சுக துக்கம் என்னும் பலன்கள் காரியங்களாக வாய்க்கின்றன.

15. பரிணாமம், தாபம் (துக்கம்), சமஸ்காரம் (மனப் பதிவுகள்) ஆகிய குணவிருத்திகளை எல்லாம் துன்பம் என்று விவேகிகள் கருதுகிறார்கள்.

16. இது வரை வராத துன்பங்களையும் தவிர்த்து விட வேண்டும்.

வி-ம்.—கடந்த கால வினைப் பயன்களின் துன்பங்களை யும், நிகழ்கால வினைப் பயன்களின் துன்பங்களையும் அனுப வித்து விட்டோம். வருங்காலத்தில் துன்பங்கள் எதுவும் வந்து சாராதபடிக்குக் கர்மவினைகளின் விருத்திகளை தூய்மைப் படுத்தித் துன்பங்களைத் தவிர்த்து விடவேண்டும்.

என்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

குறள்—655

தான் செய்த செயல் என்ன தன்மையுடையது என்று நினைத்துப் பின்னர் வருத்தப்படத்தக்கவற்றைச் செய்யா

திருத்தல் வேண்டும். ஒருகால் அப்படிச் செய்து விட்டாலும் மீண்டும் அத்தகையவற்றைச் செய்யாதிருத்தல் நல்லது.

17. காண்பவனுக்கும் காட்சிப் பொருளுக்கும் உள்ள தொடர்புகளே துன்பத்துக்கு காரணம்.

18. பஞ்சபூதங்கள், கண்மேந்திரியங்கள். ஞானேந்திரியங்கள், தன்மாத்திரைகள் ஒருங்கிணைந்த கூட்டமைப்பே காட்சிக் குரியதாகவும், உலக சுகானுபவங்களைத் துறந்து முக்தியளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது 'திருச்சயம்' எனப்படும் பிரகிருதி.

19. அலிங்கம் எனப்படும் மூலப்பிரகிருதியும் லிங்கம் எனப்படும் புத்தியும் (மஹத்) அவிசேஷம் எனப்படும் முக்குணங்களின் காரண விளைவுகளாகி, விசேஷம் எனப்படும் காரியமாக வெளிப்படுகிறது.

வி-ம். ஞானேந்திரியங்களினால் மனிதனுக்கு சத்துவ குணம் ஓங்கும் போது அறிவு உண்டாகிறது. கன்மேந்திரியங்களினால் ரஜோகுணம் ஓங்கும் போது செயல்பாடுகளும். (கர்மாக்கள்), ஸ்தூல பூதங்களினால் தாமசகுணம் ஓங்கும் போது அறியாமை, சோம்பல், செயலற்ற நிலைகளிலும் மனிதன் இருக்கிறான்.

முக்குணங்களின் கூட்டாட்சியே பிரகிருதி எனப்படுகிறது. மூவகைக் குணங்களும் மாறுதலுக்கு (பரிணாமம்) உரியதேயாயினும், சமநிலையில் மூலப்பிரகிருதியாக இருக்கும்போது இவைகளை இனவாரியாகப் பிரித்து அடையாளம் காட்ட முடியாத நிலையில் (அவ்யக்தமாக) இருந்து, பல நிலைகளாக மூலப்பிரகிருதி எப்படி மாறுதல் அடைகிறது என்பதை இச்சுலோகம் தெளிவுபடுத்துகிறது.

அலிங்கம் என்றால் 'இது அதுதான்' என்று அடையாளமிட்டுச் சொல்ல முடியாததும், புலனாகாததும் ஆகும். ஆனால் உண்மைப் பொருளமாகிய மூலப்பிரகிருதியையே அலிங்கம் என்று கூறப்பட்டுள்ளது.

அலிங்கத்திலிருந்து வெளிப்படும் முதல் அங்கம் (மஹத்) புத்தியாகும். புத்தியின் விரிந்த நிலையே மனம், சித்தம், அகங்காரம் எனப்படும் அந்தக் கரணங்களாகும். இவ்வகையில் மாறுதலுக்குரிய நிலை லிங்கம் எனப்படும்.

அந்தக்கரணங்களும் தன்மாத்திரைகளும் உள்ளடங்கிய காரண நிலை, அவிசேஷம் எனப்படுகிறது.

ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன்மாத்திரைகளில் இருந்து வெளிப்படும் ஸ்தூல பூதங்களுமான காரிய நிலைகள் விசேஷம் எனப்படும்.

தன்மாத்திரைகள் எனப்படும் சூட்சுமப் பொருட்கள் காட்சிக் குரியதல்ல. ஆனால் தன்மாத்திரைகளின் விரிவாக்க மான ஸ்தூலபூதங்கள் மட்டுமே காட்சிக்கு உரியதாகுகிறது.

20. காண்போன் ஆன்ம (உயிர்) இயல் உடையவனே யாயினும். அவன் தூய்மையானவனாய் இருந்தாலும், அவனது வித்து (அறிவு) இயலுக்கேற்பவே எதையும் காண்போனா கிறான்.

21. காண்போனின் அனுபவத்திற்காகவே உலகியல் பொருட்கள் அமைந்திருக்கின்றன.

22. முக்தியடைந்த (குறிக்கோளையடைந்த) யோகிகளுக்கு உலகப் பொருட்கள் அழியக் கூடியதாகவே தோன்றுகிறது. ஆனால் அனேகர்களாக உள்ள முக்தியடையாதவர்களுக்கு உலகப் பொருட்கள் அழிவற்றதாக இருக்கிறது.

23. பிரகிருதி, புருஷன் இவ்விரண்டின் இணைப்பினால் (சம்போகம்) வெளிப்படும் சக்தியே 'நானே உடல், என்று அபிமானிக்கக் காரணமாகிறது.

24. அதற்குக் காரணம் அறியாமை.

25. அறியாமை நாசமடைந்து புத்தியினுடனான தொடர்பு அழிந்த (ஹானம்) நிலையே புருஷனுக்கு விடுதலை (கைவல்யம்ப் ஆகும்.

26. விவேகத்தை (பகுத்தறிவின் துணையால்) இடை விடாது பயிற்சி செய்வதே அறியாமையை (அவித்தை) ஒழி) பதற்கான வழி முறையாகும்.

வி-ம்—புருஷனுக்கும் பிரகிருதிக்கும் உள்ள வேறு பாட்டை விவேகத்தின் துணையால் பகுத்துணர்ந்தால் அறியாமை அகலும், புருஷன் பிரகிருதியில்லை. புருஷன் மனமும் அன்று, ஜடப் பொருளும் அன்று என்ற வேறு பாட்டினை அறியவேண்டும். தூய வடிவினன் புருஷன் என்று தெளிந்து அவித்தையை (அறியாமை) ஒழிக்கவேண்டும். அதனையே 'விவேக்கியாதி' என்று கூறப்பட்டுள்ளது.

27. (அவ்வகையிலான விவேகத்தினால்) அறியப்படும் அறிவு ஏழுவகையான உன்னத பூமிகளாக இருக்கிறது.

வி-ம்—ஜீவனின் வித்து (அறிவு) இயல்களின் ஏழுவகை யான நிலைகள் பின் வருமாறு.

1. நாம் அறியவேண்டியதை அறிந்துள்ளோம் என்று நிச்சயமாகும் சமயம் புலன் நுகர்வில் (பயனில்) மனம் திருப்தி யுறாமல், மேலும் தேடலில் அறிவைப் பயன் படுத்துதல் காரணமாக, உண்மை அறிவைப் பெற்று உண்மையைக் கண்டு விட்டோம் என்ற நிச்சய உணர்வுக்கு மேலும் தேடுதலை (அதிருப்தியை) நீக்கி விடுதல்.

2. அகத்திலும் புறத்திலும் துன்பம் விளைவிக்கக் கூடிய அனைத்து விவகாரங்களையும் விலக்கி விடுதல்.

3. பூரணமாக உண்மை அறிவு (ஞானம்) பெறுதல்.

4. உலகக் கடமைகள் எதுவுமில்லை என்ற நிச்சயத்துடன் கடமை ஆற்றலை முற்று பெறச் செய்தல் (பற்றற்ற நிலை)

5. மனப் போராட்டம் நீங்கி ஒருமித்த மனோநிலையுடன் நிற்றல்.

6. சித்தத்தின் (மனம்) செயல்களில் காரணகாரியங்களை நீக்கி, செயல்பாடுகள் அற்ற மனத்தோடு மேற் கொள்ளப்படும் வைராக்கிய நிலை.

7. மனத்தோடும், பிரபஞ்சத்தோடும் எந்தவிதமான தொடர்புகளும் இல்லாமல், ஆன்மாவோடு ஒன்றி நிலைத் திருக்கும் ஆனந்தமான பூரண அமைதி (சமாதி) நிலை.

இவைகளே ஜீவனின் வித்து (அறிவு) இயல்களின் ஏழுவகை யான நிலைகளாகும்.

28. யோகத்தின் அங்கங்களைப் பயின்று மன அழுக்குகளை நீக்கினால், விவேகத்தால் ஞானப் பேரொளி கிட்டுகிறது.

29 இமயம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியா காரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டு நிலைப் படிகளைக் கொண்டது. அஷ்டாங்க யோகம்.

30. கொல்லாமை, உண்மை, திருடாமை, பிரம்மச்சரியம், தானம் ஏற்காமை ஆகிய ஐந்தும் இயமமாகும்.

31. (இயம நியதிகளை) இனம், காலம், இடம் சந்தர்ப்ப சூழ்நிலைகளினாலும் விட்டு விடாமல் தொடர்ந்து கடைப் பிடிக்கப்படுவது மகாவிரதம் எனப்படுகிறது.

32. அகத்தூய்மை, மகிழ்ச்சி, தவம், அறிவியல் நூல் (சாஸ்திரம்) கற்றல், இறைவழிபாடு ஆகிய ஐந்தும் நியமம் எனப்படும்.

33. (யோக சாதனைக்கு) எதிரான எண்ணங்களால் தடை ஏற்படும் சமயம். எதிர்மறையான நல்ல எண்ணங்களை மனத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

34, கொலை, பொய் ஆகியவற்றைச் செய்வதோ செய்யச் சொல்வதோ, நியாயப்படுத்துவதோ கூடாது. உலோபம் குரோதம், மோகம் ஆகியவையும் அவற்றின் வினைப்பயன் களால் ஏற்படும் துன்பங்களையும், எதிர்மறை எண்ணங்களை யும் நீக்கிவிட வேண்டும். அவ்வாறு நீக்கப்பட்ட செயல்களே 'பிரத்யட்ச பாவனைகள், எனப்படுகிறது.

35. கொல்லாமையில் (அகிம்சையில்) நிலை பெற்றவருக்கு எல்லாவித பகைமையும் நீங்கி விடும்.

36. சத்தியத்தில் (உண்மையில்) நிலைபெற்ற தனக்கும் மற்றவர்க்கும் வேண்டியவற்றைச் செயல்பாடுகள் (கிரியா) இல்லாமலேயே. செயற்பயனைப் பெறும் ஆற்றல் ஏற்படும்.

37. களவு செய்யாமையில் நிலைப் பெற்றிருக்கும் யோகிக்கு எல்லா விதமான செல்வங்களும் வந்து குவியும்.

வி-ம். ''அஸ்தேய ப்ரதிஷ்டாயாம் ஸர்வரத்னோ பஸ்தானம்'' என்ற இந்த சுலோகத்தில் ''களவு செய்யாயையில் (திருடாமை) நிலைப் பெற்றிருக்கும் யோகிக்கு எல்லா செல்வங் களும் வந்து சேரும்'' என்று அனைத்து விரிவுரையாளர்களும் விளக்கம் தந்துள்ளார்கள். இவ்வகையிலான கருத்து ஏற்புடைய தாக இல்லை. களவு நீக்காதவனை யோகி என்று எவ்வாறு கூற முடியும்? ''திருடாமையில் நிலை பெற்றவன்' என்ற வாக்கியத்துக்கு பதிலாக ''செல்வத்தை அலட்சியம் செய்பவன்'' என்று கருத்தில் கொள்ளலாம்.

38. பிரம்மச்சரியத்தில் நிலை பெற்றவர்க்கு வீர்ய (சக்தி) லாபம் கிடைக்கிறது.

39. தானம் ஏற்காத தன்மையால் முற்பிறவி நினைவு (அபரிக்ரஹம்) உண்டாகிறது.

வி-ம்—தானம் பெற்றால் தானம் கொடுத்தவனுக்குக் கடமைப் படவேண்டிய நிலை ஏற்படுகிறது. தானம் பெறாத நிலையில் மனம் தூய நிலையில் இருக்கிறது. அதனால்,

முற் பிறவியின் நினைவு (அபரிக்ரஹம்) பெறமுடிகிறது. அப்போது பிறப்பு இறப்பு பற்றிய ஞானம் மிகுந்து பற்றற்ற நிலை ஏற்படுகிறது.

40. உள்ளத்தாலும் உடலாலும் தூய்மை நிலை அடைந்தவன், தன் உடல் மீது வெறுப்பும் பிறர் உடலில் சேராமையும் ஏற்படுகிறது.

வி-ம்—உள்ளத் (அகம்) தூய்மையுடையவன் புற உடலை (திரேகத்தை) அழகு படுத்த விருப்பாது புறக்கணிப்பான். 'தான் உடல்' என்று எண்ணாமல், உடல் உணர்வைக் கடந்து நிற்பதே யோக லட்சணமாகும்.

41. மாசில்லாத மனத்துடனும், அதனால் ஏற்படும் மனத் தெளிவுடனும், புலன் பொறிகளை வசப்படுத்தி அலைபாயாத ஒருங்கிணைந்த மனத்துடன் இருப்பின் சத்வகுணம் வாய்க்கிறது.

42. போது மென்ற மனத்தால் எல்லையற்ற சந்தோஷமும், சுகமும் லாபமாக வந்தடைகிறது.

43. தவத்தின் வலிமையினால் உடல் தூய்மை, புலனடக்கம் கைகூடி மனம் தூய்மை பெற்று ஆற்றலைக் கொடுக்கிறது.

வி-ம். உடலுக்கும் புலன்களுக்கும் சித்திகளைத் தந்து, தவத்தால் அழுக்கைப் போக்கினால் தொலைவிலுள்ள காட்சிகளைக் காணல், தொலைவிலுள்ளலற்றின் ஓசையைக் கேட்டல் போன்ற அற்புத ஆற்றல்கள் (சித்திகள்) கிட்டுகின்றன.

44. மந்திர ஜெபத்தினால் இஷ்ட தேவதைகளின் தரிசனம் கிடைக்கிறது.

45. (கைவரப் பெற்ற சித்திகள்) அனைத்தையும் ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்வதால் சமாதி நிலை கிடைக்கிறது.

46. உறுதியாகவும் (ஸ்திரம்) சுகமாகவும் இருப்பது ஆசனம்.

வி-ம். சுகமாகவும் உறுதியாகவும் ஆசனம் (இருக்கை) இருந்தாலன்றி யோகப் பயிற்சிகளை அப்பியாசிக்க முடியாது.

47. மனச் சஞ்சலங்களைக் குறைத்துக் கொண்டு, எல்லையற்ற பரம்பொருளை தியானிப்பதால் ஆசனம் சுகமாகவும் உறுதியாகவும் அமைகிறது

48. ஆசனத்தில் வெற்றி பெறுவதால் இருமைகளாகிய (குளிர்—வெப்பம், இன்பம்—துன்பம் தடைகள் ஏற்படுவதில்லை.

49. உள்ளிழுக்கும் சுவாசம், வெளிவிடும் சுவாசம் இவற்றை ஒழுங்கு படுத்துவது பிராணாயாமம்.

வி-ம்—உள்ளுக்கிழுக்கும் சுவாசம் பூரகம் என்றும் வெளி விடும் சுவாசம் ரேசகம் என்றும் சொல்லப்படுகிறது.

50. உள்ளேயும் (பூரகம்) வெளியேயும் (ரேசகம்) சுவாசித்தும், அல்லது உள்ளுக்குள் அசைவற்றதாகவும் (கும்பகம்) சுவாசத்தை நிறுத்தியும், இடம், காலம், மாத் திரைகள் எனப்படும் கால அளவுக்குக் கட்டுப்படுத்தி பிராணா யாமம் பழகலாம்.

51. உள்ளும் வெளியிலுமாக உள்ள விஷயங்களைச் சார்ந்து பிராணனைப் பழகுவது நான்காவது வகைப் பிராணாயாமம் ஆகும்.

52. பிராணாயாமத்தால் சித்த ஒளியை மூடிக் கொண் டிருக்கும் திரைகள் விலகுகின்றன.

53. தாரணை பயிற்சிக்கு மனம் தகுதி (யோக்யதா) ஆகிறது.

54. இந்திரியங்களை அதன் நுகர்ச்சிப் பொருள்களிலிருந்து நீக்கி விட்டுச் சித்தத்தின் (மனத்தின்) இயற்கை நிலையோடு ஒன்றி நிற்றல் பிரத்யாகாரம்.

55. (பிரத்யாகாரத்தினால்) சிறந்த புலனடக்கம் கைக் கூடுகிறது.

பதஞ்சலியோக சூத்திரம் இரண்டாம் பகுதியான சாதனை பாதம் (கிரியாயோகம்) முடிவுற்றது.

## 3. விபூதிபாதம்

1. குறிப்பிட்ட ஏதாவது ஒரு பொருளின் மீது மனத்தை நிறுத்துவது தாரணையாகும்.

2. இடைவிடாத தாரணைப் பயிற்சியின் கால அளவினை நீட்டித்தால் தியானம் ஆகும்.

3. தியானிப்பதற்கு உருவகப்படுத்திக் கொள்ளும் வடிவத்தை மறந்து விட்டு அப்பொருளின் அருவ நிலையை மனத் திலிருத்தி தியானித்தல் சமாதி.

4. ஒரே விஷயத்தை மையமாகக் கொண்டு (தாரணை, தியானம், சமாதி) இம்மூன்று வகைகளிலும் (தனித்தனியே) பயிற்சி மேற்கொள்ளப்படுவது சம்யமம் எனப்படும்.

5. இதில் வெற்றிபெற்றால் அறிவொளியும் ஆற்றலும் கிடைக்கிறது.

6. இதனைப் படிப்படியாக பல நிலைகளில் பயிலவேண்டும்.

7. முன்னால் கூறப்பட்ட (இயமம், நியமம் ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம் ஆகியவற்றைவிட) இம்மூன்றும் (தாரணை, தியானம், சமாதி) அந்தரங்கமானவை.

8. அவைகள் வித்தில்லாத (நிர்பீஜ) சமாதிக்கு இவையும் புற அங்கங்களேயாகும். (பகிரங்கம்)

விளக்கம் - நிர்பீஜ (வித்தில்லாத) சமாதியாகிய நிர்விகல்ப சமாதி மிக உயர்ந்தது.

9. சித்தத்தின் (மனம்) குழப்பங்களைப் போக்க மன விருத்திகளை அடக்கிய பிறகு மனக்கட்டுப்பாடு நிலைபெறு கிறது. அந்நிலையிலான மன ஒடுக்கம் தடை (நிரோதம்) செய் யப்பட்ட வேறுபாடுகளாகும். (பரிணாமம்)

10. மனத்தை அடக்க மேற்கொண்ட முயற்சியால் மனம் (சித்தம்) ஒருங்கிணைந்த (திடமான) மனோநிலை அடைகிறது.

11. பல பொருள்களின் மீதுள்ள மனப்பதிவுகளும் (சமஸ்காரம்) ஒரே பொருளின் மீது மனம் நிற்றலுமாகிய இவ்விரு இயக்க நிலைகளும் நீக்கப்பட்ட சித்தத்தின் (மனம்) வேறுபாடான உயர்ந்த ஒருங்கிணைந்த மனநிலையே சித்தஸ்ய சமாதி எனப்படுகிறது.

12. கடந்ததையும், நிகழ்வதையும் சமமாகக் கருதும் மன நிலை வாய்த்து விட்டால் ஒரு முகப்படுத்தப்பட்ட (சித்தஸ்ய ஏகாக்ரத பரிணாம) மனோநிலை என்றாகிறது.

13. இதனால் தூல சூட்சும பூதங்களிலும் இந்திரியங் களிலும் உள்ள தர்மம், லட்சணம், அவஸ்தை ஆகிய முப்பரிணா மங்கள் விளக்கப்படுகின்றன.

விளக்கம் - களிமண்ணால் சுவர் எழுப்பி வீடு கட்டலாம். இது கால (தர்மம்) மாறுபாடு. களிமண்ணைக் கொண்டு மண் பாண்டம், செங்கல் செய்யலாம். இது உருவ (லட்சணம்) வேறு

பாடு. மழையில் களிமண் சுவர் இடிந்து விழுவது அவஸ்தை வேறுபாடு. இவ்வகையிலான நிலை வேறுபாடுகளே பரிணாமம் எனப்படுகிறது.

ஐம்புலன்களும் ஐம்பூதங்களுக்குரிய வாசனைகளை உணர கூடியவைகளாகும். மூக்கு மண்ணின் வாசனையையும், நாக்கு நீரின் சுவையையும், கண் நெருப்பினால் (வெளிச்சம்) உருவத்தையும், தோல் காற்றினால் உணர்வையும் (ஸ்பரிசம்) காது ஆகாயத்தால் சப்தங்களையும் உணரும் தன்மையுடையவை களாதலால் புலன்கள் ஞானேந்திரியங்களாகின்றன.

கண் - காட்சிக்குரிய பொருளைக் காண்பது உருவ வேறுபாடு. ''மானையும் மயிலையும் கண்டேன்'' எனக் கூறுவது கால வேறுபாடு. ''பூனை எலியைப் பிடித்துத் தின்றதைப் பார்த்தேன்'' என்பது அவஸ்தை வேறுபாடு.

இதே போன்று ஒவ்வொரு புலனும் அதனதன் நுகர்வுகளில் வடிவம், காலம், அவஸ்தை ஆகிய மாற்றங்களுடன் (பரிணாமங் களை) கூடியதாகவே இருக்கிறது.

14. முக்காலங்களிலும் (கடந்தது - நிகழ்வது - வருவது) இயங்கி அவ்வியக்கத்தால் நியதியாக (தர்மம்) ஏற்படும் மாற்றங் கள் தர்மியாகும்.

விளக்கம் - அன்றைய குழந்தை நேற்றைய வாலிபன் இன்றைய வயோதிகன் இதுவே தர்மபரிணாமம்.

15. பரிணாம வளர்ச்சியின் வித்தியாசங்களுக்கு காரணம் தொடர்ந்து வரும் வேறுபாடுகளே (பரிணாமம்) ஆகும்.

16. மூன்று வித பரிணாமங்களையும் 'சம்யமம்' செய்தால் கடந்த காலம் எதிர்காலம் பற்றிய உண்மைப் பேரறிவு (ஞானம்) உண்டாகும்.

விளக்கம் - எந்த ஒரு பொருளும் வடிவம், காலம், அவஸ்தை ஆகிய முப்பரிணாமங்களை உடையதேயாகும்.

நெருப்பைப் பார்க்கும் போதே நெருப்பு சுடும் என்ற நெருப்பின் சூட்சும குணத்தை உணர்வது போன்று, எந்த ஒரு பொருளைப் பார்க்கும்போதும் அதனுடைய அகக் கருத்துடன் (சூட்சும குணங்களுடன்) ஒன்று சேர்ந்து தெளிந்து அறியும் ஆய்வு நிலையே 'சம்யமம்' என்று சொல்லப்படுகிறது. இவ்வகையிலான ஆய்ந்தறியும் அறிவு (சம்யமம்) மூலம் ஒரு பொருளின் முக்கால பரிணாம வளர்ச்சியான வடிவம், காலம், அவஸ்தை ஆகிய வற்றை அறிந்து கொள்ளலாம்.

இந்த அறிவினால் (சம்யமம்) யோகி கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும் கணித்து அறியும் ஞானத்தைப் பெறுகிறார்' பிறரது அகத்தின் அழகை அவர்களது முகத்தில் கண்டுரைப்பதும் இவ்வகையில் தான் நிகழ்கிறது.

17. ஒரு சொல்லின் ஓசையிலிருந்து அதன் ஒலி, பொருள், ஞானம் மூன்றையும் பகுத்துணர்ந்தால் (சம்யமம் செய்தால்) எல்லா உயிரினங்களின் குரல் ஒலிகளை (மொழிகளை) அறியும் ஆற்றல் பெறலாம்.

விளக்கம்- 'முக்காலி' என்றதும் மூன்றுகால்களையுடைய ஒரு இருக்கை என்று புலனாகிறது.

குழந்தை தனது தாயை அம்மா என்று அழைக்கும் கனிவுடன் கூடிய குரலோசை, நோயாளி வலியினால் அவதியுறும் போது அம்மா என்று முணங்கி எழுப்பும் குரலோசை, எதிரியால் தாக்கப்படும் ஒருவன் அதிர்ந்து பயந்து அம்மா என்று எழுப்பும் குரலோசைகளில், அம்மா என்ற சொல்லிலிருந்து எழும் அதிர்வுகள் மூலம், நமது புலனுகர்ச்சியின் துணையால் நமது அறிவுக்கு நாம் செவிமடுக்கும் அம்மா என்ற குரலோசை யின் உண்மைப் பொருள் புலனாகிறது.

வேட்டைக்கு செல்பவர்களுடன் செல்லும் 'சிகாரி' எனப் படும் வழி காட்டிகள். காட்டிலுள்ள பறவைகள், மிருகங்கள் எழுப்பும் ஒலியைக் கூர்ந்து கவனித்துச் செவிமடுத்து அதன் பொருளை உணர்ந்து தெளிவுபடுத்துவது எவ்வாறு சாத்தியமா கிறதோ, அதேபோன்று அனைத்து உயிரினங்களின் குரலோசையி லிருந்து அந்த ஒலியின் உட்கருத்தை அறியும் ஞானத்தைப் பெறுவதும் சாத்தியமானதேயாகும்.

18. மனப்பதிவுகளை (சமஸ்காரம்) சரியாகப் புரிந்து கொண்டால் (சம்யமம் செய்தால்) முற்பிறவியைப் பற்றிய ஞானம் ஏற்படுகிறது.

19. பிறருடைய அங்க (சாமுத்ரிகா) லட்சணத்தை (சம்யமம்) ஆய்ந்தறிவதால் அவருடைய மனத்தைப் பற்றிய ஞானம் உண்டாகிறது.

20. அங்க லட்சணத்தை சம்யமம் செய்வதால் மட்டும் மனத்திலிருக்கும் ஆசாபாசங்களை அறிய முடியாது.

விளக்கம் - ஒருவரது அங்க அடையாளங்களை அறிந்து கொண்டு பின்னர் அவரது மனத்தை சம்யமம் (ஆய்வு) செய்து அவரது மனத்திலுள்ள ஆசாபாசங்களை அறிய வேண்டும்.

21. அந்தர் தானம் எனப்படும் பயிற்சி மூலம் ஒரு யோகி தனது உடலின் உருவத் தோற்றத்தை சம்யமம் செய்து, மற்றவா பார்வையிலிருந்து தனது உருவத்தைப் புலப்படாமல் செய்து மறைத்து விடமுடியும்.

22. (அந்தர் தானம் மூலம்) ஒரு யோகி தனது பேச்சு ஒலியையும் யாருக்கும் கேளாத படிக்கு மறைக்க முடியும்.

விளக்கம் - அந்தர் தானப் பயிற்சி மூலம் ஒரு யோகி தனது உருவம், பேச்சு, ஸ்பரிசம் ஆகியவற்றைச் சம்யமம் செய்து, தனது உருவத்தை பிறர் பார்க்க முடியாமலும், தனது பேச்சை பிறர் கேட்க முடியாமலும், தான் ஒருவரைத் தொடும்போது அந்த நபர் ஸ்பரிசத்தை உணர முடியாத படிக்கும் சித்துகள் செய்ய முடியும்.

23. கர்மத்தின் (செயல்கள்) விளைவுகள் உடனடியாகப் பலன் தரும் நிலையிலும், காலம் தாழ்ந்து பலன் தரும் நிலையிலும் இருவகைப்படும் கர்ம வினைப்பயனை சம்யமம் செய்வதன் மூலம் யோகி தனது மரண காலத்தை முன் கூட்டியே அறிகிறார்.

24. நட்பு, கருணை ஆகிய குணங்கள் மீது சம்யமம் செய்வதால் பல சிறப்பு இயல்புகள் உண்டாகின்றன.

விளக்கம் - வசிய சக்தியும், பகைவனும் தஞ்சம் அடைதல் போன்ற உயர்வான இயல்புகள் தோன்றும்.

25. பலமும் வலிமையும் வேண்டி சம்யமம் செய்தால் பலம் (வலிமை) மிகுதியாகிறது.

26. ஜோதி ஸ்வரூபத்தை (இதய ஒளி) சம்யமம் செய்தால் நுட்பமானவைகளும், அதிகதூரத்தில் மறைவிடங்களில் உள்ளது மான பொருள்களைப் பற்றி அறியும் அறிவுகிட்டுகிறது.

27. சூரியனை சம்யமம் செய்வதால் உலகியல் ஞானம் உண்டாகிறது.

28. சந்திரனை சம்யமம் செய்வதால் வானியல் அறிவு உண்டாகிறது.

29. துருவநட்சத்திரத்தை சம்யமம் செய்வதால் நட்சத்திரக் கூட்டங்களைப்பற்றிய அறிவு உண்டாகிறது.

30. தொப்புள் சக்கரத்தை சம்யமம் செய்வதால் உடல் அமைப்பு, உடலியக்கம், உயிரியல் அறிவு உண்டாகிறது.

31. தொண்டைக்குழி (கண்டம்) மீது சம்யமம் செய்தால் பசிதாகம் அடங்கும்.

32. கூர்மன் நாடிமீது சம்யமம் செய்தால் உடலும் மனமும் அசைவற்று இருக்கும்.

விளக்கம் "கூர்மநாட்யாம் ஸ்தைர்யம்" என்பது இந்த சுலோகத்தின் மூலம். இச்சுலோகத்தில் கூர்மநாடி என்று சொல்லப்பட்டுள்ளது. கூர்மன் என்பது நாடியல்ல வாயு வாகும் என்பது சித்தர் இலக்கியங்களின் கூற்று. கூர்மன் வாயுவின் துணையினால் கண்களைத் திறக்கவும் மூடவும் செய்கிறது.

33. உச்சந்தலையில் (சகஸ்ராரம்) தோன்றும் ஜோதியை சம்யமம் செய்தால் சித்தபுருஷர்களின் காட்சி கிட்டுகிறது.

34. பிரதிபா சக்தியால் யோகி அனைத்தையும் அறிகிறான்.

விளக்கம் : தூயவாழ்வினை மேற்கொள்பவர்க்குத் தானாக வெளிப்படும் பேறாற்றலே "பிரதிபா" என்று கூறப்படுகிறது இந்நிலையினர்க்கு அனைத்தையும் அறியும் அறிவும் ஆற்றலும் கைக்கூடுகிறது.

35. இருதயத்தைச் சம்யமம் செய்தால் மனத்தைப் பற்றிய அறிவு ஏற்படும்.

36. ஸத்வம் எனப்படும் பிரகிருதியும் புருஷனும் வேறு என்பதை பிரித்துணராத நிலை போகம் (சுக அனுபவம்) எனப்படும். பிரகிருதியின் (ஸத்வம்) செயல்கள் அனைத்தும் ஜீவர்களுக்காகவே இருக்கிறது. என்பதை அறிந்து தெளிந்து புருஷனைப் பற்றி சம்யமம் செய்தால் அவனைப்(புருஷன்)பற்றிய (ஞானம்) அறிவு உண்டாகிறது.

37. அந்த பிராதிமா (தூயவாழ்வியல்) அறிவினால் உயர் வானகேள்வி ஞானமும், ஸ்பரிசத்திலும் பார்வையிலும், சுவையிலும், நுகர்ச்சியிலும் உயர்ந்த சக்தியும் மேன்மையான அறிவும் கிட்டுகிறது.

38. இதுவரை கூறப்பட்டவை உலக வாழ்வியலில் சித்திகளாகக் கருதப்பட்டவையாகும். இச்சித்திகள் சமாதி நிலைக்குப் பெரிய இடையூறுகளாகும்.

39. சித்தத்தின் (மனம்) விருத்திகளான (பந்தம்) தொடர்புகள் செயலிழந்து விட்ட பிறகு யோகி மனவிருத்திகளுக்கு காரணமாக இருக்கும் தனது நாடிகளை (நரம்புகள்) சம்யமம் செய்வதன்மூலம் வேறொரு சரீரத்தில் புகுந்து (பரகாயப் பிரவேசம்) இயங்குகிறான்.

40. உதானவாயுவைக் கட்டுப்படுத்தி வெற்றிகண்டால் நீரின் மீதும். முள்ளின் மீதும் நடக்கமுடியும். அவர் விரும்பும் வரை மரணத்தைத் தள்ளிப் போடலாம்.

விளக்கம்— உடலின் மேல் பகுதியான தொண்டைக் குழியில் வியாபித்திருந்து உதானவாயு உணவு வகைகளை உள்ளுக்கு விழுங்கச் செய்யும். சுவாசப்பைகளின் இயக்கத்துக்கு உதானன் பெரிதும் உதவியாக இருக்கிறது. குரலோசை எழுப்பவும், தூங்கும் போது கண்கள், மூக்கு, வாய், செவி, சரீரத்தின் மேலிருக்கும் தோல் ஆகிய ஐந்து இந்திரியங்களை அஞ்ஞானம் என்னும் இருளில் அழுந்தச் செய்யும். இவ்வாயுவை அடக்கிக் கட்டுக்கு கொண்டுவரப் பழகிவிட்டால் உடல் லேசாக ஆகிவிடும்.

41. சமானவாயுவை வசப்படுத்துவதால் உயிராற்றலின் ஒளிக்கதிரை வெளிப்படுத்த முடியும்.

விளக்கம்— சமான வாயுவை வசப்படுத்தி சித்தி பெற்ற யோகி தான் விரும்பும் சமயம் அவரது உடலை (வெளிப் புறமாக) ஒளி வட்டத்தை வீசச் செய்ய முடியும்.

42. சுரேந்திரம் எனப்படும் செவிப்புலனைச் சம்யமம் செய் வதால் வெகு தொலைவில் பேசப்படும் பேச்சின் ஒலியை கேட்க முடியும்.

விளக்கம்— செவி (சுரேந்திரம்) ஆகாயத் தத்துவமாய் இருந்து ஒலியை கிரகிக்கும் ஆற்றலைப் பெற்றதாகும்.

43. பரவெளி தத்துவத்தை சம்யமம் செய்வதால் உடலுக்கும் ஆகாயத்துக்கும் உள்ள தொடர்பினால் உடல் பஞ்சு போன்று இலேசாகி ஆகாயத்தில் பறக்கும் ஆற்றல் கிடைக்கும்.

விளக்கம்—புவியின் ஈர்ப்புச் சக்திக்கு ஆட்படாமல், ஆகாயத்தில் உலவக் கூடிய சித்து (அருப)இயல் கைக்கூடும்.

44. உடலைச் சாராது உடலுக்கு வெளியேயுள்ள மனவிருத் திகளை சம்யமம் செய்தால் 'மகாவிதேகர்' எனப்படும் உடலைக் கடந்தநிலை ஏற்படும். அந்நிலையில் ஆன்ம ஒளியை மறைக்கும் அறியாமை அகன்றுவிடும்.

விளக்கம்—மனம் எங்கும் வியாபித்துள்ளது. 'நான்' என்று தனது உடலைமட்டும் கருதாமல்; 'நான்' என்பது எங்கும்

வியாபித்து உடலுக்கு வெளியேயும் இருப்பதாக சம்யமம் செய்தால் உடலைக் கடந்தநிலை எனப்படும். மகாவிதேகர் என்ற நிலையில் ஞானமறைவுகள் எதுவும் இல்லாமல் ஆன்ம ஒளியை மறைக்கும் அறியாமைகள் அகன்றுவிடும்.

**45.** ஐம்பூதங்களை ஸ்தூலம், ஸ்வரூபம், சூட்சுமம், உபயோகத்தன்மை, குணம் ஆகிய ஐவகைப் பிரிவுகளாகக் கருத்தில் கொண்டு சம்யமம் செய்தால் ஐம்பூதங்களையும் வெற்றிகொள்ள முடியும்.

விளக்கம்— மண்குடத்தை அதன் உருவில் பார்க்கும்போது (குடத்தின்) ஸ்தூல வடிவம் புலனாகிறது. அம்மண் குடத்தைச் செய்ய பயன்படுத்தப்பட்ட களிமண் ஸ்வரூபம் எனப்படுகிறது. களிமண்ணின் நுண்வடிவம் சூட்சும நிலையாகிறது. மண் குடத்தில் (அன்வயம்) சாதம் சமைக்கலாம், நீர் சேமித்து வைக்கலாம் என்பது அதன் உபயோகத்தன்மையாகிறது. மண் குடத்தின் குணம் கீழே விழுந்தால் உடைந்துவிடும் என்பதாகும். இவ்வகையில் ஐம்பூதங்களையும் ஸ்தூலம், ஸ்வரூபம், சூட்சுமம் உபயோகத்தன்மை, குணம் ஆகிய ஐவகைப் பிரிவுகளிலும் படிப்படியாக சம்யமம் செய்து வெற்றி கண்டால், ஐம்பூதங்களை வெற்றி கண்டு அதன் மீது ஆதிக்கம் செய்ய முடியும்.

**46.** (ஐம்பூதங்களையும் வெற்றி கண்டால்) அணிமா முதலான எண் வகைச் சித்திகளும், உடல் நலமும் (காய சம்பத்து) கைகூடும்.

விளக்கம்- எண்வகைச் சித்துக்களின் விவரம். அணிமா என்பது அணு போல் உடலைச் சிறுத்துக் கொள்ளுதல். மஹிமா என்பது மலையைப் போன்று பிரமாண்டமான உருவைப் பெறுதல். கரிமா என்பது மிகவும் கனமாக (பளு) ஆகுதல். இலகிமா என்பதுஇலேசாகிக் கொள்ளுதல். பிராப்தி என்பது அனைத்தையும் தனது ஆளுமைக்கு கொண்டு வருதல். வசித்வம் என்பது எல்லோரையும் வசப்படுத்துதல். பிரகாமியம் என்பது கூடு விட்டுக் கூடு பாய்தல். ஈசத்துவம் என்பது விரும்பியதைச் செய்து முடித்து அனுபவித்தல்.

**47.** அழகிய உருவமும் (ரூபலாவண்யம்) பலமும், உறுதி யான உடலும் காய சம்பத்து ஆகும்.

**48.** புலன் வழிப் புலனாகும் பொருட்களின் தன்மை, அகங்காரம், அதனைச் சார்ந்துள்ள முக்குணங்கள் அதன் மூலம் அனுபவமாகும் ஆன்ம (உயிர்) அறிவு. இவற்றின்மீது சம்யமம் செய்தால் (புலன்வழி) இந்திரிய சுகங்களை வெல்ல முடியும்.

விளக்கம் :

"ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலுங் கரி (குறள்-25)

ஐம்புலன்களின் ஆசைகளையும் அடக்கியவரின் பெருமைக்கு தேவர்களின் தலைவனாகிய இந்திரனே சான்று ஆவான்.

49. இதனால் (புலனடக்கத்தால்) உடலுக்கு மனோ வேகமும் (மனோஜவித்வம்) ஸ்தூல உடலினின்று தனித்து நின்று புலன் வழி செயல்களை செய்து முடிக்கும் ஆற்றலும், இயற்கை யைத் (பிரகிருதியின் மாறுதல்களை) தன் விருப்பப்படிக்கு மாற்றிக் கொள்ளும் சக்தியும் உண்டாகிறது.

50. சத்துவத்துக்கும் (பிரகிருதி) புருஷனுக்கும் உள்ள வேறு பாட்டினை அறியும் ஞானமுள்ளவர்க்கு சர்வமும் உணர்ந்த ஆற்றல் உண்டாகிறது.

விளக்கம் : எல்லாமும் உணர்ந்த ஞானம் உடைய தூய புருஷனது தீர்மானப்படிக்கு பிரகிருதி ஒத்துழைக்கிறது.

51. மேற்கண்ட ஆற்றலினால் கிடைக்கும் சித்திகளுடன் சார்ந்து நிற்காமல் அந்த தோஷ வித்துக்களை அழித்துவிட்டால் யோக சித்தி (கைவல்யம்) கிடைக்கிறது.

52. தேவர்களாலும், தேவதைகளினாலும் கிடைக்கும் இன்ப நுகர்வுகளில் ஆசை வயப்பட்டு கர்வமும், புகழ்ச்சியும் கொண்டால் மீண்டும் சம்சார பந்தம் ஏற்பட்டுவிடும் என்று யோக சாதகனுக்கு அச்சம் இருக்க வேண்டும்.

53. ஒருகணப் பொழுதின் (க்ஷணம்) மீதும் அந்த கணப் பொழுதின் முன்னும் பின்னும் உள்ள காலத்தின் மீதும் சம்யமம் செய்வதால் விவேக ஞானம் உண்டாகிறது.

54. இனம், அடையாளம், இடம் இவற்றால் வேறுபாடு காண முடியாதவற்றைக் கூட (மேலே கூறிய) சம்யமத்தால் கிடைக்கும் விவேக ஞானத்தால் அறிய முடியும்.

விளக்கம். ஆண் பெண் என்பது இரு வகையான இனம் ஆகும். ஒரு குறிப்பிட்ட ஆணையும் பெண்ணையும் அடையாளம் காட்டுவதற்குக் கருப்பன், சிவப்பாயி என்ற நிற பேதத்தை அடையாளமாகக் கொண்டு குறிப்பிடலாம். அல்லது கண்ணன், கண்ணம்மாள் என்ற இடுகுறிப் பெயரை அடையாளமாகக் கொண்டு குறிப்பிடலாம், எத்தனையோ கருப்பனும், சிவப்பாயி

யும், எத்தனையோ கண்ணனும், கண்ணம்மாளும் இருக்கும் போது இடுகுறிப் பெயர் என்ற அடையாளத்தால் மட்டும் குறிப்பிட்டவரை இனம் காண முடிவதில்லை. அது சமயங்களில் காட்டுப்பாக்கத்து கண்ணன் என்றும் கள்ளக்குறிச்சி கண்ணம்மாள் என்றும் இடத்தைக் குறித்து விளித்துவேண்டியவர் இவர்தான் என்று திடப்படுத்துவதற்குத் தேவையான அறிவே விவேகஞானம் எனப்படுகிறது.

அறியாமையினால் உடலை ஆன்மாவாகவும் ஆன்மாவை உடலாகவும் அறிகிறோம். புருஷன் தூய்மையானவன். உடலும் ஆன்மாவும் (மனமும்) சேர்க்கைப் பொருளேயாயினும் அதை ஒன்றுபடுத்திப் பேசுகிறோம். இந்த அறியாமையிலிருந்து விடுபட ஆன்ம இயலை இனம், அடையாளம், இடம் ஆகியவற்றால் பகுத்துணர்வதற்கு விவேக ஞானம் வேண்டும்.

ஆன்மா காட்சிப் பொருள் அல்ல. காட்சிப் பொருளாய் இல்லாத ஆன்மா காட்சிப் பொருளாகிய உடலை இருப்பிடமாகக் கொண்டுள்ளது.

ஆன்மாவும் உடலும் வெவ்வேறு என்ற இனப்பாகுபாட்டையும், ஆன்மா உடலையே இருப்பிடமாகக் கொண்டிருப்பதால் உடல் அடையாளமாகவும், அழியும் உடலிலிருந்து ஆன்மா பிரிதொரு இடமாற்றம் பெறுவதாலும், இதனையே இனமாகவும் அடையாளமாகவும், இடமாகவும் கருத்தில் கொண்டு, க்ஷண நேரம் என்ற கால அளவினை சம்யமமாகப் பழகி ஆன்ம (உயிர்) இயலையும் வித்து (அறிவு) இயலையும் சித்து (அரூப) இயலையும் விவேக ஞானத்தால் வெவ்வேறாகப் பிரித்து அறியப்படுகிறது.

55. ஒரு பொருளை முழுமையாக ஒரே சமயத்தில் அனைத்தையும் அறியும் தன்மை, வேறுபாடுகளுடன், கூடியதும் உள்ளது உள்ளபடியாக உள்ளதுமான ஒரு உண்மைப் பொருளாகிய பிரகிருதியை அறிவதற்குரிய விவேக ஞானம் என்ற உண்மைப் பேரறிவு யோகிக்கு ஒன்று சேர வாய்க்கிறது.

56. (அத்தகைய வாய்ப்பினால்) சத்துவத்துக்கும் (பிரகிருதி) புருஷனுக்கும் இடையே தூய்மை பரிணமிக்கும் போது யோகத்தின் இறுதி நிலையாகிய சமாதி கைவல்யமாகிறது.

பதஞ்சலி யோக சூத்திரம் மூன்றாவது பகுதியாகிய விபூதி பாதம் முடிவுற்றது.

# 4. கைவல்யபாதம்

1. பிறவி, மருந்துகள் (ஔஷதம்) மத்திரம், தவம், சமாதி இவற்றால் அற்புத சித்திகள் உண்டாகின்றன.

விளக்கம்—பிறக்கும் போதே ஒருசிலர் சித்திகளுடன் பிறக்கலாம். இவர்களை அவதார புருஷர் என்றும் கூறுவர். மருந்துகள் என்பது உடலை வருத்தும் நோய்களுக்கு பலரும் வைத்திய முறைகளைக் கொண்டது சித்த வைத்தியம் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும், இரசவாதம் எனப்படும் தங்கம் செய்யும், உபாயம், ஆயுளை விருத்தி செய்து கொள்ள 'காயகல்பம்' போன்ற மருந்துகளும் இவற்றுள் அடக்கமாகும். மந்திரம் என்பது சில தேவதைகளுக்குரிய பீஜ மந்திரங்கள் எனப்படும் சொற்கள் ஆகும். இவ்வகையான சில சொற்களுக்கு வலிமையுண்டு. அம்மந்திரச் சொற்களை திரும்பத்திரும்ப தொடர்ந்து உச்சரிப்பதன் மூலம் பலகாரிய சித்திகள் ஏற்படுவதுண்டு. தவம்-என்பது புலன்களை வென்று உயரிய மனப்பக்குவம் அடைதல்.

"வேண்டிய வேண்டியாங் செய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும் குறள்-265

"தவத்தினால் விரும்பியவற்றை விரும்பியபடியே அடைய முடிவதால், செய்யப் படுவதாகிய தவம் அறிவுடையோரால் இப்பிறப்பிலே முயலப்படும்."

சமாதி—இது யோக சாதனையின் உயர்ந்த நிலையாகும். தாரணை, தியானம் ஆகிய பயிற்சிக்குப் பிறகு தொடர்ந்து மேற்கொள்ளப்படும் யோக சாதனை சமாதி நிலையாகும். சமாதி என்பதே சித்தி நிலையாகும். ஆசாபாசங்களற்ற பரிசுத்தமானவர்களுக்கு மட்டுமே சமாதி நிலை கைவல்யமாகும்.

இக்கருத்துக் கேற்பவே இச்சுலோகத்தில் பிறவி, மருந்துகள் (இரசாயனம்) மந்திரம், தவம், சமாதி இவற்றால் அற்புத சித்திகள் உண்டாகின்றன என்று கூறப்பட்டுள்ளது.

2. உள்நிறைந்த பிரகிருதியின் இயற்கை தன்மைக்கு ஏற்ப உடல் மற்றோர் இனமாக மாறுதலை அடைகிறது.

விளக்கம்— உடல் ஒரு இனத்திலிருந்து மற்றோர் இனமாக மாறுவதற்குப் பிரகிருதியே காரணமாகிறது. மாற்று வடிவமும். மாற்றுப் பெயரும் கொண்டதாக உடலும் மாறுகிறது. இறப்பு மற்றும் அவஸ்தைகளுக்கு பிறகு இவ்வகையில் பரிணாம வளர்ச்சி எனப்படும் மறுபிறவிகள் உண்டாகின்றன.

3. நல்வினை தீயவினை மட்டும் இயற்கையின் (பிரகிருதியின்) மாறுதலுக்குக் காரணமில்லை. விவசாயி வாய்க்காலில் ஓடும் நீரை, மடைகளைத் திறந்து வயலுக்கு பாய்ச்சுவதைப் போன்று, இயற்கையால் (பிரகிருதியால்) பரிணாம வளர்ச்சிக்கு உண்டான தடைகள் நீக்கப்படுகிறது.

விளக்கம்- தீயவிளைவுகளை மடைகட்டி நிறுத்திவிட்டு நல்வினைகள் நீரோட்டம் போன்று மிகுதிபடும் போது பிரகிருதியால் நல்வினைப் பயனால் மனிதப் பிறவியும்; தீயவினைப் பயனால் மற்ற பலபிறவிகளும் சம்பவிக்கின்றன.

4. அகங்காரத்திலிருந்தே படைக்கப்பட்ட சித்தங்கள் (மனம்) வருகின்றன.

விளக்கம்—மனிதனின் மறுபக்கத்தில் அவனால் சிருஷ்டிக்கப் பட்ட பல மாறுபட்ட மனங்கள் உண்டு. அவைகளை படைக்கப் பட்ட மனங்கள்' (சித்தங்கள்) என்று கூறப்பட்டுள்ளது. அகங் காரத்தின் விரிந்த நிலையே படைக்கப்பட்ட (சிருஷ்டிக்கப்பட்ட) மனங்களாகும்- உடல்களுக்குரிய சித்தங்கள் (மனம்) அகங்கார திலிருந்து உண்டாகின்றன. அவ்வகையிலான உடல் தொகுதி களை ''காயவியூகங்கள்'' என்று கூறப்பட்டுள்ளது.

5. படைக்கப்பட்ட மனங்கள் பலவிதமாகச் செயல் பட்டாலும், யோகியின் மூலமனமே அவைகளை அடக்கி ஆள்கிறது.

விளக்கம்—படைக்கப்பட்ட மனங்கள் வேறுபட்ட நிலையில் வெவ்வேறு கர்மாக்களில் ஈடுபட்டிருந்தாலும், அவைகள் யாவும் ஒரே பிரகிருதியால் தோன்றியதே யாகும் என்பதை அறிந்த யோகி, பல மனங்களையும், பல உடல்களையும் படைத்துக் கொள்வார்.

6. தியானத்தால் பக்குவப்பட்ட மனம் ஆசைகள் அற்று இருப்பதால், அதுவே எல்லாவிதமான (படைக்கப்பட்ட) மனங் களிலும் சிறந்தது.

விளக்கம்—தியானம் செய்து சமாதிநிலை அடைந்த மனம் (சித்தம்) மிகவும் உயர்ந்தது. பிறவி, மருந்து, மந்திரம், ஆகியவற்றால் சித்தி பெற்றவர்களுக்கு ஆசாபாசங்கள் உண்டு. தியானம் செய்து சமாதி நிலைக்கு உயர்ந்த யோகி ஆசைகள் அற்ற மனத்துடன் இருக்கிறார். தியானம் செய்து சமாதி நிலை அடைந்த சித்தமே மிகவும் உயர்ந்தது. ஆசைகளும் கர்ம வாசனைகளும் நீங்காதது ஜட சமாதியர்கும்.

7. யோகிகளுக்குரிய கர்மாக்கள் வெண்ணிறமாகவோ கருநிறமாகவோ இருப்பதில்லை. ஆனால் மற்றவர்களுக்கு வெளுத்தும் கருத்தும், இரண்டும் கலந்ததுமான நிறங்களிலுமாக மூவகைளில் (கர்மாக்கள்) உள்ளது.

விளக்கம்—பூரணமான சமாதி நிலைக்கு உயர்ந்து விட்ட யோகிக்கு எந்த வித கர்மாவினாலும் (செயல்கள்) பாதிப்புகள் இல்லை. ஆனால் ஆசாபாசங்களுடன் உள்ள மனிதனிடம் வெளுப்பு (நற்செயல்) கருப்பு (தீயச்செயல்) நல்லதும் செட்டதும் கலந்த செயல்களாகவும் (கருப்பும் வெளுப்பும் கலந்தது) உள்ள மூவகைக் கர்மாக்களின் விளைவுகள் ஏற்படுகின்றன.

8. (நல்லவை, தீயவை, இரண்டும் கலந்தது) இந்த மூன்று வித கர்மாக்களில் இருந்து ஒவ்வொரு நிலைக்கும் பொருத்த மான ஆசைகள் வெளிப்பட்டுப் பயன் தரும். மற்றவை (பிற ஆசைகள்) காத்திருந்து பின்னர் செயல்படும்.

விளக்கம்—க்ர்மத்தை (ஆசைகளை) அடக்குவதற்கு சூழ் நிலைகளும் காரணமாக அமைவதுண்டு. திருடச் சென்றவன் காவற்காரன் உறக்கம் கொள்ளும் வரை திருடும் முயற்சியில் ஈடுபடுவதில்லை. சூழ்நிலை 'சாதகமாகும் வரை திருடன் திருட்டுத் தொழிலைத் தள்ளிப் போடுகிறான். ஆகவே ஒவ்வோர் ஆசையும் கர்மாவும் செயல்பட அதற்குரிய சூழ்நிலைக்காகக் காத்துக் கிடக்கிறது.

9. பிறவிகளின் இனப் பிரிவுகளாலும், இடம், (தேசம்) காலம் இவைகளாலும் தொடர்பு இல்லாதிருந்த போதிலும் நினைவும், மனப்பதிவுகளும் (சமஸ்காரம்) ஒன்றி இருப்பதால் ஆசைகள் எப்போதும் இருப்பது போலத் தோன்றுகின்றன.

விளக்கம்—பலவிதப் பிறவிகள் எடுத்திருந்தாலும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் பிறந்திருந்தாலும் தேவர்கள், மனிதர்கள், பிற உயிரினங்கள் யாவற்றுக்கும் ஆசாபாசங்கள் ஒரே மாதிரியாகவும், சங்கிலித் தொடர் போன்று இருப்பதில் மாற்றங்கள் எதுவுமில்லை.

அனைத்து உயிர்களுக்கும் பொதுவான தேவை உணவு, புணர்ச்சி, தூக்கம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு ஆசைகளும், கர்மவாசனையும் இடைவிடாத தொடர் நிகழ்ச்சி களாகின்றன. நினைவும் மனப்பதிவுகளும் ஒன்றாகவே இருக்கின்றன.

10. இன்ப உணர்வுகளினூடே எப்போதும் இருக்க வேண்டுமென்ற ஆசைகளுக்கு ஆரம்பம் இல்லாதது போல் இருக்கிறது.

விளக்கம்—மறதி என்று இருந்தால் தானே நினைவு வேண்டும். ஆசாபாசங்களும் அதன் விருத்திகளும் இல்லாமல் இருப்பதில்லை என்பதால் ஆசைக்கு ஆரம்பமே இல்லை என்று கூறப்பட்டுள்ளது.

11. பிறப்புக்கும், ஆயுளுக்கும், உலக விஷயங்கள் மீதுள்ள ஆசைக்கும் காரணமாக இருக்கும் மனக்கிலேசங்களை (அச்சம் கவலை, துன்பம், நோய், வருத்தம்) அழித்தால்தான், ஆசை என்பது இல்லாமல் போகும்.

12. இன்று காட்சிப் பொருட்களாக உள்ள பல்வேறு பொருட்கள் கடந்த காலத்திலும் இருந்தன. எதிர் காலத்திலும் இருக்கப் போகின்றன. ஆனால் அப்பொருட்கள் தனது இயல்பிலும், வடிவத்திலும், குணங்களிலும் பலவிதங் களாக இருக்கின்றன.

விளக்கம்—நிகழ்காலத்தில் இருப்பது கடந்த காலத்தில், இல்லாததிலிருந்து வரவில்லை. எதிர் காலத்தில் இருக்கப் போவது இப்போது காட்சிப் பொருளாக இல்லை என்றாலும் நிகழ்காலத்தில் இருப்பதிலிருந்து தான் எதிர்காலத்திலும் இருப்பதாக வரப்போகிறது. எதிர்காலத்தில் வெளிப்படப் போவது சூட்சும நிலையில் உள்ளன.

13. காட்சிக் குரியதாகவோ, சூட்சுமமாகவோ, இருப் பவையேயாயினும் முக்குணங்களின் இயல்பினையே தன்மை யாகக் கொண்டுள்ளன.

விளக்கம்—மூலப்பிரகிருதியில் முக்குணங்களாகிய ஸத்வம், ரஜோ, தமஸ் சமமாகவே இருக்கின்றன. மூலப்பிரகிருதியில் சக்தி (கர்மா) இணையும் போது ஜடத் (ஸ்தூல) தோற்றமாக பிரபஞ்சம் காட்சியாகிறது. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் கால நிகழ்ச்சிகள் இம்மூவகையான குணங்களின் விருத்திகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

14. அம்மாறுதல்களில் உள்ள (பரிணாமம்) ஒற்றுமையி லிருந்தே (காட்சிக்குரிய) பொருள்களிலும் ஒற்றுமை (வஸ்து தத்துவம்) இருக்கிறது.

விளக்கம்—எல்லாப் பொருள்களிலும் முக்குணங்கள் இருப்ப தால், பொருட்கள்யாவும் முக்குணங்கள் பரிணாமம் உடைய தாகவே இருக்கின்றன.

இது இன்னபொருள் என்றும், இன்னவகையால் இம் மாறுதலை அடைந்துள்ளது என்றும், இன்னவகையால் அம்மாறுதலை அடையக் கூடியது என்ற முக்குண பரிணாம ஒற்றுமை அனைத்துப் பொருட்களுக்கும் இருக்கின்றபடியால், இதனையே வஸ்துதத்துவம் என்று கூறப்பட்டுள்ளது. சுத்த தங்கத்துடன் சிறிதளவு செம்பு கலக்கப்பட்ட நிலையிலும் அது தங்கமாகவே திகழ்கிறது. அத்தங்கத்திலிருந்து ஒரு மோதிரம் செய்யும் போது மோதிரம் என்று பெயர் பெறு கிறது. எத்தனை குன்றிமணி எடையுடையது என்று அம் மோதிரத்தை எடைபோடும் போது மோதிரம் என்ற பெயர் மருவி இத்தனை குன்றிமணி எடை தங்கம் என்று உணர்த்தப் படுகிறது. இப்பரிணாம ஒற்றுமையே வஸ்து தத்துவமாகும்.

15. ஒரு பொருளைக் காண்போனின் பார்வைக்கும், காண் போனின் விருப்பத்துக்கும் (ஆசை) வேறுபாடு இருப்பதால் மனமும், பொருளைப் பற்றிய விஷய அறிவும் மாறுபாடுடைய தாக இயங்குகிறது.

விளக்கம்—இது பார்வைக்கும் (திருஷ்டி) உற்பத்திக்கும் (சிருஷ்டி) உள்ள தர்க்க வாதமாகும்.

16. காணப்படும் பொருள் (காண்போனின்) மனத்தைச் சார்ந்திருப்பதால், காணும் பொருளைப் பற்றிய விஷயஞானம் இல்லாதிருப்பின், அப்பொருள் சித்தத்துக்கு (மனம்) தெரியாத தாகவே இருக்கும்.

17. காணப்படும் பொருளின் தொடர்பை (சித்தம்) மனம் சார்ந்து இருப்பதால், அவைகள் சித்தத்திற்கு (மனத்துக்கு) அறியப்பட்டதாகவோ, அறியப்படாததாகவோ இருக்கும்.

18. சித்தத்தின் விருத்திகளை நன்கு அறிந்த தூய்மையான மாறுதலற்ற புருஷன், மன (சித்த) விருத்திகளை எப்போதும் அறிகிறான்.

19. மனம் அனுபவிக்கக் கூடியதாகிறபடியால் மனம் சுயம்பிரகாச ஒளி உடையதன்று.

20. மனோ நிலை இருமைகளை ஒரே சமயத்தில் அறிய முடியாததால் மனம் சுயம்பிரகாச முடையதன்று.

விளக்கம்—புறப் பொருளைக் காணும் பொழுது தன்னைக் காணும் திறன் மனத்துக்கு இல்லாமல் போய் விடுவதால் மனம் சுயம்பிரகாச முடையதன்று.

21. ஒரு மனத்தை (சித்தத்தை) அறிவதற்கு மற்றொரு மனம் வேண்டுமென்றால் அதற்கு முடிவு இல்லாமல் போய்விடும். ஞாபகக் குழப்பமே அதன் பயனாக மிஞ்சும்.

22. வித்து (அறிவு) இயலை அறிந்த புருஷன் மாறுபாடு இல்லாதவன். அவனுக்குச் சித்த விருத்திகளின் அநுபவம் ஏற்படுகிறது.

23. காண்போன் காணப்படும் பொருளோடு கூடியிருப்ப தால், மனம் (சித்தம்) எல்லாப் பொருள்களையும் அறியும் தன்மையானது சித்தத்துக்கு பிரமாணம் ஆகிறது.

24. மனம் (சித்தம்) எண்ணற்ற வாசனைகளுடன் (ஆசை களால்) பலவாறாக இருப்பினும், அது மற்றொன்றுக்காகவே (புருஷனுக்காகவே) செயல்படுகிறது. மறறொன்றின் (புருஷன்) சேர்க்கையினால் தான் சித்தம் (மனம்) செயல்படுகிறது.

விளக்கம்—மனம் (சித்தம்) புருஷனுக்காகவே அமைந் துள்ளது. புருஷனில்லையேல் சித்தம் செயலற்றதாகி விடும்.

25. மேற் கூறிய விவேகததால் மனம் புருஷன் இல்லை என்று புரிவதால் உடலை ஆன்மா என்று எண்ணிய நிலையும் ஒழிகிறது.

26. சித்தம் (மனம்) விவேகத்துடன் கைவல்யத்தை அடைகிறது.

விளக்கம்—நீண்ட கால யோகப் பயிற்சிக்குப் பிறகு சித்த (மன) விருத்திகளிலிருந்து விவேகத்தால் விடுபட்ட புருஷனுக்கு மனம் (சித்தம்) தானாகவே கைவல்யத்தை அடைகிறது.

27. விவேகத்துக்கு தடைகளாக உள்ள பழைய எண்ணப் பதிவுகள் (சமஸ்காரம்) எழுகின்றன.

28. அறியாமை (அவித்தை) அகங்காரம் ஆகியவற்றை அழிக்கும் முறைகளினாலேயே விவேகத்துக்கு தடைகளாக உள்ள பழைய எண்ணப் பதிவுகளையும் அழிக்கலாம்.

29. எல்லாவற்றையும் அறிகின்ற பற்றற்ற உயர் நிலை களையும் தியாகம் செய்பவர் தர்மமேக சமாதி நிலையை அடைகிறார்.

விளக்கம்—திருக்குறள் வான் சிறப்பு பகுதியில் கூறப் பட்டுள்ள.

**வான்நின்று உலகம் வழங்கி வருவதால்**
**தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று. —குறள் 11**

"மழைதவறாது பெய்வதால் இந்த உலகமும் உயிர்களும் வாழ்ந்து வருகின்றன. ஆகையால் அந்த மழை உயிர்களுக்குச் சாவாமருந்து (அமிழ்தம்) என்று சொல்லத்தக்கது." என்ற குறள் கருத்துக் கேற்ப, கருணைக் கொடையான மழையை வழங்கும் மேகத்தின் சிறப்பினைக் குறிக்கும் வகையில் விவேக ஞானத்தால் கைவரப் பெற்ற அனைத்துச் சித்திகளையும் தியாகம் செய்பவரை 'தர்மமேக சமாதி' நிலையை அடைந்தவர் என்று இச்சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது.

30. அதிலிருந்து (தர்மமேக சமாதியால்) துன்பங்களும் (கிலேசம்) செயல்களும் (கர்மா) நீங்கிவிடுகிறது.

31. அப்பொழுது அஞ்ஞானம் (ஆவரணம்) நீங்கிவிடுவதால், அறிவு பேரறிவு ஆகி அறிய வேண்டியது சிறியதாகி விடுகிறது.

32. அடைய வேண்டியதை அடைந்து விட்டதால், முக்குணங்களின் 'பரிணாமக்கிரமம்' (மாற்றங்கள் யாவும்) முற்றுப் பெறுகிறது.

33. கிரமம் (கணம்) என்ற ஒரு கால அளவின் முடிவில், தெளிவாக உணரப்படுவதும்; தொடர்ந்து வரும் ஒவ்வொரு கணங்களின் போதும் கால அளவினைச் சார்ந்து தொடர்ந்து அறியப்படுவதாகவும் இருக்கிறது.

விளக்கம்—எண்ண ஓட்டங்கள் கணம் தோறும் பலவித மாற்றங்களுடன் பலப் புதிய சிந்தனைகளாக உணரப்படுகிறது. இந்நிலைதான் கிரமம் எனப்படுகிறது. எங்கும் நிலைத்திருத்தல் என்ற தர்மமேக சமாதி நிலையை அடைந்த யோகி காலத்தை வசப்படுத்தி விடுவதால்; அறிவு பூரண நிலையில் காலவித்தியாசங்களுக்கு அப்பாற்பட்டு எல்லாக்காலமும் நிகழ்காலமாகி விடுகிறது.

34. எந்தவித குறிக்கோளும் இன்றி புருஷனின் முக்திக்குச் செய்ய வேண்டியது எதுவும் இல்லை என்ற எண்ணங்களும் நீங்கப் பெற்று குணங்களின் 'பரிணாமக்கிரமம்' (மாற்றங்கள்) ஒடுங்கி விடுவதும் கைவல்யம் ஆகும். புருஷன் தனது இயல்பான உண்மையில் நிலை பெறுதலும் கைவல்யம் (முக்தி) எனப்படும்.

பதஞ்சலியோக சூத்திரம் நான்காம் பகுதியாகிய கைவல்ய பாதம் முடிவுற்றது.

# 6. ஆத்மபோதம்

ஸ்ரீ ஆதிசங்கரர் அவதரித்த காலத்தில் புத்தமதத்தின் கொள்கைகள் தீவிரமாகப் பிரச்சாரம் செய்யப்பட்டு வந்தன.

பகுத்தறிவுக்கு ஒவ்வாத மதச்சடங்குகளுடன் இந்து மதத்தைக் கட்டுப்படுத்தி, மதக் கோட்பாடுகளுடன் ஒத்துவராதக் கொள்கைகளை, மதத்தின் பேரால் இந்துக்கள் அனுஷ்டித்து வந்ததையும் ஸ்ரீ ஆதிசங்கரர் மாற்றியமைக்க விரும்பினார்கள்.

அந்த கால கட்டத்தில் நாத்திகம் எனப்படும் கடவுள் மறுப்புக் கொள்கை புத்தமதத்துள் ஒரு பிரிவனரால் தீவிரப் பிரச்சாரம் செய்யப்பட்டு வந்தது. அந்த சூழ்நிலையில் அவதரித்த ஸ்ரீ ஆதிசங்கரர் பாரதம் முழுவதும் பல முறை கால் நடையாகப் பயணம் செய்து புத்தமதக் கொள்கைகளுக்கு மறுப்பு தெரிவித்து நாத்திகவாதத்தையும் கட்டுப்படுத்தினார்கள்.

கருத்துக்கு ஒவ்வாத பல திரிபுகளை (பேதம்) வேத விஷயங்களிலிருந்து ஸ்ரீ ஆதிசங்கரர் ஒதுக்கித் தள்ளி விட்டு ஏற்புடைய (அபேதம்) கருத்துக்களை தத்துவார்த்தமாக பேசியும் விவாதித்தும் மக்களிடையே போதித்தார்.

மக்களுக்குப் பரம்பொருள் தத்துவத்தை எடுத்துரைத்து ஜீவர்களை மேம்படுத்தும் ஒளிவிளக்காக விவேக ஞானத்தையும் ஆன்மீக விஷயங்களையும் வேதாந்தக் கருத்துக்களுடன் போதித்தார்.

ஸ்ரீ ஆதிசங்கரர் ஆத்மபோதம், தத்துவபோதம், விவேக சூடாமணி போன்ற பல நூல்கள் எழுதியுள்ளார். ஆன்ம விசாரணை அடங்கிய ஆத்மபோதம் என்ற நூலிலுள்ள அறுபத்தெட்டு சுலோகங்கள் அனைத்தையும் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

1. ஐம்புலன்களையும் அடக்கிப் பழகும் பயிற்சியால் பாவங்களையும் ஆசைகளையும் நீக்கி பற்றற்ற நிலையில்

தன்னைத்தானே தனது ஆத்மாவினால் அறிந்து முத்தியடைய விரும்புகிறவர்களுக்காக ஆத்மபோதம் என்னும் இந்நூல் எழுதப்படுகிறது.

2. சமையல் செய்வதற்கு உதவும் நெருப்புப் போன்று நேரடியான முத்திக்கு மற்ற சாதனங்களை (வழிமுறைகளை)விட ஆத்மஞானமே நேரடியான மார்கமாக அமைகிறது. ஆத்ம ஞானமில்லாது முத்தி சித்தியாகாது.

3. செய்கைகள் (சர்மா) ஒன்றுக்கொன்று விரோதம் இல்லையாதலால் எந்த ஒரு கர்மாவினாலும் (செயலாலும்) அறியாமை என்னும் (அஞ்ஞானம்) இருளை நீக்க முடியாது. ஆத்ம ஞானம் ஒன்றே அறியாமை இருளை அழிக்கிறது.

4. அஞ்ஞானம் காரணமாக ஆன்மா தனிமைப் பட்டுள்ளதைப் போன்று தோன்றுகிறது. ஒளிக்கதிர் வீசும் சூரியனை மறைந்திருக்கும் மேக மூட்டங்கள் கலைந்த பிறகு ஒளிப்பிழம் பாகப் பிரகாசிக்கும் சூரியனைப் போன்று அறியாமை என்னும் திரைகள் நீங்கிய பிறகு சுயம்பிரகாச முடையதாக ஆன்மா பிரகாசிக்கிறது.

5. கலங்கிய நீரைத் தெளிவடையச் செய்யும் தேத்தாங் கொட்டையின் பொடி. தெளிந்த நீருக்கடியில் தங்கி நிற்கும் மண்ணுடன் கலந்து விடுவதைப் போன்று ஆன்ம விசாரணை மூலம் அஞ்ஞானத்தில் ஆழ்ந்திருக்கும் ஜீவனை பரிசுத்தனாக்கி விட்டு அஞ்ஞானம் தானாகவே அழிந்து விடும்.

6. (விருப்பு வெறுப்பு ஆகிய) ராகதுவேஷம் மற்றும் உலக சுகங்கள் யாவும் கனவில் அனுபவிக்கும் சுகங்களைப் போன்றதே யாகும். ஆத்மஞானம் பெற்று விட்ட விழிப்பு நிலையில் உலகியல் சுகங்கள் யாவும் பொய்யாகிவிடும்.

7. கிளிஞ்சலிடையே வெள்ளி தோன்றுவது போன்ற பொய் அறிவு (மாயை) நீங்கிய பிறகு இரண்டற்றதும் ஒன்றேயானது மான பிரம்மஞானமாகிய உண்மைப் பேரறிவு கிட்டியதும் இவ்வுலக சுகமும் பொய்யானதே என்றுத் தோன்றும்.

8. நீரில் தோன்றும் நீர்க்குமிழிகள் நீரிலேயே கலந்து மறைந்து விடுவதைப் போன்று, உலக உற்பத்திகளுக்கு மூல மாகிய பரமேஸ்வரரிடமே (பிரம்மம்) தோற்றமும் இருப்பும் அழிவுமாக அமைகின்றன.

9. காப்பு, வளையல், சங்கிலி போன்று பல வடிவங்களில் ஆபரணங்கள் செய்யப்பட்ட போதிலும், அவற்றுக்கான மூலப் பொருள் தங்கம் ஒன்று தான் உண்மை. அதே போன்று பலவித

மான தோற்றம் கொண்ட பலவிதமான எல்லா ஜீவராசிகளும் சத்சித் ஆத்ம சொரூபியும் ஒன்றேயானதுமான பிரம்மத்திடமே கற்பிக்கப்பட்டுள்ளது.

10. ஆகாயம் எப்படி முடிவற்ற பரம் பொருளாக இருக்கிறதோ அதே போன்று நானாவிதமான ஜீவ உற்பத்திகள் தோன்றினாலும் அவைகளின் ஒடுக்கம் ஒன்றேயான ஈஸ்வர தத்துவத்தால் இரண்டற்ற ஒருமை நிலையை அடைகிறது.

11. நீரில் தோன்றும் நிறம், சுவையாவும் நீர்சார்ந்திருக்கும் மண்வளத்தைப் பொறுத்து வந்தவைகளாகும். நிறமும் சுவையும் நீருக்குச் சொந்தமல்ல. ஆன்மாவுக்கு ஜாதி, நிறம், இருப்பிடம் எதுவும் கிடையாது. இப்பாகுபாடுகள் ஆன்மாவை ஏந்தியுள்ள உடல்களுக்கே உரியவைகளாகின்றன.

இச்சுலோகத்துக்கு ஒத்த பருத்துள்ள குறள் பின் வருமாறு.

**நிலத்தியல்பால் நீர்த்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு.** குறள்—452

''தண்ணீர் சேர்ந்த நிலத்தின் இயல்புக் கேற்ப நிறத்தாலும் சுவையாலும் மாறுபட்டு நிற்கும். அது போல மக்களின் அறிவும் தாம் சேர்ந்த இனத்தின் தன்மைக்கேற்ப மாறுபடும்.''

12. பஞ்சீகரணம் செய்யப்பட்ட மகாபூதங்கள் எனப்படும் மண், நீர், தீ, காற்று, ஆகாயம், சேர்க்கையால் ஆக்கப்பட்ட இந்த உடல், சுகதுக்கங்களை அனுபவிக்க ஏதுவாக உள்ள அனுபவ பாத்தியதை உள்ளதுமான உடலை ஆன்மா உறைவிடமாகக் கொண்டுள்ளது.

பஞ்சீகரணம் என்பது யாதெனில் மண் நீர் தீ காற்று ஆகாயமாகிய ஒவ்வொரு பூதமும் பாதிபாதியாகப் பிரியும். பிறகு ஒரு பாதி அப்படியே இருக்கும். மற்றொரு பாதி நான்கு பாகங்களாகப் பிரியும். கடைசியில் ஒவ்வொருபூதத்திலும் ஒரு பாதியுடன் மற்றபூதங்களின் பாதியில் நான்காகிய ஒன்று வீதம் நான்கு அரைக்கால் பகுதிகள் வந்து இணையும். இந்த இணையும் செயலை பஞ்சீகரணம் என்று வேதாந்தம் விளக்குகிறது.

13. பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன் ஆகிய ஐந்து பிரதானவாயுக்களும் கண், காது, மூக்கு, தோல், நாக்கு, ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும், கை, கால், வாய், மலவாய், கருவாய், ஆகிய ஐந்து கர்மேந்திரியங்களும் மனம், புத்தி ஆகியவற்றின் கூட்டமைப்பான ஸ்தூல சூட்சும சரீரமே இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்குரிய கருவியாகிறது.

14. ஸ்தூல சூட்சும திரேகம் ஆதி அல்லது தொடக்கம் என்று ஒன்றுமில்லாத அவித்தைக்கு காரணக் (உபாதி) கருவி என்று சொல்லப்படுகிறது. இம் மூன்றுக்கும் (ஸ்தூலதிரேகம், சூட்சுமதிரேகம், அவித்தை எனப்படும் அஞ்ஞானம்) மாறுபட்டது ஆத்ம ஸ்வரூபம் என்று அறிந்து கொள்ளவேண்டும்.

15. தூய்மையான கண்ணாடி நீல நிறத் துணியின் சேர்க்கையால் கண்ணாடி எப்படி நீல நிறமாகத் தோன்றுகிறதோ அதே போன்று பஞ்ச கோசங்களின் சேர்க்கையால் தூயவனான ஆத்மன் அந்தந்த கோசங்களுக் கேற்ற ரூபத்துடன் காட்சி யாகிறது.

(அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம் விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் ஆகியவைகளே பஞ்சகோசங்கள் எனப்படுகின்றன.)

16. நெல்லிலிருந்து உமியைப் பக்குவமாகக் குத்தி நீக்கி விட்டு அரிசியை எடுப்பது போன்று ஐந்து கோசங்களுடனான ஸ்தூல சூட்சும உடலால் சூழப்பட்டிருக்கும் சுத்த ஆத்மனை மிகவும் பக்குவமாக யுக்தியினால் பிரித்தெடுத்து ஞானம் பெற வேண்டும்.

17. ஆத்மா எங்கும் நிறைந்திருந்த போதிலும் அது தன்னை வெளிப்படுத்தி எல்லாவிடத்திலும் பிரகாசிப்பதில்லை. நிர்மலமான கண்ணாடியில் பிரதிபிம்பம் தோன்றுவது போன்று தெளிவான புத்தியினால் மட்டுமே ஆத்மா வெளிப்பட்டுப் பிரகாசிக்கும்.

19. மேகங்கள் ஓடும் போது சந்திரனும் ஓடுவது போன்று தோன்றுகிறது. அதே போன்று இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவற்றின் இயக்கங்களினால் ஆத்மனும் அவ்வலுவல்களில் ஈடுபட்டுள்ளதாக விவேகமில்லாதவர்கள் அவ்வாறாகக் கருதுகிறார்கள்.

20. சூரியோதயம் ஆனதும் உலகம் எவ்வாறு அதன் செயலில் இயங்கத் தொடங்குகிறதோ அதே போன்று உடல், புலன்கள், மனம், புத்தி எல்லாம் ஆன்ம (உயிர்) இயல் மூலம் தம் தம் தொழிலைப் புரிகின்றன.

21. நிறம் ஏதுமில்லாத ஆகாயத்தை நீலவானம் என்று நாம் குறிப்பிடுவது போன்று உடல், பொறிகள் இவைகளின் குணங்கள் செயல்கள் யாவற்றையும் சச்சிதானந்தப் பொருளாகிய ஆத்மாவின் இயக்கம் என்று விவேகமற்றுக் கூறி மயக்கமடைகிறோம்.

22. நீரில் தெரியும் சந்திரபிம்பம் நீரின் அசைவினால் சந்திரபிம்பமும் அசைவது போலத் தெரிவதைப் போன்று மனம், புத்தி ஆகியவற்றின் முனைப்புகளுக்கும் ஆத்மாதான் காரணம் என்று கற்பிப்பது அறியாமையாகும்.

23. விருப்பு வெறுப்பு இன்பம் துன்பம் யாவும் புத்தி இயங்கும் போதுதான் உணரப்படுகின்றன. புத்தியின் செயலாக்கம் இல்லாத ஆழ்ந்த தூக்க நிலையில் அவ்வகையான மன அதிர்வுகள் தோன்றுவதில்லை. ஆகவே, சுகதுக்கங்கள் யாவும் புத்தியைச் சார்ந்ததே யன்றி ஆன்மாவினுடையதல்ல.

24. சூரியனுக்குப் பிரகாசமும், நீருக்குக் குளிர்ச்சியும், நெருப்புக்குச் சுட்டெறிக்கும் தன்மையும் எப்படி சுபாவமோ (இயற்கை குணங்களோ) அதே போன்று ஆத்மனுக்கு சத்சித் ஆனந்தமும், நித்யசுத்த சுபாவமும் இயற்கை குணங்களாகும்.

25. ஆத்மா சுயம்பிரகாசமானது; ஆத்மனின் ஒளியில்லாமல் புத்தியினால் எதையும் உணரவோ எண்ணவோ முடியாது. இருப்பினும் ஆத்மா, புத்தி இரண்டையும் சேர்த்து 'நான் அறிகிறேன்' என்ற அறியாமையும் ஆத்மாவுடன் இணைத்துப் பேசப்படுகிறது.

26. ஆத்மனுக்கு மாறுதல், பதற்றம், அசைவு போன்ற விசாரம் இல்லை. புத்திக்கு ஞானம்கிடையாது. இருப்பினும் ஜீவன் எல்லாவற்றையும் அறிந்து கொள்ளாமலேயே, நான் அறிகிறேன், நான் பார்க்கிறேன் என்று சொல்வதில் மோகம் கொள்ளுகிறது.

27. கயிற்றைப் பாம்பாக நினைப்பது போல் தன்னை ஜீவனாக எண்ணுவதால் பயப்படுகிறான். 'நான் பரமாத்ம சொரூபம்' என்று அறிந்து கொண்டால் பயம் நீங்கியவனாகிறான்.

28. விளக்கொளியினால் தான் ஒரு பொருள் காட்சிக் குரியதாக (பிரத்யட்சம்) ஆகிறது, காட்சிப் பொருள்கள் எதுவும் விளக்குக்கு ஒளிதருவதில்லை. அதே போன்று ஆத்மா ஒன்றுதான் புத்தி மற்றும் இந்திரியங்களை ஒளி வீசச் செய்கிறது. ஜடப் பொருள்களான புத்தி பற்றும் இந்திரியங்களால் ஆத்மா பிரகாசம் அடைவதில்லை.

29. ஒளி வீசும் தீபத்துக்குத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள மற்றொரு விளக்கு எப்படி தேவையில்லையோ ஆன்மாவும் ஞான சொருபமாக இருக்கும் காரணத்தால் ஆன்ம

ஞானம் பெற்றோர்க்கு மற்ற அறிவின் மீது இச்சை இருப்ப தில்லை.

30. 'இது இல்லை இது இல்லை' என்று எல்லா உபாதி களையும் (இடையூறுகள்) ஒதுக்கித் தள்ளி விட்டு (பிரம்மத்தை உணர்த்தும்) வேதங்களைச் சார்ந்த மகாவாக்கியங்களின் கருத்துக் கேற்ப ஜீவாத்மனும் பரமாத்மனும் ஒன்றே என்ற மாறுபாடில்லாத உண்மையை உணர்ந்து கொள்ளவேண்டும்.

31. அஞ்ஞானம் என்னும் மாயையால் ஸ்தூல உடலும் மற்றும் உலகியல் காட்சிப் பொருட்களும் தோன்றின. இவைகள் யாவும் நீர்க் குமிழிகள் போல அழியக் கூடியது. இவற்றுக் கெல்லாம் மாறுபட்டதாக விளங்கும் நிர்மலமான பிரம்மமே 'நான்' என்று அறிந்து கொள்வாயாக.

32. நான் (ஆத்மா) தேகத்தைக் காட்டிலும் மாறு பட்டுள்ளதால் எனக்குப் பிறப்பு, மூப்பு, செயல்பாடின்மை இறப்பு முதலியன கிடையாது. அவைகள் இந்திரியங்கள் அல்ல என்பதால் ஆத்மாவுக்கு ஒளி, உணர்வு போன்ற விஷயங் களுடன் உறவு இல்லை.

33. ஆத்மனுக்குப் பிராணன்கள் இல்லை. மனம் இல்லை. வெண்மையானது தூய்மை யானது என்று வேத சாசனங்கள் கூறுகின்றன. மனம் என்ற ஒன்று ஆத்மாவுக்கு இல்லையென்ப தால் எதற்குத் துக்கம், விருப்பு, பற்றுகள், வெறுப்பு, பயம் முதலியவைகள் இல்லை.

34. நான் குணங்களற்றவன், செயலற்றவன். என்றும் இருக்கிறவன், விருப்பமும் எண்ணங்களும் அற்றவன், களங்க மற்றவன், மாறுதலில்லாதவன், என்றும் விடுபட்டவனாகவும் பரிசுத்தமானவனாகவும் இருக்கிறேன்.

35. நான் ஆகாயப் பெருவெளி போல எல்லாவற்றிலும் உள்ளும் வெளியேயும் நிறைந்தவன். எப்போதும் எல்லா வற்றிலும் சமமாக நிறைந்தவன். வெற்றியுடையவன். ஒட்டுதல் இல்லாதவன். நிர்மலமானவன். அசைவற்றவன்.

36. என்றும் தூய்மையானதும், சுதந்திரமானதும், தனித்து ஒன்றேயானதும், இடையறாத ஆனந்த மயமானதும், இரண்டற்ற அறிவு மயமானதும் எல்லையற்றதுமானது எந்தப் பொருளோ, அந்த பிரம்ம மானது நானேதான்!

37. இவ்விதம் எப்பொழுதும் அப்பியாசம் செய்வதால் "நான் பிரம்மமாக இருக்கிறேன்" என்ற எண்ணம் உறுதிபடு

வதால், மருந்து நோய்களைத் தீர்ப்பது போல அஞ்ஞானத்தால் ஏற்படும் பதற்றங்கள் யாவும் நீங்குகிறது.

38. தனியான இடத்தில் அமர்ந்தவனாக வைராக்கியம் மிக்கவனாக, இந்திரியங்களை அடக்கியவனாக வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாது இது ஒன்றிலேயே ஈடுபட்ட மனத்தினனாய், அந்த எல்லையற்றதும் ஒன்றேயானதுமான ஆத்மாவைத் தியானம் செய்ய வேண்டும்.

39. நல்லறிவாளர்கள் ஆத்மாவினாலேயே எல்லாவிதமான உலகியல் காட்சிப் பொருள்களையும் தன்புத்தியால் ஆத்ம சொரூபத்திலேயே மறைந்து போகும்படி செய்து ஏகவஸ்வானதும் நிர்மலமானதும் ஆகாயம் போன்றதுமான ஆத்மாவைத் தியாணிக்க வேண்டும்.

40. பிரம்மத்தை அறிந்தவன் வடிவம் நிறம் ஆகிய எல்லாவற்றையும் விட்டு விட்டுப் பரிபூரணமான அறிவுமயமான ஞானானந்த நிலையிலிருப்பான்.

41. அறிவோன் — அறிவு — அறியப்படும் பொருள் என்ற வித்தியாசங்கள் பரமாத்ம நிலையில் இல்லை. பிரம்மம் ஞான ஆனந்த சொரூபமான படியால் அது தானே பிரகாசிக்கிறது.

42. இரு அரணிக்கட்டைகளைக் கொண்டு கடைந்தெடுக்கும் தீயைப் போன்று, ஆத்மனை நினைத்துத் தொடர்ந்து தியானம் கடைதலை இடைவிடாது செய்து வந்தால் தியானத்தால் உண்டாகும் தீப்பொறியானது அஞ்ஞானத்தை எரித்து சாம்பலாக்கி விடுகிறது.

43. இருள் நீங்கிட சூரியோதயம் எழுவது போல அஞ்ஞானமென்னும் இருளை ஆத்மஞானத்தால் அழித்துவிட்டால் ஆத்மா தானாகவே சூரியன் போல் பிரகாசிக்கிறது.

44. ஆத்மா எப்பொழுதும் நம்மிடம் உள்ளதாக இருப்பினும் அஞ்ஞானம் காரணமாக ஆத்மனைத் தேடி அலைவதானது, கழுத்தில் அணிந்துள்ள ஆபரணம் மறதி காரணமாகக் காணாமல் போனதாகக் கருதித் தேடி அலைவது போன்றதேயாகும்.

45. தூணைப் பார்த்து மனிதனாகக் கருதும் பொய் அறிவைப் போன்ற பிரமையினால் பிரம்மத்தில் ஜீவனை இணைத்துக் கருதப்படுகிறது. ஜீவனிலேயே பிரம்மத்தைக் காணும் ஞானம் கிட்டியதும் பிரம்மம் ஜீவனாகத் தோன்றுகிறது.

46. திக்பிரமை நீங்கிய பின் தெளிவு ஏற்படுவது போல உண்மைப் பேரறிவினால் அனுபவமாகும் ஆத்ம ஞானத்தால் 'நான்', 'எனது' என்கிற அஞ்ஞானம் நீங்கிவிடுகிறது.

47. பிரம்மத்தை உணர்ந்த அனுபவ ஞானம் பெற்ற ஞானி அனைத்துலகமும் தன்னுள் இருப்பதாக உணர்கிறார். எல்லா ஆத்மாக்களும் ஒன்றேயான ஆத்ம சொரூபம் என்றும் காண்கிறார்.

48. மண்குடத்தைப் பார்க்கும் போது அதன் உண்மைப் பொருள் மண் என்பது தெளிவாகிறது. அதே போன்று இந்த உலகம் முழுவதும் வியாபித்திருப்பது பரம் பொருளே யாகிய படியால் அனைத்துக்குள்ளும் தன் ஆத்மாவையே பார்க்கிறார் ஆத்மஞானி.

49. குளவி தான் கட்டிய கூட்டில் புழுவைக் கிடத்தி அதனைக் கொட்டிக் கொண்டே இருப்பதால் புழு குளவி யாவதைப் போன்று, ஜீவனின் சொரூபம் ஆத்மாதான் என்ற நிலைத்த நினைவினால் ஆத்மஞானி தனது சரீரம், மனம், குணம் முதலியவற்றால் எழும் உபாதிகளை (மாறுதல்களை) நீக்கி விட்டு ஜீவன் முக்தனாகிறான்.

50. விருப்பு வெறுப்பு மற்றும் ராக வேஷங்கள் எனப்படும். அரக்கர்களைக் கொன்று (சம்மாரம்) விட்டு ஞானி சாந்தி (அமைதி) நிலையில் ஆத்ம இன்பம் காண்கிறான்.

51. வெளி உலகில் உள்ளதும் அழியக் கூடியதுமான இன்பத்திலுள்ள ஆசையை ஒழித்து விட்டு ஆத்ம சுகமான அனுபவத்திலேயே நிலைத்து நின்று குடத்தினுள்ளே இட்ட விளக்கொளி போல் தன்னுள்ளேயே சுயம் பிரகாசமான ஒளியை ஆத்மஞானி காண்கிறான்.

52. ஆத்ம அனுபவம் பெற்ற ஞானி திரேகம் குணங்கள் போன்ற உபாதிகளுடன் இருந்தாலும் அவற்றால் அவர் பாதிக்கப்படுவதில்லை. ஆகாயம் போன்று அனைத்தையும் கிரகித்துக் கொள்ளக் கூடியவறாகவும், எதுவும் அறியாத மூடனைப் போன்றும் இருப்பார். எந்த ஒரு விஷயத்திலும் பற்றுதலில்லாமல் காற்றைப் போல் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்.

53. உடல், மனம், புத்தி ஆகிய ஜீவர்களின் வேதனை (உபாதி)களை அழித்து விட்ட ஜீவன் முக்தரான முனிவர் நீரில் நீராகவும், ஆகாயத்தில் ஆகாயமாகவும் ஒளியில் (தேஜஸ்) ஒளி

யாகவும் இரண்டறக் கலந்து எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளான பிரம்மத்துடன் ஐக்கியமாகி விடுகிறார்.

54. எந்தப் பயனைப் பெறவேண்டுமோ அதற்கு மேம் பட்ட பயன் எதுவும் இல்லையோ அதைப் பெற்றுவிட்ட இன்பத் துக்கு மேலும் எந்த இன்பம் இல்லையோ, ஆத்ம ஞானத்தைப் பெற்று விட்ட பிறகு அதற்கு மேம்பட்ட எந்த வேறு ஞான மில்லையோ அதுவே பரமானந்த நிலையாகிய பிரம்மஞானம் என்று உறுதியாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

55. எதைப் பார்த்து விட்ட பிறகு மேலும் காண வேண்டி யது என்ற காட்சி எதுவும் இல்லையோ? எதுவாக ஆக வேண்டு மோ அதுவாக ஆகிவிட்ட பிறகு மீண்டும் ஆவதற்கு (பிறவி) எதுவும் இல்லையோ, எதை அறிந்து கொண்ட பிறகு மேலும் அறிவதற்கு என்று எதுவுமில்லையோ அதுவே ''பிரம்மம்'' என்று திடமாக அறிந்து கொள்ளவும்.

56. எல்லாத் திசைகளிலும், மேலேயும் கீழேயும் (எங்கேயும்) நிறைவானதும் (பூரணம்) இரண்டற்றதும் சச்சிதானந்தப் பொருளாகவும், எல்லையற்றதும், என்று முள்ளதும், ஒன்றேயானதும் எதுவோ அதுவே பிரம்மம் என்று உறுதியாகச் சொல்லப்படுகிறது.

57. இது அன்று அது அன்று என்று வேதாந்தம் எதைச் சுட்டிக் காட்டுகிறதோ, இரண்டற்றதும் ஒன்றேயானதுமான ஆனந்த சொரூபமானது எதுவோ அதுவே பிரம்மம் என்று உறுதி செய்து கொள்ளவும்.

58. அளவிடமுடியாத ஆனந்த சொரூபியான அந்த பிரம்மத்தை அடைந்தவர்கள் அனுபவிக்கும் அணுவளவிளான இன்பத்தைப் பெற்றே பிரம்மா உள்ளிட்ட தேவர்களும் மற்றும் உலகம் முழுவதிலுமுள்ள ஜீவர்கள் அனைவரும் ஆனந்த மடை கிறார்கள்.

59. பாலில் வெண்ணை மறை பொருளாக பரவி இருப்பது போல இவ்வுலகப் பொருட்களும், உலகியல் இயக்கங்கள் யாவும் பிரம்மத்திடமே இணைந்துள்ளது.

60. அணுவளவே யானது என்றும், பருமனானது என்றும், குறுகியது என்றும் நீண்டது என்றும் பிறப்பற்றது என்றும், அழிவற்றது என்றும், உருவம், குணம், நிறம் இன்னது என்று கூறி விளக்க முடியாததுமானது எதுவோ அதுவே பிரம்மம் என்று உறுதியாகத் தீர்மானிக்கவும்.

61. சூரியன் மற்றுமுள்ள ஒளிக் கோள்களும், எதனால் பிரகாசிக்கிறதோ, ஒளிமயமான இவைகளால் எது பிரகாசிக்க வில்லையோ, காணப்படும் இந்த ஒளிக் கோள்களெல்லாம் எதனால் காட்சிப் பொருளாகிறதோ அதுவே பிரம்மம் என்று அறியவும்.

62. உள்ளும் புறமுமாக ஊடுருவிப் பரவி எல்லாப் பொருள் களையும் காட்சிப் பொருள்களாக்கிக் கொண்டிருக்கும் பிரம்மம், நெருப்பினால் பழுக்கக் காய்ச்சிய இரும்புப் பந்து போல ஒளி மயமாகப் பிரகாசிக்கிறது.

63. பிரம்மம் இன்றி உலகம் இல்லை. அதற்கு (பிரம்மம்) அன்னியமானது எதுவும் உலகில் இல்லை. அப்படி இருப்பதாகக் கருதுவது கானல் நீர் போன்றதேயாகும்.

64. இரண்டற்றதும் ஒன்றேயானதுமான சச்சிதானந்தப் பொருளான பிரம்மத்தின் ஆற்றலைக் கொண்டே (நாம்) பார்க் கிறோம். கேட்கிறோம் என்பதை அனுபவ அறிவினால் (தத்துவ ஞானம்) மட்டுமே அறியமுடியும்.

65. எங்கும் நிறைந்திருக்கின்ற பரம்பொருளாகத் திகழும் சச்சிதானந்தப் பொருளான பிரம்மத்தை ஞானக் கண் கொண்டு தான் பார்க்க முடியும். குருடன் சூரியனைப் பார்க்க முடியாதது போல், ஊனக் (அஞ்ஞானம்) கண்களைக் கொண்டு பிரம்மத்தைக் காண்பது இயலாது.

66. சிரவண மனன நிதித்தியாசங்கள் எனப்படும் கேட்டு அறிதல், சிந்தித்தல், தெளிந்து ஆய்தல் ஆகிய கேள்வி ஞானத் தால் ஏற்றிவைக்கப்பட்ட ஞான (தீ) ஒளியினால் மும்மலங் களும் (ஆணவம்; மாயை, கன்மம்) சுட்டெறிக்கப்பட்ட சுத்த ஜீவன் தங்கம் போன்று சுயம் பிரகாசமான ஒளிநிலைப் பெறுகிறார்.

67. இதய ஆகாயத்தில் உதிக்கும் ஆத்மஞானம் என்ற சூரியன் (ஆத்மரவி) அஞ்ஞான இருளை நீக்குபவராகவும், எங்கும் நிறைந்த பரம் பொருளாக வியாபித்திருக்கும் ஆதார சக்தியாகவும், உலகத்தை ஒளி பெறச் செய்பவராகவும் ஆத்ம சொரூபம் பிரகாசிக்கிறது.

68. எவன் ஒருவன் சாந்த சொரூபியாகவும் திக்கு (திசைகள்) தேசம், காலம் ஆகியவற்றைக் கடந்தவனாகவும், 'நான்' என்ற நிலையைத் துறந்து சுகம், துக்கம், ஒளி, இருள், குளிர், சூடு எல்லாவற்றையும் துறந்த ஜீவனாகவும், பரிசுத்தனா

கவும், நிலையான இன்பத்தை அனுபவிப்பவனாகவும், ஆத்ம தீர்த்தம் எனப்படும் புனித நீரில் நீராடுபவனாகவும், அவனுக்கென்று தனியாக கர்மங்களை மேற்கொள்ளாமல் அனைத்தும் அறிந்தவனாகவும் எங்கும் வியாபித்திருக்கும் பரம்பொருளை பூஜித்து மரணமில்லாப் பெருவாழ்வினை அடைவான் என்று கூறி ஆத்ம போதம் நிறைவு பெறுகிறது.

ஆத்ம போதத்தின் முதலாவது சுலோகத்தை மீண்டும் ஒரு முறை நினைவுபடுத்திக் கொள்வது உத்தமமாகும்.

"ஐம்புலன்களையும் அடக்கிப் பழகும் பயிற்சியால் பாவங்களையும் ஆசைகளையும் நீக்கி பற்றற்ற நிலையில் தன்னைத் தானே ஆன்மாவினால் அறிந்து முத்தியடைய விரும்புகிறவர்களுக்காக ஆத்ம போதம் கூறப்படுகிறது."

ஆத்மபோதம், சுலோ-1

இக்கருத்துக்கு ஒத்துள்ள திருக்குறள் ஒன்று உண்டு.

**"உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"** குறள்—24

"அறிவு என்னும் அங்குசத்தால் ஐம்புலன்களாகிய ஐந்து யானைகளையும் அடக்கி ஆள்பவனே மேலானதாகிய முத்தியை அடைவதற்கு ஏற்றவனாவான்."

# 7. தியானயோகம்

மனத்தையும், மனத்தின் நடவடிக்கைகளையும் கட்டுப் படுத்துவதற்காக மேற்கொள்ளப்படும் பயிற்சியே யோகம் எனப்படுகிறது.

நாம் பிறந்ததிலிருந்து உலகியல் காட்சிப் (புறம்) பொருள் களையே பார்த்து ரசித்து பழகிவிட்டதால், அக உலகம் (உள்மனம்) பற்றி ஆய்ந்தறியும் ஆற்றலை இழந்து விட்டோம். மனத்தின் ஆற்றல்கள் அனைத்தையும் உள்முகமாகத் திருப்பி, ஒருமுகப்படுத்தி மனத்தின் செயல்பாடுகளை ஆய்வு செய்து, மனத்தைக் கொண்டே மனத்தை அடக்கும் பயிற்சி யோகப் பயிற்சியாகும்.

பகவத்கீதையில் ஆறாம் பகுதியான "தியானயோகம் என்ற பகுதியில் கூறப்பட்டுள்ள சுலோகங்கள் பின்வருமாறு.

1. பலன் எதிர்பாராமல் தான் செய்ய வேண்டிய கர்மங் களை யெல்லாம் யார் செய்கிறானோ அவன் தான் சந்நியாசி யும்; யோகியும் ஆவான். யக்ஞ அக்னியையும், கர்மத்தையும் (செயல்கள்) அசட்டை செய்தவன் சந்நியாசியோ, யோகியோ ஆகமாட்டான்.

2. எதை சந்நியாசம் என்று கூறுகிறார்களோ அதுதான் யோகம் என்று அறிந்து கொள். ஏனெனில் சுயநல நோக்கத்தை தவிர்க்காத எவனும் யோகியாக வர முடியாது.

3. யோகமாகிய சிகரத்தைத்தாண்ட விரும்புவோனுக்கு கர்மம் ஒரு சாதனமாகக் கூறப்படுகிறது அந்தச் சிகரத்தைத் தாண்டிய பின் அதே மனிதனுக்கு, சாந்தியே சாதனமாகக் கூறப்படுகிறது.

4. ஒரு மனிதன் புலன்களுக்கான சாதனங்கனிலோ அல்லது கர்மங்களிலோ பற்றுதலின்றி சுயநல நோக்கத்தை அறவே கை விட்டு விடுவானேயாயின், அப்போது அவன் யோக சித்தியை அடைந்தவனாகிறான்

5. ஒருவன் தன்னுடைய ஆன்மாவினாலேயே தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும்; தன்னைத் தாழ்த்திக் கொள்ளக் கூடாது. ஏனெனில், தனக்கு ஆன்மா ஒன்றே நண்பனாக இருக்கிறது. ஆன்மா ஒன்றே விரோதியாகவும் இருக்கிறது.

6. ஆன்மாவினால் தன்னைத்தானே வென்றவனுக்கு ஆன்மாதான் நண்பன். தன்னைத்தானே ஜயிக்காதவன் தனக்கு விரோதியாக இருக்கிறான். அவனது ஆன்மாவும் அவனுக்கு விரோதியைப் போல் நடந்து கொள்கிறது.

7. தன்னை வென்றவனும், குளிர்-உஷ்ணம் இன்பம்-துன்பம், மானம்-அவமானம் எல்லாவற்றையும் சமமாகக் கருதி முற்றிலும் அமைதியாக இருப்பவனும், ஆன்ம சாந்தியை அடைகிறான்.

("புலன்களின் ஆதிக்கத்திலிருந்தும், இருமை உணர்ச்சிகளில் இருந்தும் விடுதலை பெறும் ஆன்மாவே பரமாத்மா ஆகிறது" என்கிறார் ஸ்ரீ சங்கரர்.)

8. ஞானத்தினாலும் பகுத்தறிவினாலும் ஏற்பட்ட திருப்தியினால் மனம் நிறைந்தவனும், பாறை போல் உறுதியான மனம் படைத்தவனும் தனது புலன்களை வென்றவனும் மண், கல், தங்கம் எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனுமாகிய யோகியே யோகத்தில் நிலை பெற்றவனாக இருக்கின்றான்.

9. உயிர்த் தோழன், நண்பன், விரோதி, முகம் தெரியாதவன், மத்தியஸ்த நிலையிலிருப்பவன், அந்நியன். கூட்டாளி, முனிவன், பாவி ஆகிய எல்லோரையும் சமமாகக் கருதுபவனே சிறந்தவன்.

10. யோகி தனிமையான இடத்தில் தனியாக இருந்து கொண்டு, மனத்தையும் உடலையும் கட்டுப்படுத்தி ஆசைகளையும், உடமைகளையும் கைவிட்டு, இடைவிடாத ஆன்ம சிந்தனையில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

11. தனக்கு ஒரு பரிசுத்தமான இடத்தை நிர்ணயம் செய்து கொண்டு, அதிக உயரம் இல்லாததும். அதிகமாகத் தாழ்ந்து இல்லாததுமான ஓர் உறுதியான ஆசனத்தில் (இருக்கையில்) தர்ப்பைப் புல்லைப்பரப்பி, அதன் மீது மான் தோலைப் போட்டுக் கொண்டு அதன் மேல் ஒரு துணியை விரிக்க வேண்டும்

12. பிறகு அந்த ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு மனத்தை ஒருமுகப் படுத்தியும், எண்ணங்களையும் புலன்களையும் கட்டுப்படுத்தியும், ஆன்ம சுத்திக்காக யோகப்பயிற்சியில் ஈடுபட வேண்டும்.

13. ஸ்திரமாக இருந்துகொண்டு உடல், கழுத்து, தலை இவற்றை ஒரு நேர் கோட்டைப் போல் ஒழுங்காக வைத்துகொண்டும், அசையாமலும், மூக்கின் நுனியை உற்று நோக்கி வண்ணம் சுற்றிலும் எதையும் பாராமலும்.

("மூக்கின் நுனியைப் பார்த்துக் கொண்டு" என்பதிலுள்ள உட்பொருள்களைப் பற்றி ஸ்ரீ சங்கரர் பின் வருமாறு விளக்கப் கூறியுள்ளார். பார்வையை வெளிச்சாதனங்களில் இருந்து திருப்பி உட்புறமாகச் செலுத்த வேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். இதுமன உறுதியையே பொறுத்திருக்கிறது திடமான சிந்தனையுடன் மனத்தின் ஓட்டத்தை உட்புறமாகச் செலுத்தாமல் "மூககின் நுணியைப் பார்த்த வண்ணம்" இருக்க வேண்டுமென்று மாத்திரம் கருதுவது அர்த்தமாகாது'— ஸ்ரீ சங்கரர்.)

14. அமைதியான மனத்துடனும், அச்சமின்றியும், பிரம்மச் சரிய விரதத்தில் உறுதியுடனும் மனத்தை அடக்கியும், தெய்வ சிந்தனையில் லயித்தவனாகவும் யோகி உட்கார வேண்டும்.

(பிரம்மச்சரியம் என்றால் சிற்றின்ப இச்சையடக்கம் என்பது மட்டும் அல்ல. அகிம்சை, சத்தியம், திருடாமை, சிற்றின்ப இச்சையை அடக்குதல், தனக் கென்று உடமைகள் எதுவுமில்லாமலிருத்தல் ஆகிய ஐந்து விரதங்களை மேற் கொள்வது பிரம்மச்சரியம் ஆகும்.)

15. எப்போதும் அவ்விதமாக மனத்தைக் கட்டுப் படுத்தி ஆன்மாவுடன் தன்னை ஐக்கியப் படுத்திக் கொண்டு யோகி சாந்தியை அடைகிறான். என்னிடத்தில் உள்ள பரம சாந்த நிலையையும் எய்துகிறான்.

16. மிகவும் அதிகமாக உண்பவனும், மிகவும் அதிகமாகப் பட்டினி கிடப்பவனும் யோக நிலையை அடைவதற்கு தகுதி யற்றவன். அது போலவே அதிகமாகத் தூங்குபவனும், மிகவும் அதிகமாக விழித்துக் கொண்டிருப்பவனும் யோக நிலையை அடைவதற்கு தகுதியற்றவன் ஆகிறான்.

(இந்த சுலோகத்துக்கு ஸ்ரீ சங்கரர் கூறியுள்ள விளக்கம் "ஒழுங்கான அளவுள்ள உணவு, உண்பவனைப் பாதுகாக்கிறது. அளவான உணவு உண்பவனுக்குப் பாதகமான விளைவுகளில்லை. அதிகமான உணவோ அல்லது குறைந்த உணவோ அவனுக்கு தீங்கை விளை விக்கிறது." என்று வேதம் கூறுகிறது. உணவின் அளவைப்பற்றி யோக சாஸ்திரத்தில் பின்வருமாறு குறிப்பிடப்

பட்டிருக்கிறது. 'அரை வயிறு உணவாலும், கால் வயிறு தண்ணீராலும் நிரப்பப் பட வேண்டும். காற்று போய் வருவதற்காக கால்வயிற்றை காலியாக விட வேண்டும்''— ஸ்ரீசங்கரர்

17. உணவு, இளைப்பாறுதல், எல்லாக் காரியங்களிலும் செய்யப்படும் முயற்சி, தூக்கம், விழித்திருத்தல் ஆகிய எல்லா விஷயங்களிலும் கட்டுத்திட்டங்களுடன் இருப்பவனுக்கு யோகமானது எல்லாத் துன்பங்களையும் தீர்க்கவல்லதாக இருக்கிறது.

18. தனது எண்ணங்களைப் பூரணமாகக் கட்டுப்படுத்தி ஆன்மாவைப் பற்றிய சிந்தனையிலேயே நிலைபெற்றவன் எவனோ, பொருட்களின் மீதுள்ள ஆசைகளிலிருந்து விடுபட்டவன் எவனோ, அவன்தான் யோகி என்று அழைக்கப்படுகிறான்.

19. காற்றில்லாத இடத்தில் உள்ள தீபத்தில் சுடர் அசையாமல் இருப்பது போலவே, மனத்தைக் கட்டுப்படுத்தி தன்னை ஆன்மாவுடன் ஐக்கியப்படுத்த முயற்சிக்கும் யோகியின் நிலையும் இருக்கிறது.

20. எண்ணம் யோகப் பயிற்சியால் அடக்கப்பட்டு எங்கே பூரணமாக ஸ்தம்பித்து (சமாதி நிலை) விடுகிறதோ, ஆன்மாவினால் ஆன்மாவைக் கண்டு ஒரு மனிதன் எங்கே ஆன்ம திருப்தியுடன் உட்காருகின்றானோ.

(சமாதி நிலையினால் தூய்மையாக்கப்பட்ட மனம் பரம் பொருளைப் பார்க்கும் சக்தியைப் பெறுகிறது. ஸ்ரீசங்கரர்.)

21. புலன்களுக்கு எட்டாததும் பகுத்தறிவினால் மட்டும் பெறக் கூடியதுமான அந்த முடிவற்றப் பேரின்பத்தை எவன் அனுபவிக்கின்றானோ, எதில் நிலைத்தபின் ஒருவன் சத்தியத்திலிருந்து வழுவுவது (விலகுவது) இல்லையோ,

22. எதை அடைந்த பின் அதைக்காட்டிலும் வேறு எதையும் பெரும் லாபமாக அவன் கருதவில்லையோ, எந்த இடத்தில் உறுதியாக ஸ்தாபித்தபின் அவன் எத்தகைய பெருத துன்பத்தையும் கண்டு சஞ்சலம் அடைவதில்லையோ.

23. அதைத்தான் யோக நிலை என்றும் அதாவது பரம் பொருளுடன் ஐக்கியம் அடைவது என்றும் அறிந்து கொள்ள வேண்டும். அதுதான் துன்பத்துடன் எத்தகைய தொடர்பு மற்ற ஒரு நிலையாகும். ஒருவன் இந்த யோகத்தைதான் உறுதியான தீர்மானத்துடனும், சலியாத ஊக்கத்துடனும் பயிற்சி செய்ய வேண்டும்.

("துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதே யோகம். உறுதியுடனும் தன்னம்பிக்கையுடனும் யோகத்தைப் பயிற்சி செய்ய வேண்டியது அவசியமாகும். அவ்விதம் பயிற்சி செய்தால்தான் மேற்கண்ட சுலோகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள முறைகளில் வெற்றி பெறுவது சாத்தியமாகும்." ஸ்ரீ சங்கரர்).

24. சுயநல நோக்கம் காரணமாக எழுந்த ஆசைகளிலிருந்து தன்னைப் பூர்ணமாக விடுவித்துக் கொண்டு, மனத்தையும், புலன்களின் விருத்திகளையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் இழுத்து அடக்கி.

25. மனஉறுதியினால் புத்தியை நிலைநிறுத்தி அவன் சிறிது சிறிதாக அமைதியான நிலையை அடைய வேண்டும். வேறு எதையும் பற்றிச் சிந்திக்காமல் மனத்தை ஆன்மாவில் நிலை நிறுத்த வேண்டும்.

"வேறு எதைப் பற்றியும் சிந்திக்காமல்" என்றால் ஆத்மா தான் எல்லாம் என்பதைத் தெளிவாக மனத்தில் இறுத்திக் கொள்ள வேண்டும். யோகத்தின் ரகசியம் இதுதான்" ஸ்ரீ சங்கரர்)

26. சஞ்சலமான உறுதியற்ற மனம் அங்கும் இங்கும் திரியும் போதெல்லாம், அதை இழுத்து ஆன்மாவின் பூரணமான ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வரவேண்டும்.

27. மனத்தை சாந்த நிலைக்குக் கொண்டு வந்தவனும், வெறிக்குணங்களை அடக்கியவனும், பிரம்மத்துடன் ஒன்றாகி விட்டவனும், எல்லாப் பாவங்களும் அறவே களையப்பட்டவனுமான இந்த யோகியைப் பேரானந்தம் வந்து அடைகிறது.

28. அவ்விதம் ஆன்மாவுடன் தன்னை ஐக்கியப்படுத்தி எல்லாப் பாவங்களிலிருந்தும் தன்னை தூய்மையாக்கிக் கொண்ட யோகி, பிரம்மத்துடன் தொடர்பு கொள்வதால் ஏற்படக் கூடிய எல்லையற்ற பேரானந்தத்தை எளிதில் அனுபவிக்கிறான்.

29. யோகத்தில் தேர்ச்சி பெற்றவன் பாரபட்சமின்றி எல்லாவற்றையும் சமமாகக் கருதுகிறான். எல்லா உயிர்களிடத்திலும் ஆன்மாவையும், ஆன்மாவில் எல்லா உயிர்களையும் காண்கிறான்.

30. யார் என்னை எல்லா இடங்களிலும் காண்கின்றானோ, என்னிடத்தில் எல்லாவற்றையும் பார்க்கிறானோ அவன் என்

பார்வையிலிருந்து மறைவதில்லை. நானும் அவனது பார்வையி லிருந்து மறைவதில்லை.

31. எல்லாம் ஒன்றே என்ற உறுதியுடன் எல்லா உயிர்களும் என்னிடத்திலேயே நிலைத்திருப்பதாக எண்ணி என்னை வழிபடும் யோகி, எப்படி வாழ்ந்தாலும் எவ்விதம் நடந்து கொண்டாலும் என்னிடத்திலேயே வாழ்பவனாகிறான். என் னிடத்திலேயே இருப்பவனாகிறான்.

32. மற்றவர்களுக்குத் தன்னை உவமையாகக் கொண்டு, தன்னுடைய சுக துக்கத்தைப் போல் எல்லோருடைய சுக துக்கங் களையும் சமமாகக் கருதுபவனே மிகச் சிறந்த யோகி என்று கருதப்படுகிறான்.

"எவ்வுயிரும் என்னுயிர் போ லெண்ணியிரங்கவும் நின்
தெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே"

—தாயுமானவர்

33. தாங்கள் இதுவரையில் எனக்கு உபதேசித்த சமத்துவ புத்தியை அடிப்படையாகக் கொண்ட இந்த யோகமானது, எப்படி உறுதியாக நீடித்திருக்க முடியும், என்பதை அலைபாய் கின்ற மனத்தை உடைய என்னால் அறிந்து கொள்ள முடிய வில்லை.

34. மனம் சஞ்சலமானது. அடக்க முடியாதது. மிகவும் சக்தி வாய்ந்தது. பிடிவாதம் உள்ளது. எனவே, காற்றை அடக்குவது எவ்விதம் கடினமோ, அதுபோலவே மனத்தை அடக்குவதும் கடினமானது என்றே நினைக்கிறேன்.

35. மனம் அலையும் தன்மை வாய்ந்தது, அடக்குவதற்கு கடினமானது என்பதில் சந்தேகமில்லை. இருந்தாலும் பயிற்சி யினாலும் இச்சையடக்கத்தினாலும் அதைக் கட்டுப்படுத்த முடியும்.

36. தன்னடக்கமின்றி யோக நிலையை அடைவது கடினம். எனினும் ஒழுங்கான முறைகளைக் கைக்கொண்டு முயற்சி செய் பவன் தனது முயற்சியினால் அடக்கப்பட்ட மனத்தின் மூலம் அந்த நிலையை அடைய முடியும்.

37. யோகத்தில் நம்பிக்கையுள்ளவன், நிலைபெறாமல் அலையும் மனம் காரணமாக முயற்சி குறைவினால் யோகத்தில் பூரண நிலையை எட்டாவிடில், அவனது கதி என்ன ஆகிறது?

38. உறுதியான நிலையின்றி பிரம்ம மார்க்கத்திலிருந்து நழுவியவன், இருவழிகளிலும் வீழ்ச்சியடைந்து சிதறுண்ட மேகத் தைப் போல் அழிந்து விடுவான் அல்லவா?

39. இந்த சந்தேகத்தை நீங்கள் முற்றிலும் தீர்த்து வைக்க வேண்டும். இந்த சந்தேகத்தை ஒழிப்பதற்கு உங்களைத் தவிர வேறு எவரும் இல்லை.

40. அவனுக்கு இந்த உலகத்திலோ அல்லது அந்த உலகத்திலோ அழிவு ஏற்படுவது இல்லை. நல்ல காரியத்தைச் செய்பவனுக்கு ஒரு காலத்திலும் இறுதியில் துக்கம் ஏற்படுவதில்லை.

41. யோகத்திலிருந்து வீழ்ச்சியடைந்தவன் தரும நெறியுள்ள ஆன்மாக்களில் உலகங்களை அடைந்து, அங்கு எண்ணிக்கையற்ற ஆண்டுகள் வாழ்ந்தபின் தூய்மையான செல்வந்தர்களில் குடும்பத்தில் வந்து பிறப்பான்.

42. அல்லது அவன் யோகிகளின் குடும்பத்தில் வந்து பிறப்பான். இந்த உலகில் அவ்விதம் யோகிகளின் குடும்பத்தில் பிறப்பது அரிதாகும்.

43. அங்கே அவன் முன் ஜன்மத்தில் அடைந்த அறிவை மீண்டும் பெற்று; அதிலிருந்து குறையற்ற நிலையை அடைய மீண்டும் முயற்சிக்கிறான்.

44. முன் ஜன்மத்தில் அவன் செய்த பயிற்சியின் பலனாக, அவன் விரும்பினாலும் விரும்பா விட்டாலும், மேற்கொண்டு யோக மார்க்கத்தில் இழுக்கப்படுகிறான். யோகத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உடையவன்கூட வேதத்தில் கூறப்பட்டுள்ள சடங்குகளைக் கடந்து விடுகிறான்.

45. உறுதியுடன் விடாமுயற்சி செய்து வரும் யோகி, பாவமெல்லாம் தீர்ந்து சுத்தமாகிப் பல பிறவிகளில் பக்குவம் அடைந்து, மகோன்னதமான நிலையை அதாவது பரமபதத்தை அடைகிறான்.

46. தவங்கள் புரிந்தவனைவிட அவன் உயர்ந்தவனாக கருதப்படுகிறான். ஞானியையும் விட அவன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். சடங்குகளில் ஆழ்ந்துள்ளவனையும்விட யோகி உயர்ந்தவனே.

(இந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள 'தவங்கள் புரிந்தவன்' என்பதற்கு பலனில் ஒரு கண் வைத்துக் கொண்டு தவம் செய்பவன் என்பதே பொருள். மேலும் இந்த சுலோகத்தில்

குறிப்பிடப்பட்டுள்ள ஞானியையும்விட" என்ற வாக்கியத்தில் வரும் "ஞானி என்பவன் மெய்ப்பொருளை உணர்ந்தவன் என்பது பொருத்தமாகாது. இங்கு ஞானி என்ற சொல்லுக்கு பண்டிதன் என்றே பொருள் கொள்ள வேண்டும்.)

47. எல்லா யோகிகளுக்குள்ளும், நம்பிக்கையுடன் என்னிடம் முழு மனத்தையும் வைத்து என்னிடமே லயித்து, யார் என்னை வழிபடுகின்றானோ, அவனையே நான் மிகச் சிறந்த யோகியாகக் கருதுகிறேன்.

பகவத்கீதையின் 'தியான யோகம்' என்ற ஆறாவது அத்தியாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது.

# 8. ஓம் தத் சத்

ஓம் தத் சத்—ஓம் என்ற இந்த அட்சரமே யாவுமாக உள்ளது. சென்றது, நிகழ்வது, வரப்போவது யாவும் ஓங்காரமே. இதுவே பிரம்மம், ஆன்மாவும் பிரம்மமே.

ஆன்மாவுக்கு நான்கு நிலைகள் (பாதங்கள்) உள்ளன. முதல் நிலை ஸ்தூல திரேகம். இதை அனுபவிப்போன் 'வைஸ்வானரன் எனப்படுகிறான். இவனுக்குத் தலை, கண்கள், காதுகள், மூக்கு, வாய், இருதயம், பாதம் ஆகிய ஏழு அங்கங்கள் (உறுப்புகள்) உண்டு. மேலும் ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிரதான வாயுக்கள் எனப்படும் (பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன்) ஆகிய ஐவகை பிராணன்கள், அந்தக் கரணங்கள் நான்கு ஆக மொத்தம் ஏழு அங்கங்களும், பத்தொன்பது முகங்களும் உண்டு. ஸ்தூல திரேகத்துக்கு (வைஸ்வானரன்) வெளிப்பிரக்ஞை (உணர்வு) மட்டுமே உண்டு. ஸ்தூல திரேகத்துக்குரிய இருப்பிடம் 'ஜாக்கிரம்' எனப்படும் விழிப்பு நிலையாகும்.

(மேலே குறிப்பிட்டுள்ள ஐவகைப் பிரதான வாயுக்கள் அல்லாது நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்ற உபவாயுக்களும் உடற்கூற்று தத்துவத்தில் கூறப் பட்டுள்ளது)

ஆன்மாவுக்கான இரண்டாவது நிலை (பாதம்) சூட்சும திரேகம். சூட்சும திரேகவாசனைகளை அனுபவிப்போன் 'தைஜசன்' எனப்படுகிறான். இந்நிலைக்கு (சூட்சும திரேகத் துக்கு) அக உணர்வுகளாகிய உள்முகப் பிரக்ஞைகள்(உணர்வுகள்) உண்டு. உள்ளுணர்வுகளைக் கொண்ட சூட்சும திரேகத்துக்குரிய இடம் கனவு (ஸ்வப்பனம்) ஆகும்.

ஸ்தூல திரேகத்துக்குரிய ஏழு அங்கங்களும் பத்தொன்பது முகங்களும் சூட்சும சரீரத்துக்கும் உண்டு.

ஆன்மாவுக்குரிய மூன்றாவது நிலை (பாதம்) ஆனந்தம் ஆகும். ஆனந்தத்தை அனுபவிக்கும் காரண தேகம் 'பிராங்ஜன்' எனப்படுகிறான். இந்நிலைக்குரிய அங்கம் சித்தம் (மனம்) ஆகும். உணர்ச்சி மயமான காரண தேகத்தின் இருப்பிடம் (சுஷுப்தி) எனப்படும். உறக்கம் கனவுகள் எதுவும் காணாத தூக்கம். இவனே எல்லாவற்றையும் அறிந்தவன். உயிர்கள் அனைத்தையும் உள்ளிருந்து ஆள்பவன் (ஈஸ்வரன்) அனைத்துக் கும் பிறப்பிடம், தோற்றம், ஒடுக்கமும் ஆவான்.

ஆன்மாவின் நான்காவது நிலை உள் (பிரக்ஞை) உணர்வு இல்லாதவன். வெளிப்பிரக்ஞை இல்லாதவன். இரண்டுக்கும் இடையேயுள்ள பிரக்ஞையும் இல்லாதவன் பிரக்ஞைரூப மானவனும் அன்று. சேதனும் அன்று அசேதனும் அன்று (உணர்வுள்ளவனும் இல்லை. உணர்வு அற்றவனும் இல்லை பார்க்க முடியாதவன், பார்த்து அறிந்து (கிரகித்தல்) கொள்ளவும் முடியாதவன். அடையாளமில்லாதவனும் நினைக்க முடியாதவனும், குறிப்பிட முடியாதவனுமான ஒன்றே ஆன்மாவாகும். அறிவால் மட்டுமே அனுசரித்து (ஆய்ந்து) அறியத்தக்கது எதுவோ அதுவே பிரம்மம். ஆத்மாவும் பிரம்மமும்) ஒன்றே.

ஆத்மா (பிரம்மம்) **ஓம்** என்று ஒரே அட்சரத்தால் குறிக்கப் படும் போது ஓங்காரமாகவும், மாத்திரைகளால் குறிக்கப்படும் போது அகாரம், உகாரம், மகாரம் என்ற நிலைகளை (பாதங் களை) உடையதாகவும் இருக்கிறது.

எல்லாவற்றையும் அடையும் தன்மையுடையதும், முதல் மாத்திரையுமாகிய அகாரம் விழிப்பு நிலையை (ஜாக்கிரதம்) இருப்பிடமாகக் கொண்ட வைஸ்வானரன் எப்போது இவ் வாறாக அறிகிறானோ அப்போது அவன் எல்லா விருப்பங்களை யும் முழுமையாக அடைகிறான். எல்லோருக்கும் முதல்வனா கவும் இருக்கிறான்.

உயர்வாலும், உபயசம்பந்த உடமையினாலும் இரண்டா வது மாத்திரையாகிய உகாரம் (ஸ்வப்பனம்) கனவு நிலையை இருப்பிடமாகக் கொண்டுள்ள தைஜசன், எப்போது இவ்

வாறாக அறிகிறானோ அப்போது அவன் ஞானப் பெருக்கை அடைந்தவனாகவும், அன்றியும் 'உபயசம்பந்தம்' எனப்படும் இரு நிலைகளான சுகதுக்கங்களில் சமபுத்தியுடையவனுமாவான். அவனது வம்சா வழியில் பிரம்ம ஞானம் இல்லாதவன் தோன்ற மாட்டான்.

அளவைக்காட்டும் தன்மையாலும், தன்னிடம் மறைத்துக் கொள்ளும் தன்மையாலும் மூன்றாவது மாத்திரையாகிய மகாரம் (சுஷுப்தி) உறக்க நிலையை இருப்பிடமாகக் கொண்ட 'பிராக்ஜன்' எப்போது இவ்வாறாக அறிகிறானோ அப்போது அவன் அறிவால் உலகம் அனைத்தையும் அளவிடக் கூடியவனாகவும், எல்லாவற்றையும் தன்னிடம் மறைத்துக் கொள்ளக் கூடியவனாகவும் ஆகிறான்.

இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதும், இருநிலை (உபய சம்பந்தம்) அற்றதாகவும், சிவமாயும், பிரபஞ்சம் லயிக்கும் இடமாயும், விவரிக்க முடியாததாகவும் உள்ள நான்காவது நிலை (பாதம்) மாத்திரை எதுவும் இல்லாதது. இதுவே ஓங்காரம். இதுவே ஆத்மா. எவனொருவன் இங்ஙனம் அறிகிறானோ, அவனவன் தன்னால் தானாகிய ஆத்மாவை அடைகிறாஇ.

''தத்'' என்றால் 'அது' என்று பொருள், 'அது' என்றால் நிர்மலமானவன். ஆத்மனுக்குச் சரீரமில்லாததால் நித்யசுத்தன் ஆகிறான். 'விமுக்தா' எனப்படும் விழிப்புநிலை, கனவு நிலை, ஆழ்ந்த தூக்க நிலைகளில் (ஜாக்கிரதம், ஸ்வப்பனம், சுஷுப்தி) இருந்து விடுபட்டு இருப்பதால் அது (தத்) வாகிய பிரம்மம் சுதந்திரமானதாகவும் இருக்கிறது. அகண்டமாக எங்கும் பரம்பொருளாய் வியாபித்துள்ளது.

எல்லாத்திசைகளிலும், மேலும் கீழும் எங்கேயும் பூரணமாக நிறைந்ததும், சச்சிதானந்தப் பொருளாகவும், இரண்டற்றதும், எல்லையற்றதும், என்றும் உள்ளதும், ஒன்றேயானதும் (யத்) எதுவோ, 'தத்' (அது) பிரம்மம் என்று உறுதியாகவும், பூரண நம்பிக்கையுடனும் தெளிந்து தெரிந்து கொள்வது விவேக ஞானமாகும்.

"**சத்**" என்பது இன்றிருந்து நேற்று இல்லாததாகவோ, இன்றும் நேற்றும் இல்லாமலிருந்து நாளைக்கு இருக்கக் கூடியது என்றோ சொல்ல முடியாதது. அது சத்தியப் பொருளாகவும், அன்றும் இன்றும் என்றும் உள்ளதாகவும், உண்மைப் பொருளாக வும் உள்ளதால் நாமும் அந்த உண்மைப் பொருளாகிய பிரம்மத்தை உறுதியாகத் தெரிந்து கொள்ள முடியும் (அவதார யோத்) என்ற பிரம்ம ஞானத்தை உணர்த்தும் வேதவாக்கியமே, **ஓம் தத் சத்.**

ஞானகுரு வாழ்க : குருவே துணை.

---

**எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க!**

**வள்ளல் மலரடி வாழ்க! வாழ்க!**

---

இந்நூலாசிரியர் **அருட்கவி இராம. சாரங்கபாணி** அவர்கள் இயற்றியுள்ள துதியமுதப் பாடல் நூல்களின் விவரங்கள்.



"இரத்தினகிரி அருள்மிகு பாலமுருகன் பாமாலை" இரத்தினகிரி பாலமுருகன் திருக்கோயிலில் தவத்திரு பால முருகனடிமை சுவாமிகள் முன்னிலையில் வெளியிடப்பட்டது. அதனைப் பாராட்டி 23-2-1979 அன்று இரத்தினகிரியில் நடை பெற்ற பாராட்டு விழாவில், தவத்திரு குன்றக்குடி அடிகளார் இராம. சாரங்கபாணி அவர்களுக்கு பொன்னாடைப் போர்த்தி கௌரவித்தார்கள்.

"திருவேற்காடு ஸ்ரீதேவி கருமாரி அம்மன் அந்தாதி" 11-5-1979 அன்று தேவி உபாசகர் தவத்திரு இராமதாசர் அவர்கள் முன்னிலையில் திருவேற்காடு கருமாரி அம்மன் திருக் கோயிலில் வெளியிடப்பட்டது.

"மேல் மருவத்தூர் சுயம்பு அருள்மிகு ஆதிபராசக்தி பாமாலை" சென்னை, மணலி இராமகிருஷ்ணா நகர் வழி பாட்டு மன்றத்தில் 14-4-1984 அன்று வெளியிடப்பட்டது.

"கலவை அருள் திரு கமலக்கண்ணி அம்மன் பாமாலை", கலவை அருள் திரு கமலக்கண்ணி அம்மன் திருக்கோயிலில் 26-1-1986 அன்று வெளியிடப்பட்ட போது, கலவையோகீஸ்வரர் தவத்திரு சுவாமி சச்சிதானந்தா அவர்கள் இராம. சாரங்கபாணி அவர்களுக்கு "அருட்கவி" என்று பட்டமளித்து கௌரவித் தார்கள்.

"அருள்மிகு ஐயப்பன் சரணம் பதினெட்டு" என்ற துதிநூல் 29-12-1990 அன்று சென்னை, டிரஸ்ட்புரம் இறையருள் (திரைப்பட) இயக்குநர் திரு. K. சங்கர் அவர்களது இல்லத்தில் வெளியிடப்பட்டது.